

# சந்துமேனன்

டி. ஸி. சங்கரமேனன்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

# பொருளடக்கம்

# ஆசிரியர் குறிப்பு

சந்துமேனன் பற்றிய இந்நூலை எழுதும் இனிய பணியை என்னிடம் ஒப்படைத்து, என்னைப் பெருமைப் படுத்தியதற்காக சாகித்ய அகடமி நிர்வாகத்தினருக்கு என் நன்றி.

சந்துமேனன் ஓர் எழுத்தாளர்; ஓர் உயர் அதிகாரி; ஆனால் சாதாரணமான ஒரு மனிதர். எவ்வகையில் பார்த்தாலும் அவர் சுவையான, கவர்ச்சிகரமான மனிதர். அவரைப்பற்றிய வரலாறு சிறிது தெரிந்தவுடன் மேற்கொண்டும் பல விவரங்கள் தெரிந்து கொள்ளவேண்டும் என்ற அவா நமக்கு எழுகிறது. ஆனால் இம் முயற்சியில் நாம் ஏமாற்றமே அடைகிறோம். அவர் வாழ்க்கையைப் பற்றிய விவரங்கள் குறைவாகவே உள்ளன. சந்துமேனன் மறைந்து எழுபதாண்டுகளுக்கு மேலாகிவிட்டது. அவரைப் பற்றிய புதுத் தகவல்களைத் தெரிந்து கொள்வதும் இயலாத காரியமாகவே தற்போதைய நிலையில் உள்ளது.

சந்துமேனன் பற்றி முன்னரே வெளியிடப்படாத தகவல் எதையும் இந்த நூல் வெளியிடுவதாகக் கூறமுடியாது. இந்த நூலின் இறுதியில் நூற்குறிப்பு ஒன்று உள்ளது. அக்குறிப்பில் கண்டுள்ள நூல்களே சந்துமேனன் வாழ்க்கை பற்றி, அச்சிடப்பட்ட நூல்கள். அந்நூல்களில் கண்டுள்ள தகவல்களின் உதவி கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது. மேற் குறிப்பிட்ட நூல்களில் இரண்டு நீங்கலாக ஏனையவை அனைத்தும் மலையாளத்தில் எழுதப்பட்டுள்ளன. மலையாளம் தெரிந்தவர்களுக்கு மட்டுமே அவை பயனுள்ளவையாக உள்ளன.

சந்துமேனன் ஒரே ஒரு நாவலைத்தான் முழுமையாக எழுதினார். அதுதான் இந்துலேகா. இரண்டாவது நாவல் சாரதா. மூன்று பாகங்கள் எழுத நினைத்த அவர், ஒரே ஒரு பாகத்தைத் தான் முடித்தார். இந்துலேகா மலையாளத்தில் 1889-ல் வெளி வந்தது; அரசாங்கப் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த திரு ஜான் வில்லோபி பிரான்சிஸ் டூமொர்க் என்பவரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டது. ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க உந்தப்படும் அளவுக்கு ஆங்கிலேயர் ஒருவரை ஈர்த்த முதல் மலையாள நாவல் இந்துலேகாதான். இத்தனை ஆண்டுகளாக வெளிவந்த நூற்றுக்கணக்கான மலையாள நாவல்களில் எந்த நாவலாவது, ஆங்கில மொழியாக்கம் செய்யும் அவாவினைத் தூண்டும் அளவுக்கு ஆங்கிலேயர் அல்லது அந்நியர் ஒருவரை ஈர்த்திருக்குமா என்பது ஐயம்தான். இந்துலேகாவின் ஒரு படியை டூமொர்க்குக்கு அனுப்புகையில் சந்துமேனன் சுவையான கடிதம் ஒன்றை அவருக்கு வரைந்தார். மொழிபெயர்ப்புடன் அக்கடிதமும் வெளியிடப் பட்டுள்ளது. சந்துமேனன் ஆங்கில மொழியாக்கத்தைப் படித்துப் பார்த்ததாகவும் சில மாற்றங்கள் குறித்து ஆலோசனை நல்கியதாகவும் டூமொர்க் தனது முன்னுரையில் நவில்கிறார்.

எனவே, ஆங்கில மொழிபெயர்ப்பு, மூல நாவலின் ஆசிரியரின் ஒப்புதலைப் பெற்றே வெளிவந்தது எனலாம். இந்நூலில், இந்துலேகாவிலிருந்து கொடுக்கப்பட்டுள்ள பகுதிகள் டூமெர்க் மொழிபெயர்ப்பிலிருந்து கொடுக்கப்பட்டவைதான். இந்த மொழிபெயர்ப்பின் இரண்டாவது பதிப்பு 1965-ல் கேரளத்தைச் சேர்ந்த கள்ளிக்கோட்டையில் உள்ள மாத்ருபூமி நூற் பதிப்பகத்திஞல் வெளியிடப்பட்டது.

எனக்குத் தெரிந்தவரையில், சாரதா ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்படவில்லை. எனவே, சந்துமேனன் எழுதி முடித்துள்ளவரையில் கதையின் சுருக்கத்தை இந்நூலில் கொடுப்பது விரும்பத்தக்கது என நான் கருதினேன். இந்நூலில் சாரதாவிலிருந்து கொடுக்கப்பட்டுள்ள பகுதிகள் என்னுல் மலையாளத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்டவை. இந்நூலில் கண்டுள்ள பகுதிகள் எவையேனும் மூலக்கதையிலிருந்து பிறழ்ந்து காணப்படின், தவறு என்னுடையது என்பதை இங்கு ஒப்புக் கொள்கிறேன்.

இந்நூலின் கையெழுத்துப் படிகளை எர்ஞுகுளம், மகாராஜா கல்லூரியைச் சேர்ந்த பேராசியர் பி. பாலகிருஷ்ணநாயர் கவனமாகவும் பொறுமையாகவும் சிரமத்தைப் பார்க்காமலும் சரி பார்த்துக் கொடுத்தார். இந் நூல் பற்றி நாங்கள் விவாதித்தோம். வாசகரின் நோக்கத்தைப் புரிந்து கொள்ள இந்த விவாதம் எனக்குப் பெரிதும் உதவியது. பின்னர், தட்டச்சுப் பிரதிகளை கேரள மாநில உயர்நிநீதி மன்றத்தில் நீதிபதியாகப் பணியாற்றி ஓய்வு பெற்ற திரு. பி. டி. என். மேனன் அவர்களும் கேரள அரசின் தலைமைச் செயலாளராகச் செயலாற்றி ஓய்வு பெற்ற திரு. பி. வி. கே. மேனன் அவர்களும் சரிபார்த்துக் கொடுத்தனர். இந் நூலின் தரத்தினை உயர்த்த, அவர்கள் அளித்த ஆலோசனைகளுக்காக அவர்களுக்கு என் நன்றி.

தேவிநிவாஸ், தேவாரா சாலை, டி. சி. சங்கரமேனன்
கொச்சி-16. 1971, டிசம்பர் 14-ம் தேதி.

இந்துலேகவின், டூமெர்க் மொழிபெயர்ப்பிலிருந்து இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ள பகுதிகள் எப்பக்கத்திலிருந்து எடுக்கப்பட்டுள்ளன என்பதைக் காட்டும் வகையில், ஆங்கில நூலின் பக்கக் குறிப்பீடு கொடுக்கப்பட்டுள்ளது. இந்த இரண்டாவது பதிப்பு கேரளத்தைச் சேர்ந்த கள்ளிக்கோட்டையில் உள்ள மாத்ருபூமி அச்சகம்— நூல் வெளியீட்டு நிலையத்திஞல் வெளியிடப்பட்டது.

# 1. சந்துமேனன்

*நான் அறியா நண்பர்களும் இங்கே எனை*
*நன்கறியும் படி செய்தாய்;*
*எனக்கேதும் சொந்தமிலா இல்லங்கள் தோறும்*
*இடமளித்து அருள் புரிந்தாய்;*
*நான் அறியாத் தொலைவினிலே உள்ள தெல்லாம்*
*என்னருகில் கொண்டு வந்தாய்;*
*முன்பின் அறியாத நொதுமலரை*
*அன்புடைய உடன்பிறப்பாய் ஆக்கிவைத்தாய்!* —தாகூர்

மலையாள மொழியில் தொன்று தொட்டு நிலவிய மரபை மாற்றியமைத்து, புரட்சியை உருவாக்கி, புதுப்பாதை வகுத்தவரின் கதை இது.

கேரள மக்களின் தாய் மொழி மலையாளம். டில்லிக்கு அடுத்த படியாக, இந்தியாவின் பிற மாநிலங்களைக் காட்டிலும் கேரளத்தில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் எண்ணிக்கை அதிகம். இந்தியாவின் 14 தேசிய மொழிகளுள் மலையாளமும் ஒன்று. வடமொழியுடனும் தமிழ் மொழியுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டது. எனினும் தனித்தன்மை வாய்ந்தது. பல நூற்றாண்டுகளாக ஏற்பட்ட பரிணாம வளர்ச்சியின் விளைவே தற்போது வழங்கிவரும் மலையாள மொழியின் வடிவம். மலையாள மொழியின் தந்தை என அழைக்கப்படும் துஞ்சாத்து எழுத்தச்சனால் 17-ம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது. கவிதை, நாடகம், உரைநடை ஆகிய அனைத்திலும் இம்மொழி செழிப்புற்று வளர்ச்சியடைந்துள்ளது.

பிறமொழி இலக்கியங்களோடு மலையாள மொழியின் தரத்தினை அறிவதற்கு இம்மொழிக்கு 1969-ல் அளிக்கப்பட்ட ஞானபீடப் பரிசே சான்றாக உள்ளது. இவ்வுயர்ந்த பரிசு, முதன் முதலாக மகாகவி ஜி. சங்கர குருப்பின் மலையாள கவிதைத் தொகுப்புக்கு வழங்கப்பட்டது. இந்திய மொழிகளில் சிறந்த எழுத்துத் திறமைக்காக வழங்கப்படும் பரிசு இது. இதைத்தவிர ஏராளமான உரைநடை நூல்களும் கவிதைகளும் மலையாள மொழியிலிருந்து ஆங்கிலத்திலும் ஏனைய மொழிகளிலும் மொழி

பெயர்க்கப்பட்டுள்ளன. சிந்தைக்கும் செவிக்குமினிய இம்மொழியின் தன்மையே இம்மொழி பெயர்ப்புகளுக்கு அடிப்படைக் காரணங்களாகும்.

இத்தகைய மொழிபெயர்ப்புகளில் மிகவும் பழமையானது இந்துலேகா என்ற மலையாள நாவலின் ஆங்கில மொழிபெயர்ப்பாகும் (1890). மலையாள மொழியில் இக்கதையை எழுதியவர் ராவ் பகதூர் சந்துமேனன். ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தவர் ஆங்கிலேய சிவில் அதிகாரி ட்யூமெர்க். சந்துமேனன் தொழில் முறையில் எழுத்தாளரல்ல. அவர் ஒரு நீதிபதி. தமது மனைவியையும் நண்பர்களையும் மகிழ்விக்க அவர் விளையாட்டாக இக்கதையை எழுதினார். பொழுது போக்குக்காக எழுதப்பட்ட இக்கதை பலரையும் கவர்ந்தது. ரசிகத்தன்மை மிக்க மொழி வல்லுநர்கள், இந்தக் கதை மலையாள மொழியில் தலைசிறந்ததொரு படைப்பு என்பதை உணர்ந்தனர்.

## II

சந்துமேனனின் தந்தை திரு. எடப்பாடி சந்துநாயரும் (1805-1857) நீதிபதியாவார். இவர் கேலலூர் தேசத்தில் பிறந்தவர். இது பினராயி அம்சத்தின் உட்கோட்டமாகும். இந்த உட்கோட்டம் வட கேரளத்தைச் சேர்ந்த கோட்டயம் வட்டத்தில் அமைந்ததாகும். பள்ளி வசதிகள் இப்பகுதியில் அவ்வளவாக இல்லை. எனினும் சந்துநாயர் மலையாளத்தில் கல்வி பயின்றார். ஓரளவு ஆங்கில மொழி அறிவும் பெற்றார்.

தலைச்சேரி கலெக்டர் அலுவலகத்தில் இவர் அரசுப் பணியில் சேர்ந்தார். இவருடைய உயரிய திறமை கண்ட பெரிய அதிகாரிகள் இவருக்கு விரைவில் பதவி உயர்வு அளித்தனர். 1837-ல் இவர் மாஜிஸ்திரேட் பதவி பெற்றார். மூன்றாண்டுகள் கழித்து இவர் தாசில்தாராகப் பதவி உயர்வு பெற்றார். தாசில்தாராக மலபாரின் பல இடங்களிலும் பணிபுரிந்தார்.

இவர் இருமுறை திருமணம் செய்து கொண்டார். இவரது இரண்டாவது மனைவி பார்வதி அம்மாள் கொடுங்கலூர் அருகே சிட்டேழத்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர். பார்வதி அம்மாள் மூலமாக இவருக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. கடைக்குட்டியாகிய சந்துமேனன் 9-1-1847 அன்று பிறந்தார்.*

---

*திரு. பி. கே. பாலகிருஷ்ணன், சந்துமேனன் பற்றித் தாம் எழுதிய நூலில் சந்துமேனன் 1845-ல் பிறந்தார் என்று கூறியுள்ளார். (1971 பதிப்பு 213-ம் பக்கம்) திரு. பி. கே. பரமேஸ்வரன் நாயர் தாம் எழுதிய ''மலையாள சாஹித்ய சரித்திரம்'' என்னும் நூலில் சந்துமேனன் பிறந்த ஆண்டு 1846

பத்தாண்டுகள் கழித்து, 1857ல் சந்து நாயர் நீரிழிவு நோயி ஞல் இறந்தார். அப்பொழுது அவருக்கு வயது 52.

சந்து நாயர், தலைச்சேரியில் தாசில்தாராக இருந்த போது, வாங்கிய மனையில் வீடு ஒன்றைக் கட்டிஞர். அங்குதான் அவர் நிலையாகத் தங்கிஞர். இந்த வீட்டுக்கு 'ஒய்யாரத்' என்று பெய ரிடப்பட்டது. சந்துமேனன் இங்கு வளர்ந்ததஞல்தான் அவருக்கு ஒய்யாரத் சந்துமேனன் என்று பெயர் வந்தது போலும்.

பத்து வயதில் தந்தையாரை இழந்த சந்து தனது அன்னையின் அன்பு நிழலில் வளர்ந்தார். கொரான் குருக்கள் என்ற அண்டை வீட்டுக்காரரிடம் சிறுவன் சந்துமேனன் தனது அரிச்சுவடியைப் படித்தார். அவரது அடுத்த ஆசிரியர் பண்டித்குஞ்சாம்ப நம்பியார். இவரிடமிருந்து சந்துமேனன் வடமொழிக் கவிதைகள், நாடகம், இலக்கணம் முதலியன பயின்ருர். அதே சமயத்தில் இவர் உள்ளூர் பள்ளி ஒன்றிலும், பின்னர் தலைச்சேரியில் சிவில் நீதிமன்றத்தில் ஆங்கில மொழிபெயர்ப்பாளராக இருந்து படிப்படியாக துணை நீதிபதியாகப் பதவி உயர்வு பெற்ற கே. குஞ்சன் மேனனிடமும் ஆங்கிலம் கற்ருர். தலைச்சேரியில் உள்ள பேசல் மிஷன் பார்சி மெமோரியல் பள்ளியில் உயர்நிலைக் கல்வி பயின்ருர். அங்கு படிக்கும் போது அரசுப் பணிக்கான தேர்வில் மிக உயர்ந்த மதிப்பெண்கள் பெற்றுத் தேறிஞர். இருப்பினும், தனது கல்வி யைத் தொடர்ந்தார். ஆஞல், 1864-ம் ஆண்டில் அவர் மெட்ரிகு லேஷன் படித்துக் கொண்டிருந்த போது அவரது அன்னை உயிர் நீத்தார். அத்துடன் அவரது படிப்பும் நின்றது.

## III

அப்பொழுது சந்துமேனனுக்கு வயது பதினேழு. ஏதாவது ஒரு வேலையில் சேரவேண்டும் என்று அவர் விரும்பிஞர். தலைச்சேரியில்

---

என்று கூறுகிருர். (1958 பதிப்பு பக். 118). திரு. பாலநாராயண அய்யர் எழுதியுள்ள சந்துமேனன் வாழ்க்கை வரலாற்று நூலில் (இது சாராதாவுடன் இணைக்கப்பட்டுள்ளது) சந்துமேனன் பிறந்த ஆண்டு மலையாள ஆண்டிலும் ஆங்கில ஆண்டிலும் கொடுக்கப் பட்டுள்ளது (மலையாள ஆண்டு தனு மாதம் 22-ம் நாள் 1022 (1846)) (1959 N.B.S. பதிப்பு பக். 223) திரு. மூர்கோத் குமரன், சந்துமேனனது நெருங்கிய நண்பர். மேனனது வாழ்க்கை வரலாற்றையும் எழுதியுள்ளார். இவர் மேனன் பிறந்த ஆண்டு 1022 தனுமாதம் 22-ம் நாள் என்று மலையாள ஆண்டை மட்டும் குறிப்பிட்டுள்ளார். இவர் சந்துமேனனது நெருங்கிய நண் பராதலால் இவரது கூற்றே சரி எனக் கொள்ளலாம். இதற்கு நிகரான ஆங்கிலத் தேதி 9-1-1847.

சிறு வழக்குகள் நீதிமன்றத்தில் எழுத்தர் பதவி கேட்டு விண்ணப்பித்துக் கொண்டார். இவரது திறமையைச் சோதித்துப் பார்த்த நீதிபதி டி. ஆர். ஷார்ப், இவரது கூர்த்த மதி நுட்பம் கண்டு பாராட்டி அதே நீதிமன்றத்தில் ஆருவது எழுத்தராக இவரை நியமித்தார்.

மூன்ருண்டுகள் அவர் இங்கு பணிபுரிந்தார். அவரது அருந் திறமை, அப்பொழுது சப்-கலெக்டராகப் பணிபுரிந்து வந்த திரு லோகன் அவர்களின் கவனத்தை ஈர்த்தது. சந்துமேனன் தம்மிடம் பணிபுரிய வேண்டுமென்று அவர் விரும்பிஞர். மேனன் மாற்றப்பட்டு லோகன் அவர்களிடம் பணிபுரியச் சென்ருர். அந்த அலுவலகத்தில் மூன்ருவது எழுத்தராக நியமிக்கப்பட்ட அவர் விரைவில் முதல் எழுத்தராகப் பதவி உயர்வு பெற்றதுமன்றி 1871-ல் கள்ளிக்கோட்டைச் செயலகத்தில் தலைமை முன்சிப் பாகப் பதவி ஏற்ருர். மலபார் மாவட்ட நடைமுறை நூல் தயாரிப்பதில் அவர் திரு. லோகன் அவர்களுக்கு மிகவும் உதவியாக இருந்தார் என்று சொல்லப்படுகிறது. இந் நூல் உயர் தரமான முன் மாதிரியான நூலாகக் கருதப்படுகிறது.

நீதிபதி ஷார்ப் அவர்கள் தாம் முதலில் வேலைக்கு அமர்த்திய இளைஞரின் பணியையும் முன்னேற்றத்தையும் கூர்ந்து கவனித்து வந்திருப்பார் என்றே தோன்றுகிறது. ஏனெனில் அவர் 1872-ல் கள்ளிக்கோட்டையில் மாவட்ட நீதிபதியாகப் பதவியேற்றபோது அவர் சந்துமேனனை அழைத்து சிவில் நீதிமன்றத்தில் தலைமை எழுத்தராக நியமித்தார்.

1875-ம் ஆண்டு, சந்துமேனனின் வாழ்க்கையில் ஒரு திருப்பமாக அமைந்தது. அவரது எழுத்தர் பணி வாழ்க்கை முடிவடைந்தது. பாராட்டத் தக்கவகையில் இவர் பணி அமைந்திருந்தமையால் மனநிறைவுற்ற அரசு, இவரைப் பட்டாம்பியில் தற்காலிக முனிசீப்பாக நியமித்தது. தாமதமின்றி அவரை அப்பதவியில் நிலையாகவும் ஆக்கியது. முனிசீப்பாக அவர் மாஞ்சேரி, பாலக்காடு, ஒத்தப்பாலம், கள்ளிக்கோட்டை போன்ற பல இடங்களில் பணிபுரிந்தார். 1886 முதல் 1892 வரை அவர் பரப்பனங்காடியில் மாவட்ட முனிசீப்பாகப் பணியாற்றிஞர். அங்கு தான் 1790-ல் அவரது தலைசிறந்த இந்துலேகா வெளியாகியது. அவர் எங்கு பணிபுரிந்தபோதிலும், மேலதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற்ருர். திரு. லோகன் அவர்களும் திரு. ஷார்ப் அவர்களும் இவரது பணிக்காகப் போட்டியிட்டனர் என்று கூட ஒரு வகையில் நாம் சொல்லலாம். டுமெர்க், டேவிட்ஸ் போன்ற ஏனையோர் இவரது அறிவுசால் பணியைப் பாராட்டினர். அவர்கள் மேனனை விட, பணியில் மிகவும் மூத்தவர்கள் என்பதையும் அவர்கள் ஆங்கிலேயர்கள் என்பதையும் அந்தக் காலம் ஆங்கிலேயர்கள்

ஏகாதிபத்தியம் செலுத்திவந்த காலம் என்பதையும் நாம் நினைவு கூர வேண்டும். மேனன் மற்றவர்களைவிடத் திறமையான குமாஸ்தாவாக இருந்தார் என்பதற்காகவோ, மேலதிகாரிகள் சொன்னதை மற்றவர்களை விட விரைவாகவும் திறமையாகவும் கவனமாகவும் எழுதி வைத்துக் கொண்டார் என்பதற்காகவோ அந்த ஆங்கிலேயர்கள் இவரை மதிக்கவில்லை. எதையும் கூர்ந்து கவனித்துச் செயலாற்றவல்ல இவரது திறன், ஆழ்ந்த அறிவு, கூர்த்த மதிநுட்பம், எந்த ஒரு பிரச்சினையையும் மற்றவர்களைச் சார்ந்து அணுகாமல் தனக்கே உரிய தனித்தன்மையில் ஆய்வு செய்யும் ஆற்றல், எதையும் எளிதாக எடுத்துரைக்கும் சீர்மை ஆகிய தகைசால் பண்புகளுடன் கூடிய ஆர்வம் மிக்க அறிவாளி என்ற வகையிலேயே இவரை அறிந்து பாராட்டியிருக்கவேண்டும். மாவட்ட முனிசீப்பாகச் செயலாற்றுகையில் மலபாரின் சட்டத்தையும் மரபையும் நன்கு அறிந்தவர், கடமையைச் செவ்வையாகச் செய்பவர், சிறந்த அறிவாளி, என்று அனைவராலும் பாராட்டப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில், 1890-ல் மலபார் திருமண ஆணைக்குழு (Malabar Marriage Commission) நியமிக்கப்பட்டபோது, சர். டி. முத்துசாமி அய்யர், சர். ஸி. சங்கரன் நாயர் போன்ற தலைசிறந்த அறிஞர்களுக்குச் சரிசமமாக உறுப்பினராக நியமிக்கப் பட்டார். மருமக்கள் தாயம் திருமண முறையை நன்கு ஆய்ந்து அந்த முறையில் மாற்றங்கள் தேவைப்படின், அம்மாற்றங்கள் பற்றி ஆலோசனை நல்குமாறு அந்த ஆணைக்குழு பணிக்கப்பட்டது. 1891-ல் அந்த ஆணைக்குழு தனது அறிக்கையை அளித்தது. உறுப்பினர்களில் பெரும்பாலோர் இம்முறையில் மாற்றங்கள் தேவை எனக் கருத்துத் தெரிவித்திருந்தனர். ஆனால் சந்து மேனன் அதற்கு மாறான கருத்தை எழுதி வைத்திருந்தார். தொன்றுதொட்டு இருந்து வருகிற மரபுகள், பழக்க வழக்கங்களை மாற்றுவதை அவர் எதிர்த்தார். தமது கருத்துக்களை விளக்கமாகவும் எழுதிவைத்தார். மருமக்கள் தாயம் குடும்பங்களில் திருமணமுறை பற்றி விரிவாக விளக்கியதுடன் மட்டுமின்றி அந்த நெறிமுறை தலைமுறை தலைமுறையாக வழக்கில் இருந்து வருவதனால் புனிதத் தன்மை அடைந்து விட்டது என்றும் அம்முறையில் மாற்றம் காண்பது தேவையில்லை; அது விரும்பத்தக்கதுமில்லை என்றும் சட்டப்படி அதற்குரிய ஒப்புதலை அளித்து சமுதாயத்தில் அதன் நிலையை ஏற்றுக் கொள்வதே இது குறித்துச் செய்ய வேண்டிய சீர்திருத்தம் என்றும் ஆணித்தரமாகத் தமது கருத்துக்களை எழுதி வைத்தார். சர். சங்கரன் நாயரும், சந்து மேனனும் வெவ்வேறான மாறுபட்ட கருத்துக்களை எழுதி வைத்திருந்தனர். ஆனால் சந்துமேனனுக்கும் முத்துசாமி அய்யருக்கும் கருத்து ஒற்றுமை இருந்தது. சந்துமேனன் எழுதி

வைத்த கருத்து வேற்றுமைக் குறிப்பு பிற்காலத்தில் பிரபலமாகி விட்டது. பிரச்சினைகளைப் பிறர்பால் சாராமல், தமக்கே உரிய முறையில் தனித்து அணுகும் அவரது திறமைக்கும், அவரது உறுதியான நம்பிக்கைகளுக்கும் இது ஒன்றே போதுமான சான்ருகும். நடைமுறையில் உள்ளதை மாற்றவேண்டாம் என்றும், அதற்குப் பதிலாக அந்நடைமுறையைச் சட்டப்படி முறையாக்கி ஏற்பளித்தலே சிறந்தது என்றும் அப்பொழுது இருந்த சென்னை அரசு பரிவுரை செய்தது குறிப்பிடத்தக்கது.*

இவரது ஆற்றலை நன்குணர்ந்த அரசு 1892-ஆம் ஆண்டின் பிற்பகுதியில் அவரைத் திருநெல்வேலியில் துணை நீதிபதியாக நியமித்தது. இங்குதான் இவரது இரண்டாவது நாவலாகிய சாரதாவை எழுதத் தொடங்கினர். ஆனல் இதனை முடிக்க இயலவில்லை. சில மாதங்கள் கழித்து 1893-ல் அவரது நியமனம் நிலையாக்கப் பட்டு அவர் மங்களூருக்கு மாற்றப்பட்டார். அங்கு இவர் வெகு நாட்கள் இல்லை. அதற்குள் பக்கவாத நோயினுல் பீடிக்கப்பட்டு, விடுப்பில் செல்ல நேர்ந்தது. இக்கால அளவில் ''சாரதா'' பற்றிய எழுத்து வேலையும் தடைப்பட்டது. 1896-ல் மீண்டும் பணியில் சேர்ந்த போது கள்ளிக்கோட்டைக்கு மாற்றப் பட்டார்.

இந்துலேகா, சாரதா ஆகிய இரண்டு படைப்புகளே மலையாள இலக்கிய வரலராற்றில் சந்து மேனனுக்குப் பேரும் புகழும் ஈட்டித் தந்தன. ஆயினும், இவை இரண்டு மட்டுமே அவரது இலக்கியப் படைப்புகள் அல்ல. கேரள வர்மா வலிய கோயில் தம்பிரான் கவிதைகள் என்ருல் இவருக்கு உயிர். இந்த ஈடு பாட்டின் காரணமாக கேரள காளிதாசன் என அழைக்கப்பட்ட தம்பிரானின் மாயூர சந்தேஷம் என்ற கவிதைத் தொகுப்பை முகவுரை ஒன்றுடன் தம் செலவில் அச்சிட்டு, தமது நண்பர்களுக்கு வழங்கினர். குஞ்சி சங்கரன் நம்பியார் படைப்பான '' நாரி சரிதம்'' என்ற கவிதைத் தொகுப்பையும் தம் செலவில் அச்சிட்டு அதற்கு முன்னுரையும் எழுதினர். தாம் செய்தித் தாள்களில் கட்டுரை எதையும் எழுதியதில்லை என்று அவரே ஒப்புக் கொண்டுள்ளார். ''பண்டைக் காலத்தில் நீதி நிர்வாகம்'' என்பது பற்றி இவர் ஆங்கிலத்தில் ஆற்றிய உரையும் சர். டி. முத்துசாமி அய்யர் நினைவுக் குழுவின் ஆதரவில் இவர் ஆங்கிலத்தில் ஆற்றிய மற்ருெரு உரையும் நூல் வடிவில் வெளியிடப் பட்டுள்ளன. இத்தகவல் திரு. பி. கே. பரமேசுவரன் நாயர் எழுதியுள்ள ''தற்கால மலையாள இலக்கியம்'' என்ற நூலிலிருந்து நமக்குக் கிடைத்துள்ளது.

---

*இந்நூலின் இறுதியில் இதன் பகுதியைக் காணலாம்.

சந்து மேனன் மிகத் திறமை வாய்ந்த, ஆற்றல் நிறைந்த அதிகாரி என்பதை உயர் அதிகாரிகள் அறிந்திருந்தனர். ஒவ்வொரு நிலை, பதவி உயர்விலும் தமது திறமையை அவர் மெய்ப்பித்தார். இந்துலேகா, சாரதா என்ற இரு படைப்புகளாலும் மலையாள இலக்கிய வளர்ச்சிக்கும் அதன் வாயிலாக இந்திய நாட்டிற்கும் அவர் ஆற்றிய தொண்டை விக்டோரியா ராணியார் பாராட்டிப் பேசியதாக இங்கிலாந்து பிரதமர் W. E. க்ளாட்ஸ்டன் சந்து மேனனுக்குக் கடிதம் எழுதினார் என்று சொல்லப்படுகிறது. 1897-ல் இந்திய அரசு அவருக்கு ராவ் பகதூர் பட்டம் அளித்தது. 1898-ல் சென்னைப் பல்கலைக் கழகம் இவரது தகுதியையும் ஆற்றலையும் திறமையையும் ஏற்றுக் கொண்டு சட்டப்படிப்புக்கான தேர்வாளராக இவரை நியமித்தது மட்டுமின்றி பல்கலைக் கழக உறுப்பினராகவும் ஏற்றுக் கொண்டது.

மேனனது முடிவு எவரும் எதிர்பாராத வகையில் ஏற்பட்டது. 1899-ம் ஆண்டு செப்டம்பர் 7-ம் நாள் அன்று ஒரு வியாழக் கிழமை பிற்பகல், வழக்கத்தைவிட சிறிது முன்னதாகவே நீதி மன்றத்திலிருந்து திரும்பிவிட்டார். களைப்பாற ஏதோ அருந்தி விட்டுச் சாய்வு நாற்காலியில் இளைப்பாறிக் கொண்டிருந்தார். அவரது நண்பர்களில் ஒருவரான—அவர் வழக்குரைஞர்—அவரைப் பார்க்க வந்திருந்தார். சட்டம் பற்றி அவர்கள் விவாதித்துக் கொண்டிருந்தனர். திடீரென மேனனுக்கு உடல் நலிவு ஏற்பட்டது. தனது படுக்கையறையை நோக்கி இரண்டு அடிகள் வைத்திருப்பார். கால்கள் தள்ளாடின. அருகிலிருந்த படுக்கையொன்றில் அவர் சாய்ந்தார். அவ்வளவுதான். அவரது ஆவி பிரிந்தது. அந்த அரும்பெரும் அறிஞரின் ஆத்மா இந்த உலகத்திலிருந்து விடைபெற்றுச் சென்றது.

## IV

அவருடைய எதிர்பாரா மறைவினால் அவரது மனைவியும் ஐந்து மக்களும் ஒரு மகளும் ஆறுத்துயருற்றனர். அவரது மனைவி லட்சுமிகுட்டி அம்மா கஞ்சோலி இல்லத்தைச் சேர்ந்தவர். இவருக்குத் திருமணமானபோது இவருக்கு வயது 13. மேனனுக்கு 25 வயது. இவர்கள் திருமணம் 1872-ல் நடைபெற்றது. லட்சுமி குட்டி அம்மாளின் தாய் லட்சுமி அம்மா கஞ்சோலி இல்லத்தைச் சேர்ந்தவர். தந்தை வரசல் இல்லத்தைச் சேர்ந்த கிருஷ்ண மேனன், மத்திய கேரளாவில் இரிஞ்சாலகூடாவில் உள்ள கூடல் மாணிக்கம் கோவிலின் ஓர் அதிகாரியாவார். லட்சுமிகுட்டி அம்மா இலக்கியத்தில் நல்ல ஈடுபாடு உள்ளவர். இசையில் தேர்ச்சி பெற்றவர். இவர் தமது 67வது வயதில் இயற்கை எய்தினார்.

தமது கணவரிடம் மிகுந்த பற்றுள்ளவர். தமது கணவரின் இலக்கிய ஈடுபாட்டினையும் அருந் திறனையும் நன்கு அறிந்து வைத்திருந்தார். இவர் அளித்த ஊக்கம், உற்சாகத்தின் விளைவாகத் தான் இனிமை சொட்டும் இந்துலேகா உருவாகியது என்பதை மலையாள இலக்கிய ரசிகர்கள் ஒரு நாளும் மறக்க முடியாது. ஆங்கில வடிவமைப்பு முறையில் மலையாள மொழியில் எழுதப் பட்ட நாவலைத் தாம் படிக்க விரும்புவதாகத் தமது மனைவி அடிக்கடி தெரிவித்த அவாவின் காரணமாகவே இந்துலேகாவைத் தாம் எழுதத் துணிந்ததாக, இந்துலேகாவை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த டூமொர்க் அவர்களுக்கு எழுதிய கடிதத்தில் மேனன் குறிப்பிட்டுள்ளார்.

## V

இவர் தமது குடும்பத்தினருடனும் நண்பர்களுடனும் எப்பொழுதும் மகிழ்ச்சியாகவே இருந்தார். இனிய பண்புகளும் கவர்ச்சிகரமான தோற்றமும் கொண்ட இவர், ஆறடி உயரமும் கம்பீரமான உருவமும் கொண்டவர். இவரது உருவப் படத்தில் வெள்ளைத் தலைப்பாகை யணிந்து காணப்படுகிறார். இது இவரது உயரத்தை மேலும் ஆறு அங்குலம் அதிகமாக்கிக் காட்டுகிறது. திறந்த 'கோட்'; ஆனால் 'டை' இல்லை. இவரது உடையில் பொருந்தாத வகையில் இருந்தது மற்றொன்று. கோட் பித்தான்களைப் போட்டுக் கொண்ட பிறகும் குஞ்சம் வைத்த கயிறு கொண்டு இடுப்பைச் சுற்றிக் கட்டியிருந்தார். கால் சட்டைக்குத் தோற் கச்சையும் பட்டைகளும் அணிந்து கொள்பவர், சோர்வு மனப்பான்மை கொண்டவராக இருப்பார் என்று அறிஞர் ஒருவர் சொல்லியுள்ளார். இங்கே சந்துமேனன் தமது கோட்டை மூட பித்தான்களைப் பயன்படுத்தியதோடு இடுப்புக் கச்சையையும் அணிந்திருந்தது விந்தை. ஏனெனில் 'கோட்' என்பது காற் சட்டையைக் காட்டிலும் தவிர்க்கக்கூடிய ஆடையாகும். ஆனால் மேனன் சோர்வு மனப்பான்மை கொண்டவரல்ல. நிழற்படத்தில் அவரது கண்களும் உதடுகளும் அவர் கடுமையானவர், உறுதியோடு இருப்பவர் என்பதைக் காட்டலாம். ஆனால் இந்தக் கடுமையான தோற்றத்தில் மறைந்திருந்த நகைச்சுவை, சுவையான வேடிக்கைப் பேச்சைக் கேட்டதும் வெடித்து வெளிவந்தது. அப்பேச்சு அவருக்கு எதிராக இருந்தாலும் கூட அவர் அதனை ரசித்தார். நல்ல நகைச்சுவை இருந்திராவிடின் இந்துலேகா போன்ற மகிழ்ச்சி மிகுந்த கதையை எழுதியிருக்க முடியாது. இருபொருள்படப் பேசுவதில் அவருக்கிருந்த திறமை காரணமாக அவர் அளித்த மறுமொழிகளில் சில, மலையாள மொழி தெரிந்தவருக்கே நன்கு

விளங்கும். ஒரு முறை அவரது நண்பர் ஒருவர் அவரது மகளைப் பற்றி வினவினார். அதற்கு மேனன், தம் மகளைப் ''பாட்டத்திற்குக்'' கொடுத்து விட்டதாகச் சொன்னார். பாட்டத்தில் இல்லத்தைச் சேர்ந்த நீதிபதி நாராயண மேனனுக்குச் சந்துமேனனின் மகள் திருமணம் செய்து கொடுக்கப்பட்டிருந்தார். மலையாள மொழியில் பாட்டம் என்றால் குத்தகை அல்லது வாடகை என்று பொருள்படும். பாட்டத்தில் இல்லத்தைச் சேர்ந்த ஒருவருக்குத் தம் மகளைக் கொடுத்திருப்பதாகச் சொன்னாரா? அல்லது வாடகைக்குக் கொடுத்துள்ளதாகச் சொன்னாரா? இதை உங்கள் கற்பனைக்கே விட்டுவிடுகிறேன்.

ஆனால் அவரது நகைச்சுவை சிலேடையில் அமையாத உதாரணங்களும் உள. இவற்றை மலையாளம் அறியாதவர்களும் எளிதில் புரிந்து கொள்ளமுடியும். சந்துமேனன் நல்ல உயரமும் பருமனும் உள்ளவர் என்பது நமக்குத் தெரியும். பெரிய தொந்தியும் அவருக்கு இருந்தது. ஒரு முறை அவருக்குக் 'கோட்' தைப்பதற்கு அளவு எடுப்பதற்காகத் தையற்கடையிலிருந்து பையன் ஒருவன் அவர் வீட்டுக்கு வந்தான். மேனனது தொந்தி பெரியதாக இருந்ததால் அவனால் அளவு எடுக்க முடியவில்லை. எனவே அவன் மேனனுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தான். ''ஐயா தயவு செய்து நாடாவின் இம்முனையைப் பிடித்துக்கொள்ளுங்கள். நான் நாடாவின் மற்றொரு முனையுடன் உங்களைச் சுற்றி வருகிறேன்'' என்றான். நகைச்சுவையற்ற ஒருவராக இருந்தால் அந்தப் பையனை அங்கேயே அறைந்திருப்பார். ஆனால் சந்துமேனன் நகைச்சுவை நிரம்பியவர். பையன் சூதுவாதில்லாது பேசியதை அவர் புரிந்து கொண்டார். வயிறு குலுங்கச் சிரித்தார். அத்துடன் பையனுக்குப் பரிசாக ஒரு ரூபாயும் கொடுத்தார்.

நிதி உதவி கேட்டு அவரை அணுகிய அந்தணர் ஒருவருக்கு அத்தகைய நற்பேறு கிடைக்கவில்லை. தான் ஒரு பாடகர் என்றும் பிடில் வாசிக்கத் தெரிந்தவர் என்றும் அவர் மேனனிடம் கூறினார். ''எங்கே பாடுங்கள் கேட்கலாம்'' என்றார் மேனன். பாடகரும் இரண்டு மூன்று பாட்டுக்கள் பாடினார். திடீரென சந்துமேனன் ''நிறுத்துங்கள்; இப்பொழுது வயலின் வாசியுங்கள்'' என்றார். பாடகர் பிடிலைச் சுருதி சேர்த்துக் கொண்டிருக்கையில் அவரை நிறுத்தும்படி மேனன் சொன்னார். பின்னர் பாடகரது சொந்த ஊர் யாது என்று கேட்டார். அந்தப் பாடகரும் ஏதோ ஒரு ஊரைக் குறிப்பிட்டார். ''உங்கள் ஊருக்கு ரயில் டிக்கட் எவ்வளவு காசு'' என்று மேனன் அடுத்தபடியாகக் கேட்டார். ''பதினான்கு அணா'' என்று பதில் வந்தது. மேனன் தனது வேலைக்காரரைக் கூப்பிட்டு ''இந்தப் பிராமணனுக்கு பதினான்கு அணா கொடுத்தனுப்பு'' என்று சொன்னார். உள்ளே சென்ற

வேலைக்காரர் விரைவில் வெளிவந்து சில்லறையாக இல்லை என்று சொன்னார். ''அப்படியா, ஒரு ரூபாயை எடுத்துக் கொண்டு இந்தப் பாடகருடன் போ. ரூபாயை மாற்றி சரியாகப் பதினான்கு அணா பாடகருக்குக் கொடுத்துவிட்டு வா'' என்றார் மேனன். பாடகரின் திறமைக்குப் பதினான்கு அணா போதும். மேற்கொண்டு ஒரு காசுகூடப் பெறத் தகுதி கிடையாது என்று மதிப்பிட்ட மேனனின் நகைச்சுவை இதிலிருந்து வெளிப்படும்.

இந்த நகைச்சுவை சில சமயங்களில் துணிச்சலுடன் வெளிப் பட்டது. மேளம் அடிப்பவர் வழக்கை, மேனன் விசாரித்தமுறை பிரபலமாகிவிட்டது. அது பரபரப்பான வழக்காகக் கருதப்பட் டது. அதற்குக் காரணம் அவ்வழக்கின் விவரங்களல்ல. ஆனால் அவ்வழக்கை மேனன் விசாரித்த முறையே அது பிரபலமான தற்குக் காரணமாகும். கள்ளிக்கோட்டையில் இவர் துணை நீதிபதியாகப் பணியாற்றிபோது, திரு டேவிட்ஸ் என்பவர் மாவட்ட நீதிபதியாகச் செயலாற்றி வந்தார். இவர் மிகவும் கண் டிப்பானவர். தாம் நீதி விசாரணை செய்கையில் நீதி மன்றத்தில் ஊசி விழுந்தால் கூடச் சத்தம் கேட்கக்கூடிய அளவுக்கு அமைதி நிலவவேண்டும் என்பதில் அவர் கண்டிப்பாக இருந்தார். நீதி மன்றத்தின் மதிப்பும் கௌரவமும் எந்நிலையிலும் காக்கப்பட வேண்டும் என்பது அவரது உறுதியான எண்ணம். அவருக்கு முன்கோபம் அதிகம். எனவே அவரது ஊழியர்களுக்கு அவரிடம் பயம். இவருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும் என்று எண்ணிய மேனன், தக்க தருணத்திற்காகக் காத்திருந்தார். ஒரு நாள் சந்து மேனன் நீதிமன்றத்தில் மேளக்காரர் வழக்கு ஒன்று வந்தது. திருவிழாவில் மேளம் வாசிக்கும்படித் தாம் அழைக்கப்பட்ட தாகவும் தாம் எங்கு மேளம் வாசித்தாலும் தமக்கு முதல்தர மேளக்காரருக்கான கட்டணமே கொடுக்கப்பட்டது என்றும் திரு விழாக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்தவர்கள் இரண்டாந்தர மேளக் காரருக்கான கட்டணத்தையே தந்தார்கள் என்றும் அவர் புகார் செய்தார். மேனன் மூளை சுறுசுறுப்பாகச் செயல்பட்டது. மேளக் காரருக்கு நீதி வழங்க வேண்டும். அதே நேரத்தில் டேவிட்ஸ் துரைக்கு ஒரு பாடமும் கற்பிக்க வேண்டும். வழக்கு விசாரணையை அமைதியாக முடித்தார். பின்னர் மேளக்காரரை ஒரு முழு தனி ஆவர்த்தனம் வாசிக்குமாறு கட்டளையிட்டார. பிறகு கேட்க வேண்டுமா? நீதிமன்றத்தில் நிலவியிருந்த அமைதியைக் கிழித் துக்கொண்டு மேளக்காரரின் ஆவர்த்தனம் ஒலித்தது. டேவிட்ஸ் துரையின் வேலை தடைபட்டது. ''இவ்வழக்கில் தீர்ப்பு அளிப் பதற்கு முன்னர் அவரது திறமையைச் சோதித்துப்பார்க்க விரும் பினேன்'' என்று மேனன் டேவிட்ஸ் துரைக்கு விளக்கம் கொடுத் தார். இதைக் கேட்டதும் டேவிட்ஸ் துரைக்குச் சிரிப்புத் தாங்க

முடியவில்லை. ''நீங்கள் சாதாரணமான நீதிபதி இல்லை ஐயா''. என்றார் அவர் மேனனைப் பார்த்து.

இந்த நிகழ்ச்சியை நன்கு சிந்தித்துப் பார்த்தால்தான் அதன் சிறப்பைப் புரிந்து கொள்ள முடியும். முன்கோபியான ஐரோப்பிய நீதிபதி ஒருவர்; வழக்கு விசாரிக்கையில் முகத்தைக் கடுவன் பூனையாக வைத்துக் கொண்டு நீதிமன்றத்தின் கௌரவத்தைக் காப்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தார். நீதிமன்றத்தில் ஊசி விழுந்தால் கூடச் சப்தம் கேட்க வேண்டும் என்று விரும்பினார். இவருக்கு அடுத்த அறையில் இந்திய நீதிபதி தமக்கு மேலதிகாரியான ஐரோப்பிய நீதிபதியின் பணிக்குக் குந்தகம் ஏற்படும் என்ற கவலை சிறிதும் இல்லாமல் செவிபிளக்கும் வண்ணம், மேளம் வாசிக்கச் சொன்னாரென்றால், அதுவும் வெள்ளைக்காரர்கள் கொடிகட்டிப் பறந்த நாட்களிலே அப்படிச் சொன்னாரென்றால் அவருக்கு எந்த அளவுக்குத் துணிவு இருந்திருக்க வேண்டும்; தன் விருப்பப்படி நடக்கும் உறுதி இருந்திருக்க வேண்டும் என்பது விளங்கும். மேலதிகாரிகளுக்கு ''சலாம்'' போட்டோ, தாளம் அடித்தோ அவர் பதவி உயர்வு பெறவில்லை என்பது இதிலிருந்து தெற்றெனை விளங்கும்.

மற்றொரு சம்பவம். செல்வக் குடும்பம் ஒன்றிலே விருந்து ஒன்று நடந்து கொண்டிருந்தது. அப்போது அதிகாரிகளிடையே லஞ்ச ஊழல் நிலவுவதைப் பற்றிப் பேச்சு திரும்பியது. ''எல்லா அதிகாரிகளும் லஞ்ச ஊழல் பேர்வழிகள்தாம்'' என்றார் ஒருவர். அவ்வளவுதான். தலைக்கு ஒரு பேச்சாக பேசத் தொடங்கினர். இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த மேனன், திடீரென எழுந்து நின்றார். ஆறடி உயரத்திற்கு நிமிர்ந்து நின்ற அவர் உரக்கச் சொன்னார் ''லஞ்சம் வாங்காத ஒருவர் இங்கே இருக்கிறார். அவர்தான் ஒய்யாரச் சந்து'' என்று சொல்லி சட்டென அமர்ந்து தம்முன் வைத்திருந்த பலகாரத்தை நிதானமாக, ருசி பார்த்துச் சாப்பிடத் தொடங்கினார். மற்ற விருந்தினர்கள் ஒரு சில விநாடிகள் திகைத்து நின்றனர். ஒன்றுமே நடவாதது போல மேனன் உணவை ருசிபார்த்து அனுபவித்து உண்பதை அவர்கள் கண்டனர். அச்சம்பவத்தின் நகைச்சுவை அவர்கள் மூளையில் உறைக்கச் சிறிது நேரம் பிடித்தது. அதன் பின்னர் அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தனர். அவர்கள் தமது நகைச்சுவையைப் புரிந்து கொண்டவுடன், மேனன், விஷமச் சிரிப்புடன் கண்சிமிட்டியிருப்பார் இல்லையா?

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் பழக்கம் மேனனுக்கில்லை. வெளிப்படையான பேச்சு அவருக்கு எப்பொழுதும் பிடிக்கும். மற்றவர்களிடமும் அதையே விரும்பினார். ஒரு முறை சந்துமேனனைப் பார்க்க இளைஞர் ஒருவர் வந்திருந்தார். பார்ப்

பதற்கு கௌரவமாகத் தோற்றமளித்த அவர், நன்கு உடை உடுத்தியுமிருந்தார். ஆனால் மேனனுக்கு அறவே முன்பின் தெரியாதவர். அவரை அமரும்படி மேனன் சொன்னார். வேறு ஒரு இளைஞராக இருந்தால் தயங்கியிருப்பார். ஆனால் அந்த இளைஞர் தயக்கமின்றி அமர்ந்து கொண்டார். அவர் வந்த காரணத்தை மேனன் வினவினார். ''நடத்தைச் சான்றிதழ் ஒன்று எனக்கு அருள் கூர்ந்து அளிக்க முடியுமா'' என்று அந்த இளைஞர் நேரடியாகக் கேட்டார். முற்றிலும் முன்பின் தெரியாத ஒருவர் இத்தகைய வேண்டுகோள் விடுத்ததற்காக மேனனுக்குக் கோபம் வந்திருக்க வேண்டும். ஆணவமான நடத்தை என்று மேனன் நினைத்திருக்க வேண்டும். ஆனால் அந்த இளைஞருடன் அமைதியாக உரையாடி, அவசியமான தகவல்களைப் பெற்று நற்சான்றிதழ் ஒன்றை அவருக்கு அளித்தார். முன்பின் தெரியாத ஒருவருக்கு நற்சான்றிதழ் அளிக்கலாமா என்று மேனன் அவர்களின் நண்பர் ஒருவர் கேட்டார். ''அந்த இளைஞர் ஒளிவுமறைவாகப் பேசவில்லை. நான் அவருக்கு நற்சான்றிதழ் அளிப்பேன் என்ற முழு நம்பிக்கையில் அவர் என்னிடம் வந்தார். அவருக்கு ஏமாற்றமளிக்க நான் விரும்பவில்லை'' என்று மேனன் விடையளித்தார்.

குற்றம் கண்டுபிடிக்கும் மனப்பான்மையுடைய நீதிபதி டேவிட்ஸ் துரைக்கும், பகட்டான பாடகருக்கும் பாடம் கற்பித்தார். ஆனால் கள்ளம் கபடற்ற தையற்காரப் பையனிடம் பரந்த மனத்துடன் நடந்து கொண்டார். நற்சான்றிதழ் வேண்டுமென்று வெளிப்படையாகக் கேட்ட இளைஞனிடம் கருணையுடன் நடந்து கொண்டார். அவரது வெளிப்படையான பேச்சும், நகைச்சுவையும், மற்ற இலக்கிய வெளியீடுகள் பற்றி அவர் தெரிவித்த கருத்துக்களிலும் வெளியாயின. சாராதாவில் ''வக்கீல் சங்கம்'' என்ற அத்தியாயம் ஒன்று வருகிறது. இச்சங்கத்தில் வழக்குரைஞர்கள் கூடுகின்றனர்; பல்வேறு பொருள் பற்றி விவாதிக்கின்றனர். தமது கருத்துக்களைத் தெரிவிக்கின்றனர். பகட்டான தலைப்புக்களுடன் கூடிய நாவல்களையும், உணர்ச்சி இல்லாத நாவல்களையும், சிக்கல் நிறைந்த கதையை விவரித்துப் படிப்பவரைக் குழப்பும் நாவல்களையும் இந்த வக்கீல்கள் வாயிலாக அவர் ''கிண்டல்'' செய்தார். 'அக்பர்' என்ற தலைப்பில் டச்சு மொழியில் எழுதப்பட்ட நாவல், ஆங்கில மொழியாக்கம் செய்யப்பட்டிருந்தது. அதனைக் கேரளவர்மா வலிய கோயில் தம்புரான் மலையாளத்தில் மொழி பெயர்த்திருந்தார். இந்த மலையாள மொழி பெயர்ப்பு அவரது கேலிக்குள்ளாகியது. இந் நூல் பேரரசர் அக்பர் பற்றியதால் அதனுடைய மதிப்பு உயரவேண்டும் என்ற எண்ணத்தினால் போலும் கேரளவர்மா மலையாள மொழி ஆக்கத்தில் வடமொழியை மிக அதிகமாகக் கலந்திருந்தார். இது

பாமரமனிதனுக்கு எளிதில் புரியாது. நாவல் என்பது சிந்தையைக் கவரும்படியாகவும் இருக்கவேண்டும் என்பது மேனனுடைய கருத்து. கேரளவர்மாவின் நூலைப் பிரித்து ஏதாவது ஒரு சில வரிகளை நண்பர்க்குப் படித்துக் காண்பிப்பார். ''அட! இந்தச் சொல்லுக்கு என்ன பொருள் விளங்கவில்லையே?'' என்று சொல்லிச் சிரிப்பாராம். மலையாள மொழியில் உள்ள அக்பர் என்ற நூலைப் படித்து, புரிந்து கொள்ள வேண்டுமென்றால் அந்த நூலின் ஒவ்வொரு நகலுடனும், சமஸ்கிருத-மலையாள அகராதி ஒன்று அனுப்பப்படவேண்டும் என்று அவர் சொல்லுவதுண்டு. அப்போது கேரளவர்மா, கேரளாவின் சாகித்ய சக்ரவர்த்தியாக விளங்கியவர். கேரள வர்மாவின் கவிதைகள் என்றால் மேனனுக்குக் கொள்ளை ஆசை. குறிப்பாக ''மாயூர சந்தேஷம்'' அவருக்கு மிகவும் பிடித்தமான நூல். மாலையில் ஓய்வெடுத்துக் கொள்கையில் மயூர சந்தேஷத்திலிருந்தும் ஏனைய கவிதைகளிலிருந்தும் அவருக்குப் பிடித்தமான வரிகளைச் சொல்லிச் சொல்லி மகிழ்வாராம். இருட்டில் தட்டுத் தடுமாறி செல்லும் போது திடீரென ஒளிப்பிழம்பு தோன்றி வழிகாட்டினால் எப்படி இருக்குமோ அப்படித்தான் கேரளவர்மாவின் கவிதைகளைப் படிப்பதும் என்று அவர் சொல்வார். சந்துமேனனுக்கு நல்ல இலக்கிய ஈடுபாடு உண்டென்பதும் அதே சமயத்தில் நகைச்சுவை நிரம்பியவர் என்பதும் இதிலிருந்து தெரியவரும். அவர் தனக்கென்று தரம் ஒன்று வகுத்து வைத்திருந்தார். அந்தத் தரத்தை எட்டிப் பிடிக்க முடியாதவர்கள் எவராயிருந்த போதிலும் அவரைக் கண்டிக்க அவர் தயங்கியதில்லை. அதே சமயத்தில் நல்ல இலக்கியத்தைப் பாராட்டவும் அவர் தயங்கியதில்லை. அவருக்கென ஒரு கொள்கை வகுத்துக் கொண்டார். அக் கொள்கையைக் கட்டிக் காக்கும் நெஞ்சுறுதியும் அவருக்கு இருந்தது. அதனால் தான் தவறு கண்ட இடத்து சுட்டிக் காட்டவும், நல்லனவற்றைப் பாராட்டிப் பேசவும் அவரால் முடிந்தது.

எனினும, இந்துலேகாவை வெளியிடுகையில் அவரது தன்னடக்கமான முன்னுரையைக் கவனிக்க வேண்டும். 'இத்தகைய படைப்பை எனது நாட்டு மக்கள் எப்படி ஏற்றுக்கொள்வார்கள் என்று எனக்குத் தெரியாது. ஆங்கிலம் தெரியாதவர்களுக்கு இத்தகைய கதைகளைப் படிப்பதற்கு வாய்ப்பு இருந்திருக்காது. அவர்கள இம்மாதிரியான கதையைப் படிப்பது இதுவே முதல் முறையாகவும் இருக்கலாம். இந்த முதல் அனுபவம் அவர்களுக்கு எந்த அளவுக்குச் சுவையாக இருக்கும் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும். தலைசிறந்த நாவல்கள் எத்தகைய கலைத் தகுதிகள் உடையனவாக இருக்க வேண்டும் என்று நான் கூறி வந்திருக்கிறேனோ அத்தகைய கலைத்

தகுதிகளை இந் நூல் பெற்றிருக்கின்றது என்று நான் கூறமாட்டேன். அத்தகைய தகுதிகள் இந் நூலுக்கு உள்ளது என்று நான் கூறுவதாக இந்நாவலைப் படிப்பவர்கள் கருதினால், அதற்காக நான் உண்மையில் மனம் வருந்துவேன்'' மலையாள மொழியிலேயே, வேறு எந்த நூலும் விற்பனையாகாத வேகத்தில் இந்துலேகா விற்பனையாகியது என்பதை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

அவரிடம் அடக்கம் இருந்தது. அந்த அடக்கத்தில் அச்சம் இல்லை. பணியில் பற்றில்லாத நிலையும் இல்லை. அவர் அரசுப் பணியில் சேர்ந்த புதிதில், மற்றவர்களைவிடத் தமது பணியை விரைவாக முடித்து விடுவாராம். அதன் பின்னர் அதிகாரிகள் வெளியே செல்லும்வரை அமைதியாக உட்கார்ந்திருப்பாராம். அவர்கள் சென்றவுடன் மேசையில் தாளம் போட்டுக் கொண்டு கதகளி பாடல்களைப் பாடத் தொடங்குவாராம். பணியை முடிப்பதில் மந்தமாக இருந்தவர்களுக்கு இது இடையூறாக இருந்தது. மேனன் பாடத் தொடங்கியவுடன் அவர்களில் சிலர் தமது பணியை நிறுத்திவிடுவார்களாம். மற்றும் சிலர் அவருடன் இந்தக் கேளிக்கையில் கலந்து கொள்வார்களாம். ஆனால் இதற்காக மேனனை எவரும் வெறுக்கவில்லை. மாறாக துருதுருவென்றிருந்த இந்த விளையாட்டுப் பிள்ளையை அனைவரும் விரும்பினர். அவர்தம் பணியில் அசட்டையாகவும் இருந்ததில்லை; தைரியமில்லாதவராகவும் இருந்ததில்லை; ஆனால் கலையார்வம் மிக்கவராகவும் ஆற்றல் மிகுந்தவராகவும் விளங்கினார்.

மேனன் கதகளி கலையை நன்கு தெரிந்து வைத்திருந்தார் என்பது இதிலிருந்து வாசகர்களுக்குப் புரிந்திருக்கும். சமஸ்கிருத, மலையாள, ஆங்கில இலக்கியங்களைப் படித்து அனுபவிப்பது அவரது பொழுது போக்கு. அவர் படிப்பதில் ஆர்வம் மிக்கவர். அவருக்கென்று நெருங்கிய நண்பர்கள் சிலர் இருந்தனர். அவர்கள் நட்பை அவர் மிகவும் விரும்பித் துய்த்தார். அவர்களும் அவரது பேச்சுத் திறமையை, கவிதைகளை எடுத்துச் சொல்லும் பாங்கை, தாளம் தவறாமல் இசையில் ஒன்றி விரல்களால் தாளம் போடும் பாணியை, கேட்பவர் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் கதை சொல்லும் திறனை விரும்பி, அதனால் மகிழ்ச்சி அடைந்தனர். வடமொழியில் இவருக்குப் புலமையிருந்தது; அந்த மொழியில் அவருக்குப் பற்றும் இருந்தது; ஆயினும் அந்த மொழிக்கு வரன்முறை இருந்ததை அவர் நன்கு உணர்ந்திருந்தார். அவரைப் பொறுத்தவரையில் வடமொழி தொன்மை வாய்ந்த பெருங்காப்பிய மொழி. பழங்காலப் பெருமைகளை உணர்ந்து கொள்ள, உவமான உவமேயங்களை அழகாக எடுத்துரைக்கவல்ல மொழி. ஆனால் உலகில் என்ன நடக்கிறது என்பதை அறிந்து கொள்ள,

சடுதியில் மாறிவரும் உலகில் உய்ய வகை காண, ஆங்கிலம் அவசியம் என்று அவர் திண்ணமாக நம்பினூர்.

சந்துமேனனுக்குக் கதகளி என்ருல் மிகவும் ஆர்வம் அதிகம். அக் கலையின் புரவலர் அவர். கலைப் பண்பறிஞர். கதகளிக் குழுவினர் அருகிலுள்ள கோயில்களுக்கு வரும்போதெல்லாம் அவர்களைத் தம் இல்லத்திற்கு வரவழைத்து, அவர்களது கலைத் திறனைக் கண்டுகளித்து உபசரிப்பார். அவருக்குப் பிடித்த காட்சிகளை ஆடிக்காட்டுமாறு அவர்களைக் கேட்டுக் கொள்வார். அவர்கள் ஆட்டத்தில் இசையோ, நடிப்போ அவர் வகுத்திருந்த தரத்திற்குக் குறைவாக இருந்தால், அவர் சிறிதும் தயக்கமின்றி, உடனடியாக ஆட்டத்தை நிறுத்தி, ஆட்டக்காரர்களுக்குரிய தொகையைக் கொடுத்து அவர்களை அனுப்பிவிடுவார். அவர்கள் ஆட்டமும் பாட்டும் நன்ருக இருந்தால், அவர்களை முழுநேரம் ஆடச் சொல்லி ரசிப்பதுடன் தாராளமாக வாரி வழங்குவார். குஞ்சுகர்த்தா என்ற ஒருவர் அக் காலத்தில் இருந்தார். அவர் கதகளியில் விற்பன்னர். ஆனுல் கிறுக்கர். இவரை மேனனுக்கு மிகவும் பிடிக்கும். குஞ்சுகர்த்தா எப்போது என்ன சொல்வார், செய்வார் என்பதைச் சொல்ல முடியாது. ஒப்பனை அறையில் அவர் கைகளைக் கட்டிவிடுவது வழக்கம். அப்பொழுதுதான் ஒப்பனையை அவர் கலைக்காமலிருப்பார். ஆனுல் ஒப்பனை முடிந்து மேடைக்கு வந்ததும் அவர் தன்னை மறந்துவிடுவார். ஆட்டம் தொடங்குவதற்குச் சற்று முன்னர்தான் அன்றைய நிகழ்ச்சி நிரல் என்ன என்பதும், அவரது பார்த்திரம் என்ன என்பதும் அவரிடம் சொல்லப்படும். ஆயினும் தாம் ஏற்கும் பாத்திரத்தில் ஒன்றி, காண்போர் உள்ளம் நெகிழ்ந்து ஒன்றிவிடும் வண்ணம் அவர் மிகச் சிறந்த முறையில் நடிப்பார். குஞ்சு கர்த்தாவின் நடிப்பு என்ருல் மேனனுக்குத் தனி ஈடுபாடு. ஒரு முறை குஞ்சு கர்த்தாவின் நிகழ்ச்சியைப் பார்த்துக் கொண்டிருக்கையில் மேனன் திடீரென, ''தயவு செய்து சற்று நிறுத்துங்கள்'' என்ருர். அன்று சவரன் என்ன விலை என்று அருகாமையில் இருந்தவர்களை வினவினூர். சவரன் மதிப்பை வெள்ளி ரூபாய்களாக எண்ணி, குஞ்சு கர்த்தாவின் கைகளில் வைத்துப் பாராட்டினூர். அந்தக் கலைஞரிடம் பொருத்தமில்லாத கிறுக்குத்தனம் இருந்த போதிலும், அவற்றைப் பொருட்படுத்தாது அவரது கலையின் தனித் திறமையைப் பாராட்டும் கலைப் பேருள்ளம் மேனனுக்கு இருந்தது.

சந்து மேனனின் மறைவு, அந்தக் கலைஞர்களுக்குப் பேரிழப்பாக இருந்தது. நிறைந்து சிறந்த திறமைகளும் அனைவரையும் ஒருங்கு மகிழ்விக்கத்தக்க பண்பாடும் செறிந்து, தங்களது மதிப்பையும் அன்பையும் கவர்ந்த கலைக்காவலர், பெருந்தகையாளர்

தங்களிடையேயிருந்து மறைந்து விட்டார் என்பதை எண்ணி எண்ணி அவர்கள் உள்ளம் வருந்தினர். கண்ணீர் வடித்தனர்.

ஆண்டுகள் உருண்டோடிச் சென்றன. அவருடைய நூல்கள் அவரைத் தெரியாதவர்களையும் அவருக்கு நண்பர்களாக்கின. அவருக்குச் சொந்தமில்லாத இடங்களெல்லாம் அவருக்கு இல்லங்களாகின. சேய்மை நீங்கி அண்மையாகியது. முன்பின் அறியாதவர்கள் அவரது உடன் பிறப்புக்களாயினர்.

*இந்த வையத் திருவிழா விற்கு*
*எனக்கோர் அழைப்புக் கிடைத்தது!*
*என்றன் வாழ்வும் இதனுல்*
*புனித மாகிச் சிறந்தது!*
*காட்சிகளை என் கண்கள் கண்டன.*
*கனிகளை என் செவிகள் நுகர்ந்த*
*இப்பெருவிருந்தில் என் இசைக் கருவியை*
*மீட்டுவதே என் முதற்பணி! அப்பணியைக்*
*குறைவின்றி என்னுல் முடிந்த அளவிற்கு*
*நிறைவேற்றி விட்டேன்.*

— தாகூர்.

# 2. மலபாரின் சமூக அமைப்பு

*''சமூதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ள நாயர்கள், கீழ் நிலையில் உள்ள நாயர்கள், பல்வேறு நிலைகளில் உள்ள நம்பூத் ரிகள், பட்டர், பிராம்மணர்கள் முதலியோர் அடங்கிய பல் வேறு பாத்திரங்களை இந்த நாவலில் கொண்டு வந்துள்ளேன்.*

**(சந்துமேனன் கடிதத்திலிருந்து எடுத்த குறிப்பு)**

மலபார் பகுதியில் அந்நாளில் நிலவி வந்த சமுதாய அமைப்புப் பற்றிச் சில தகவல்களைத் தெரிந்து வைத்துக் கொள்வது, சந்து மேனன் கதைகளில் வரும் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் மலையாளிகள் அல்லாதவர்கள் புரிந்து கொள்வதற்கு எளிதாக இருக்கும். மக்கள் பல்வேறு வகுப்புக்களைச் சேர்ந்தவர்கள். மலை யாளிப் பிராமணர்கள் நம்பூத்ரிகள் எனப்பட்டனர். துளு பிராம ணர்கள் எம்பிரான்கள் எனப்பட்டனர். தமிழ் பிராமணர்கள் பட்டர் எனப்பட்டனர். நாயர்கள், வாரியர்கள், கணியன்கள் ஆகி யோர் பிராமணர் அல்லாதோரைச் சேர்ந்தவர்கள். இவர்கள் முக்கியமான தொகுதியினர் ஆவர். இந்துக்கள் அல்லாதோரும் மக்கள் தொகையில் பெரும் பகுதியினராக இருந்தனர். ஆனால் சந்துமேனனின் கதைகளில் அவர்களின் பங்கு மிகவும் சொற்பமே ஆகும்.

நம்பூத்ரிகள் சாதியில் மிகவும் உயர்ந்தவர்கள். பரசுராமர் உருவாக்கிக் குடியேறிய நிலம் கேரளம் எனப் புராணங்கள் கூறு கின்றன. நம்பூத்ரிகள் கேரளாவில் முதலில் குடியேறியவர்கள் போலும். 19-வது நூற்றாண்டில் அவர்களில் பலர் செல்வம் கொழித்த நிலக் கிழார்கள். வருங்காலத்தைப் பற்றிய சிந்தனை ஏதுமின்றி வாழ்க்கையை அனுபவித்து வந்தார்கள். அவர்கள் பொதுக் கோயில்களில் அல்லது அரச குடும்பங்களைச் சேர்ந்த அல்லது செல்வம் மிகுந்த ஜமீன் குடும்பங்களைச் சேர்ந்த கோயில் களில் குருக்களாகப் பணியாற்றினார்கள். அவர்களது முக்கிய மான பொழுது போக்கு சமய வழிபாடு, கல்வி கற்றல், கேளிக் கைகள் ஆகியவை. அவர்கள் வீடுகள் இல்லங்கள் எனப்பட்டன. அவை கல்வி நிலையங்களாக, செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருக்கும் இல்லங்களாக, கேளிக்கை கேந்திரங்களாக விளங்

கின. இல்லங்களுடன் இணைந்து செயல் பட்ட பாடசாலைகளில் அல்லது பள்ளிகளில் வடமொழியும் சமய நூல்களும், வழி வழிபாட்டு முறைகளும் இலவசமாகக் கற்பிக்கப்பட்டன. ஊட்டுப் பிறைகளில் அல்லது உணவு இல்லங்களில் உணவு இலவசமாக அளிக்கப்பட்டது. கேளிக்கைக்கு கதகளி குழுவினர் இருப்பர் அல்லது பதகம்* (கதை சொல்வது) வல்லுநர் இருப்பர். நம் பூத்திரிகளில் சிலர் வடமொழியில் புலமை மிக்கவர்களாய் விளங் கினர். இவற்றைத் தவிர அவர்களுக்கு வேறு எதிலும் பற்று இல்லை: நாட்டமும் இல்லை: எளிய பழக்க வழக்கங்களை உடை யவராய் இருந்ததால் அவர்கள் பிறரது கேலிக்கும் ஆளாயினர். உயர்குடிப் பிறந்தோர் எனக் கருதப்பட்டதால், நாயர்கள் போன்ற ஏனையோர் அவர்களிடம் பேசுகையில் தனிப்பட்ட மரி யாதையுடன், தனிப்பட்ட மொழியில் பேசியதுடனன்றி, அவர் களுக்கு உறவு முறையாவதைப் பெரிய ,கௌரவமாகவும் கருதி னர். இந்துலேகாவில் இது போன்ற தொரு காட்சி வருகின்றது. செல்வம் மிக்க பூவல்லி தரவாடு குடும்பத்தின் தலைவர் சொல் கிறார்: ''நம்பூத்ரிபாடு ஒரு முட்டாள் என்றாலும் அவர் பெரிய மனிதர். அவருடன் சம்பந்தம் செய்து கொள்வது நமது குடும்பத்தின் மதிப்பை உயர்த்துவதாகும்'' நம்பூத்ரிகள் தயக்க மின்றி பிற வகுப்பிலிருந்து பெண்களை மணமகளாக ஏற்றுக் கொண்டனர். ஏனெனில் அந்த நாட்களில் அத்தகைய சம் பந்தங்களினால் அவர்களுக்குப் பொறுப்பு ஒன்றுமில்லை. அதைவிட முக்கியமான காரணம் என்னவென்றால், அந்த நாட்களில் குடும் பத்தின் தலைமகன்தான் தன் வகுப்பிலிருந்து பெண் கொள்ள முடியும். இப்பழக்கங்கள் அனைத்தும் இன்று மாறிவிட்டன. நம் பூத்ரிகள் தற்காலத்தில் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பல் வேறு தொழில்களில் உள்ளனர். நம்பூத்ரிப் பெண்கள் (அந்தர் ஜனம்) முன்பிருந்ததை விட அதிகமான சுதந்திரத்தையும் உரி மைகளையும் அனுபவிக்கின்றனர்.

சாரதாவில் துளு எம்பிரான் என்று ஒரு வகுப்பினர் வரு கின்றனர். கோப்புன்னி அச்சன் கோபத்திற்கு அஞ்சி, சங்கரன் ஓடி ஒளிந்த போது சங்கரனுக்கு உணவளித்த இந்த வகுப்பினர் அந்தணர் வகுப்பைச் சேர்ந்தவர்கள். துளுநாடு, கன்னட நாட்டில் உள்ளது. இவர்களுக்கு ஏறத்தாழ நம்பூத்ரிகளின் அந்தஸ்து உண்டு. ஆனால் நம்பூத்ரிகளுக்கு சமமான மரியாதை கொடுக்கப்படவில்லை. சூரி நம்பூத்ரிபாத் திருமணத்தில் ''எல்லோருக்கும் தலைக்கு நாலணா வீதம் தட்சணை கொடுக்கப்படும் என்றும் நம்பூத்ரிகளுக்கு தலைக்கு எட்டு அணா வீதம் தட்சணை கொடுக்கப்படும் என்றும்

*கதை சொல்வதில் ஒருவகை.

எதிர்பார்க்கப்பட்டது''. எம்பிரான்கள் மலபாரில் குடியேறி கோயில் பூசாரிகளாய்ப் பிழைப்பை ஏற்றுக் கொண்டிருந்தனர். பட்டர்களுக்கு இந்த அந்தஸ்து எப்பொழுதாவதுதான் கொடுக்கப்பட்டது.

பட்டர்கள் தமிழ் மாவட்டங்களிலிருந்து வந்த பிராம்மணர்கள். இச்சொல் வடமொழிச் சொல்லின் திரிபாகும். இவர்களில் சிலர் கேரளத்தில் தலைமுறை தலைமுறையாய் இருந்து வந்த போதிலும் அவர்கள் தங்கள் வீடுகளில் தமிழிலேயே பேசி வருகின்றனர். குறிப்பாக பெண்கள் தமிழ்நாட்டில் உள்ளது போலவே உடை உடுத்தி வருகின்றனர். தொழில் செய்து அல்லது தொண்டு செய்து பிழைக்கவே அவர்கள் கேரள நாட்டிற்கு வந்தனர். வட்டிக் காரர்களாக, வணிகர்களாக, பெரிய நிலச் சுவான்தார் குடும்பங்களில் காரியக்காரர்களாக, சமையற்காரர் களாகத் தொழில் நடத்தினர். ஒரு சிலர் நாயர் பெண்களைத் திருமணம் செய்து கொண்டு வாழ்க்கை நடத்தினர். அவர்கள் உழைப்பாளிகள், ஊக்கத்துடன் பாடுபடுவார்கள். பொருள் ஈட்டும் ஆர்வத்தில் சிலர் தகாத நடைமுறைகளைக் கையாண்டனர். இதனால் அவர்களுக்கு அவப்பெயர் ஏற்பட்டது. ஆயினும் இந்த வகுப்பிலிருந்து புகழ் பெற்ற அறிஞர்கள், இசை வல்லுநர்கள், வழக்குரைஞர்கள், மருத்துவர்கள், அரசு நிர்வாகிகள் பலர் தோன்றியுள்ளனர்.

திருமூலபத்கள் என்போர் க்ஷத்ரிய வகுப்பைச் சார்ந்தோர். சாரதாவில் கோப்புன்னி அச்சனுக்குப் போட்டியாக வரும் ராம வர்மா இந்த வகுப்பைச் சேர்ந்தவர். தொடக்கத்தில் அவர்கள், சமூதாயத்தில் அந்தஸ்துடன் கூடிய பண்ணைக்காரர்களாக இருந்தனர். ஆனால் ராஜாக்கள் போன்று நிர்வாக அதிகாரம் இவர் களுக்கில்லை. செல்வ வசதியுள்ள திருமூலபத்களின் இல்லங்கள் அரண்மனைகள் என்றே அழைக்கப்பட்டன. அண்மைக் காலம் வரையில் அவை அவ்வாறே அழைக்கப்பட்டு வந்தன.

சாரதாவில் வரும் சங்கரவாரியார் அம்பலவாசி வகுப்பைச் சேர்ந்தவர். இந்த வகுப்பினர் கோயில்களில் சேவை செய்வது, கோயில்களைத் துப்புரவாக வைத்துக் கொள்வது, தெய்வங்களுக்கு மாலை கட்டுவது, ஆகிய பணிகளைச் செய்து வந்தனர். மேலும் கோயில் பூசாரிகளுக்குப் பொது உதவியாளர்களாகவும் செயல் பட்டனர். இவர்கள் எளிய பழக்க வழக்கங்களை உடையவர்கள்; சூதுவாதற்றவர்கள். இவர்களில் பெரும்பாலோர் வடமொழி பயின்றவர்கள். சிலர் அம்மொழியில் நல்ல புலமை மிக்கவர்கள். சோதிடக் கலையில் வல்லுநர்கள்.

மலபாரில் நாயர்களுக்குச் சிறப்பிடம் உண்டு. மலபார், கேரளம் என்ற சொற்களைக் கேட்டவுடன் நமக்கு நாயர் வகுப்

பினர்தான் நினைவுக்கு வருகிறார்கள். இவர்கள் இந்துக்கள். பிராம் மணர் அல்லாதவர்கள். தமிழ் மாவட்டத்தைச் சேர்ந்த ''சூத் திரர்கள்'' எனப்படுபவரிடமிருந்து வேறுபட்டவர்கள். ஆனால் ஒரு சிலர் அறியாமை காரணமாக கேரள நாட்டு நாயர்களும், தமிழ்நாட்டுச் சூத்திரர்களும் ஒரே வகையைச் சேர்ந்தவர்கள் என்று நினைக்கின்றனர்.

இவர்கள் காலங் காலமாக இராணுவத்தில் பணிபுரிந்தவர்கள். ஆங்கிலேய ஆட்சி, மலபாரில் நிலைபெறுவதற்கு முன்னர், அங்கு பல்வேறு சிற்றரசர்கள் இருந்தனர். அவர்களிடையே எப்போதும் பகைமை இருந்து வந்தது. அடிக்கடி சண்டை நடந்தது. இச் சிற்றரசர்களில் பலர், நாயர் வகுப்பைச் சேர்ந்தவர்கள். படை வீரர்களும் நாயர்களே; போர்க்களத்தில் நிற்காதபோது நெற் களத்தில் நின்றனர். இப்பணிகளின் காரணமாக அவர்கள் சுதந்திர மாகவே இருக்க விரும்புகின்றனர். மேலும் தன்மான உணர்வும் விருந்தோம்பும் பண்பும் அவர்களுக்கு 'வளர்ந்து வந்தது.

வலிமை வாய்ந்த மைய அரசாட்சியின் காரணமாக அமைதி நிலவியது. அந்த அமைதியின் காரணமாக நாயர்களின் வாழ்க் கையிலும் காலப் போக்கிலே மாற்றம் ஏற்பட்டது. வாள் ஏந்திய கைகள் மேழி பிடிக்கவும் பேனா பிடிக்கவும் தொடங்கின. உளி, சுத்தி, திருப்புளி முதலிய கருவிகளையும் கையாள முன்வந்தன. கோயில் பூசாரி வேலை தவிர மற்றெல்லாத் தொழில்களிலும் அவர்கள் நுழைந்தனர். இயல்பாகவே கூர்மையான, நிறைந்த அறிவு பெற்ற இவர்கள் அவரவர் தொழில்களில் வெற்றி கண் டனர். எனினும் சுதந்திரமாகச் செயல்பட வேண்டும் என்ற உணர்வு, கேரளத்தில் நல்ல தலைமை உருவாவதற்குத் தடை யாக நின்றது. மானம் பற்றிய எண்ணம் மிகையாகத் தலை தூக்கி நின்றதால் நாயர் வகுப்பின் பொருளாதார முன்னேற்றம் தடைப்பட்டது என்றுதான் தோன்றுகிறது. சில வகுப்புகளில் ரெட்டி, சிங், கான் என்று பல்வேறு சாதிப் பெயர்கள் பயன் படுத்தப்படுவது போன்று, மேனன், நாயர், பிள்ளை ஆகியவை நாயர் வகுப்பில் பயன்படுத்தப்படும் சில பட்டப் பெயர்களாகும்.

நாயர்களின் சமுதாய வாழ்க்கையில் முக்கியமான சிறப்பியல்பு மருமக்கள் தாய முறை அல்லது தாய்வழி உரிமை முறையாகும். இந்த முறைப்படி நாயர்களின் குடும்ப அலகு தரவாடு மூதாட்டி ஒருவரும் அவரது பெண் வழித் தோன்றல்களும் (மகன், மகள் உட்பட) அடங்கிய கூட்டுக் குடும்பம் தரவாடு எனப்படும். சொத்து, அனுபோக உரிமை, வாரிசுரிமை ஆகியவை தாய்வழி மூலம் கிட்டுகின்றது. ஆயினும் சொத்துக்களை நிர்வகிக்கும் உரிமை, பொறுப்பு ஆகியவை அக்குடும்பத்திலேயே வயதில் முதிர்ந்த ஆண் ஒருவரைச் சார்ந்ததாகும். இவர் காரனவன் என அழைக்

கப்படுகிறார். அக்குடும்பத்தைச் சார்ந்த பெண்கள் வழித் தோன்றல்கள் சார்பிலும், காரனவன் அச் சொத்துக்களைப் பாதுகாத்துப் பேணி வருகிறார். அவர் அக்குடும்பத்தைச் சார்ந்த ஒவ்வொரு வருக்கும் பாதுகாவலர். ஆனால் தரவாடு குடும்பச் சொத்தினை மாற்ற அல்லது விற்க அவருக்கு உரிமை கிடையாது.

வயது வரிசைப்படி, காரனவனாகி தரவாடு நிர்வாக உரிமையைப் பெறுதல், சொத்துக்களைக் காரனவன் தகாத முறையில் நிர்வகித்தாலும் பயன்படுத்தினாலும் அதுபற்றி ஆட்சேபித்தல், தரவாட்டின் தொடர்ந்த பயனுக்காக சொத்து சரிவரப் பாதுகாத்து வரப்படுகின்றதா என்று பார்த்துக் கொள்ளுதல் ஆகியவை அனந்தரவன் எனப்படும் இளைய தலைமுறையின் சிறப்பு உரிமைகளாம். தரவாட்டில் நிதி வாயில்கள் நிறைய இருக்கலாம். ஆனால், குறைந்த அளவு நிதி ஒதுக்கமாவது குடும்பத்தின் தேவைகளுக்காக ஒதுக்கப்பட வேண்டும். இளைய தலை முறையைச் சேர்ந்தவர்களுக்குக் கல்வி வசதிக்கு வகை செய்ய வேண்டும் என்பது கூட காரனவனைப் பொறுத்தவரையில் கட்டாயமல்ல. தரவாட்டைச் சேர்ந்த அனைவரது தேவைகளையும் கவனிப்பது அவரது கடமையாகும். தன் மனைவி, மக்கள் நலனையும் அவர் கவனிக்க வேண்டும். தரவாட்டு நிதிவாயில்களைத் தனது மனைவி, மக்களின் நலனுக்காக மிக அதிக அளவில் காரனவன் பயன்படுத்துகிறார் என்பதே, மருமக்கள்தாயம் தரவாட்டைச் சேர்ந்த குடும்பங்களில் வழக்கு ஏற்படுவதற்கு முக்கிய காரணமாகும். இளைய தலைமுறையினரிடையே ஓரவஞ்சனை காட்டுகின்றார் அல்லது வேண்டுமென்றே சொத்தைத் தவறான முறையில் நிர்வகிக்கிறார் என்று சில சமயங்களில் காரனவன் மீது குற்றம் சாட்டப்பட்டது. காரனவர்களில் நல்லவர்களும் இருந்தனர்; கெட்டவர்களும் இருந்தனர். கெட்டவர்கள் என்று சொல்லப் பட்டவர்களில் பலர் எப்போதும் கெட்டவர்களாகவும் இருந்ததில்லை.

இம்முறை கண்டனத்துக்குள்ளாகியது. ஏனெனில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த அனைவரின் தேவைகளும்—அவர்கள் சோம்பேறிகளாய் இருந்தாலும்—கவனிக்கப்படுகின்றன. அவர்கள் அனைவரும் சரிசமமாகக் கவனிக்கப்படுகின்றனர். முன்னேற்றத்திற்கும், வளமான வாழ்வுக்கும், கடுமையான உழைப்பும் துணிவான முயற்சியும் தேவை. மருமக்கள் தாயம் முறையில் துணிவுக்கும் முயற்சிக்கும் இடம் கிடைப்பதில்லை என்ற காரணத்தினால் இம்முறை கண்டனத்துக்குள்ளாகியது. ''இங்கிலாந்து இளைய மகன்களுக்குச் சொத்து ஒதுக்கப் படுவதில்லை. ஆனால் அவர்கள்தான் ஆங்கிலப் பேரரசை உருவாக்கினார்கள்'' என்று சொல்லப் படுவதில்லையா? இந்தக் கூற்று உண்மையோ இல்லையோ நமக்குத்

தெரியாது. நோபல் பரிசு வாங்கிய பொல்பர் எழுதியுள்ளது தரவாட்டுக் குடும்ப முறைக்குப் பொருந்தும். ''குடும்பம் என்பது தனிப்பட்ட ஒருவரது கோட்டையாக, அவருக்குப் பாதுகாப்பாக அல்லது புகலிடமாக இருக்கவேண்டும். சிறுவர் நலனையோ அல்லது வயதானவர் நலனையோ வேறு எந்த அரசோ அல்லது நிறுவனமோ அவ்வளவு நன்றாகக் கவனிக்க முடியாது.''

தரவாடு இல்லம் என்பது நாலு கட்டுகள் அடங்கிய கட்டிடமாகும். இதில் மையக்கூடம் (நடுமுற்றம்) என்று உண்டு. பெண்களுக்கென்று தனி இடமும் ஆடவருக்கென்று தனி இடமும் காரனவனுக்கென்று தனி இடமும் காலங்காலமாக ஒதுக்கப்பட்டு வந்துள்ளன. செல்வம் கொழித்த பழைய தரவாடுகளில் குடும்ப தெய்வங்களுக்கென்று தனிக் கோயில்களும் குடும்ப நிர்வாகத்திற்காகக் தனி அலுவலகங்களும் வழிப்போக்கர்களுக்கு இலவச உணவு அளிப்பதற்காக ஊட்டுப் பிறைகளும் ஆயுதப் பயிற்சிக்காகக் களரிகளும் இருந்தன. இந்துலேகாவில் காரனவனின் வீடு இரண்டு அடுக்குகள் அல்லது அதற்கு மேற்பட்ட அடுக்குகளை உடைய வீடுகளாகக் கொண்டிருந்தது. அதில் குளம், குளியல் அறைகள், கோயில், பிராம்மணர் உணவறை ஏனைய நிறுவனங்கள் ஆகியவை இருந்தன. சாரதாவில் வரும் சங்கரன், சாரதாவின் தரவாடு அருகே வந்தபோது, அங்கிருந்த கட்டிடங்களின் அளவு, கட்டிடங்களின் எண்ணிக்கை, வகை ஆகியவற்றைக் கண்டு வியப்புற்றார். படிகம் போன்ற நீரைக் கொண்ட குளம், எதிர்க் கரையில் இருந்தவர்களை அடையாளம் கண்டு கொள்ள முடியாத அளவுக்கு மிகப் பெரியதாக இருந்தது.

நாயர்கள் எப்பொழுதும் தூய்மையாகவே இருக்க விரும்பினர். எனவே குளியல் குளம் இவர்கள் வாழ்க்கையில் முக்கியமான அம்சமாகும். பெரியவராயினும் சரி, சிறியவராயினும் சரி, ஆணுயிருந்தாலும் சரி, பெண்ணுயிருந்தாலும் சரி ஒரு நாளைக்கு ஒரு முறையாவது குளிக்கவேண்டும்; அதுவும் தலைமூழ்கக் குளிக்க வேண்டும். பொதுவாக அவர்கள் வாரத்திற்கு இருமுறை எண்ணெய் தேய்த்துக் குளிப்பர். குளத்தின் அருகில் குளியல் அறைகள் கட்டப்பட்டிருந்தன. என்றாலும் அந்த அறைகளிலிருந்து குளத்தில் இறங்குவது எளிதாக இருக்கும் வகையில் படிக்கட்டுகள் கட்டப்பட்டிருந்தன என்று இந்துலேகாவில் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

அந்த நாட்களில் பெரிய தரவாடுகள் சமுதாய வாழ்க்கையின் மையமாக விளங்கின. குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் தத்தம் பொறுப்புக்களையும் கடமைகளையும் சுறுசுறுப்பாக நிறைவேற்றினர். வேலையாட்கள் இங்கும் அங்கும் ஓடித் தத்தம் பணிகளைச் செய்து கொண்டிருந்தனர். பூசாரி, கோயிலில் முழுமூச்சுடன்

வழிபாடு செய்து கொண்டிருந்தார். மேலாளரும் சில சமயம் வழக்குரைஞரும் பண்ணை விவகாரங்களைக் காரனவருடன் விவாதிக்க வருவர். குத்தகைக்காரர்களும் விவசாயிகளும் தத்தம் பிரச்சனைகளைக் காரனவனின் நாட்டத்திற்குக் கொண்டு வந்தனர். நடு முற்றத்தில் கூலியாட்கள் தமக்கிடப்பட்ட பணியைச் செய்து கொண்டிருந்தனர். தெருத் தெருவாக விலைகூறி விற்போர்கள் தங்கள் சரக்குகளைக் கொண்டு வந்து விற்றனர். நண்பர்கள் வந்து போய்க் கொண்டிருந்தனர். இரவலர்கள் ஒரு வேளை உணவுக்காகக் காத்திருந்தனர். இவ்வாறாக கோயில், ஊட்டுப் பிறை, குளியல் அறைகள் ஆகியவை உட்படப் பல்வேறு இடங்களும் வருவோரும் போவோருமாகக் கலகலப்பாக இருந்தன. மாலை நேரங்களில் கோயிலிலும் குளக்கரைகளிலும் ஏனைய இடங்களிலும் வந்து போகும் மக்களை விவரிப்பது கடினம். அவ்வப்போது கதகளி, பதகம் அல்லது ஓட்டம் துள்ளல் நிகழ்ச்சி அல்லது எவராவது விற்பன்னர் ஒருவரால் சமயநூல் விரிவுரை நடக்கும். பூவல்லி தரவாட்டில் இலக்கிய ரசனை ஏராளமாக இருந்தது. தனது வீட்டில் சில ஆண்டுகளாக கதகளி நிகழ்ச்சியே இல்லையென்று இந்துலேகா, சூரி நம்பூத்ரிபாத்துக்குத் தெரிவிக்கும்போது அவர் வியப்படைகிறார். ''நான்கு ஆண்டுகளாகவா! செல்வம் கொழிக்கும் இத்தகைய வீட்டிலா நான்கைந்து ஆண்டுகளாக கதகளி நடக்கவில்லை! எனக்கு இது விளங்கவில்லையே!'' என்று வியக்கிறார். கட்டிடங்கள், பண்ணைகள் அனைத்தும் சுற்றுப்புறச் சுவர் ஒன்றுக்குள் அமைந்திருக்கும். சுற்றுப் புறச் சுவர், கல்லால் ஆனதாகவும் இருக்கலாம். வேலியினால் அமைந்ததாகவும் இருககலாம். நல்ல வசதியான குடும்பமாக இருந்தால் இச்சுற்றுப்புற அளவு இரண்டு மூன்று ஏக்கர் பரப்புள்ளதாக இருக்கும். இப்பரப்பளவுக்குள் குடும்பத்தைச் சேர்ந்த கோவில், இல்லங்கள், மாட்டுக் கொட்டகைகள், குளம் ஆகியவை மனையடி சாத்திரத்தில் நியமித்துள்ளபடி உரிய இடங்களில் அமைந்திருக்கும். குளங்கள் குளிக்கப் பயன்பட்டதுடன் பாசனத்திற்கும் உதவின. இதைத்தவிர, குடிப்பதற்கும் சமைப்பதற்கும், நீர் எடுப்பதற்காக இரண்டு மூன்று கிணறுகள் இருந்தன. இவற்றில் ஒன்று கோயிலின் பயனுக்காக ஒதுக்கப்பட்டது. பிரதான இல்லத்தின் கிழக்குப் பக்கத்தில் சிறிது தொலைவில் தூய்மையாக வைத்து வரப்படும் துளசிச் செடிகள் இருந்தன. அங்கு ஒவ்வொரு நாளும் அந்தி நேரத்தில் அக் குடும்பத்தைச் சேர்ந்த பெண் ஒருவர் எண்ணெய் விளக்கு ஏற்றி வைப்பார். முன்புறத்தில் மல்லிகை போன்ற மலர்க் கொடிகள் இருந்தன. குளத்தில் தாமரையும் அல்லியும் மலர்ந்து கண்கொள்ளாக் காட்சியாக விளங்கியது. அவை கோயிலுக்கும் அக்குடும்பத்தைச் சார்ந்த பெண்களுக்கும்

பயன்பட்டன. வீட்டின் இருபுறமும் பின்பக்கமும் இருந்த தோட்டங்களில் பூசணி, வெள்ளரி, வெண்டை, சேனை, இஞ்சி, மஞ்சள், மிளகாய் போன்ற பயிர்கள் பயிரிடப்பட்டன. இவை குடும்பத்தின் தேவைகளை நிறைவு செய்தன. மா, பலா, புளி, முருங்கை போன்ற மரவகைகளும் தென்னை, கமுகு, வாழை போன்ற மரங்களும், வெற்றிலைக் கொடிகளும் அங்கு வளர்ந்தன. காய்களும் கனிகளும் அவ்வப்போது பறிக்கப்பட்டுப் பயன்படுத்தப் பட்டன. ஒரு பகுதி உற்பத்தி, ஊறுகாய்களாகப் பயன்படுத்தப் பட்டன. சிலசமயங்களில் தரவாட்டைச் சேர்ந்த நெல் வயல்கள் தரவாடு சுற்றுப்புற வளவுக்கு மிக மிக அருகாமையிலேயே பரந்து விரிந்து கிடந்தன.

இன்று தரவாடுகளில் பெரும்பாலானவை சிறு சிறு குடும்பங்களாகப் பிரிந்து விட்டன. உண்மையான தரவாடு இல்லம் என்பது, சுற்றுலாப் பிரியர்கள் வந்து பார்க்கக்கூடிய காட்சிப் பொருளாக ஆகிவிட்டது.

திரு. ஜான் டிமோர்க் இந்துலேகாவின் மொழிபெயர்ப்பில் நம்பூத்ரிகள் பற்றியும் நாயர்கள் பற்றியும் சில குறிப்புக்களைத் தந்துள்ளார்.

சாரதாவில் இரண்டு எதிர்கட்சிகளுக்கும் மகிழ்ச்சியூட்டும் சாத்துப் பணிக்கர், ஒரு கணியன். பணிக்கர் ஒரு இந்து. ஜாதி முறையில் பழைய தீண்டத்தகாதவர்களில் ஒருவர்; ஆயுதப் பயிற்சியளிக்கும் களரி பணிக்கருக்கும் கணியன் பணிக்கருக்கும் வேறுபாடு உண்டு. கணியன் பணிக்கர் தொழில் முறையில் சோதிடர். மற்றவர் போல மலையாளிகளுக்கும் சோதிடத்தில் நம்பிக்கை உண்டு. எனவே மலபாரின் சமுதாய வாழ்க்கையில் கணியன் முக்கிய பங்கு வகிக்கிறார். எந்தப் புதிய முயற்சிக்கும், அது தொழில் விவகாரமாயினும், திருமண ஏற்பாடாயினும், வேளாண்மையாயினும், நீதி மன்ற வழக்காயினும், முதல் மொட்டையாயினும் கணியனின் ஆலோசனை நாடப்படுகின்றது. கணக்கன் என்ற சொல் மருவி கணியன் எனப்பட்டது என்று சொல்வர்.* அவர்களில் ஒரு சிலரது சோதிடம் வியக்கத் தக்க வகையில் சரியாக உள்ளது என்பதை நான் இங்குக் குறிப்பிட வேண்டியுள்ளது. எல்லாத் தொழில்களிலும் போல கணியன்களிலும் மோசடிக்காரர்கள் இருக்கத்தான் செய்கிறார்கள். எடுத்துக்காட்டாக சாத்துப் பணிக்கர்.

இவ்வாறு பல்வேறு சமுதாயத்தினர், சந்துமேனனின் மலபாரில் காலம் காலமாக வாழ்ந்து வந்தனர். புதிய தலைமுறையின் பிரதி

---

*(தமிழில் கணியன் என்ற சொல்லுக்குச் சோதிடன் என்று பொருள்)

நிதியாகிய மாதவன் கூட காதணிகள் அணிந்து முன் குடுமியும் வைத்திருந்தார். இவர்களில் சிலர் நல்லவர்கள். ஏனையோர் கெட்டபுத்தி படைத்தவர்கள். ஒரு சிலர் வைத்திய பட்டர் போன்று திட்டவட்டமாகக் கெட்டவர்கள். சூழ்நிலை காரணமாக இவர்கள் ஒன்றாக இருக்க நேர்ந்தது. அவரவரது சிறப்பியல்புகளும் பண்புகளும் தனித்தனியே தலைதூக்கி நின்று அவரவர் சொற்கள், செயல்கள் வாயிலாக வெளிப்பட்டன. பழங்காலப் பழக்க வழக்கங்களுக்கும் இளைய பாரதத்தின் புதிய தலைமுறையினருக்கும் கருத்து மோதல்கள் ஏற்படுவது பற்றிச் சந்துமேனன் தமது நாவல்களில் அழகாகச் சித்திரிக்கிறார். புதிய தலைமுறையினர் எதிர்பார்க்கும் அளவுக்குப் பழைய தலைமுறையினரில் சிலர் இருக்க முடியாது. புதிய மாற்றங்களுக்குத் தக்கவாறு பழைய சாத்திரங்கள் மாற்றி யமைக்கப்பட வேண்டும்.

மலபார் சமுதாய வாழ்க்கை மாற்றி அமைக்கக்கூடிய அளவுக்கு தமது நாட்களில் ஏற்பட்ட மாற்றங்கள் கருத்தோட்டங்கள் பற்றி சந்துமேனன் தமது நாவல்களில் குறிப்பிடுகிறார்.

# 3. தொடக்க கால மலையாள நாவல்கள்

மலையாள இலக்கியத்தில் சந்துமேனன் ஆராய்ச்சி செய்தார், புரட்சியான மாறுதலை உருவாக்கினார் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டுமாயின் மலையாள மொழியில் முதலில் எழுதப்பட்ட நாவல்களைச் சுருக்கமாகத் திறனாய்வு செய்வது பயனுடையதாக இருக்கும். மலையாள மொழியில் முதன் முதலாக எழுதப்பட்ட நாவல் 1887-ல் வெளிவந்தது. அப்பு நெடுங்காடு என்பவரால் எழுதப்பட்ட ''குண்டலதா'' என்ற நாவல்தான் முதன் முதல் மலையாள மொழியில் எழுதப்பட்ட நாவல். ஆங்கில இலக்கியம் அறிந்தவர்கள் குண்டலதாவில் வரும் சம்பவங்கள், பாத்திரங்கள் ஷேக்ஸ்பியரின் ''டெம்பஸ்ட்'', ''சிம்பெலின்'', வால்டர் ஸ்காட்டின் ''ஐவன்ஹோ'' ஆகியவற்றில் வரும் சம்பவங்கள், பாத்திரங்களை நினைவூட்டுகின்றனவே என்று நினைக்கலாம். ஆயினும், குண்டலதாவில் இந்திய மண்ணின் மணம் வீசுகின்றது. இந்த நாவலில் வரும் இடங்களின் பெயர்கள் ''தருமபுரி'', ''கலிங்கர்'', ''குந்தளா'' போன்றவை இந்தியப் பெயர்கள். தாராநாதன், கபிலநாதன்'', ''குண்டலதா'' போன்ற பெயர்களும் வரு

கின்றன. இந்த இடங்கள் எங்கு இருந்தன? இந்த நிகழ்ச்சிகள் எப்பொழுது நடைபெற்றன? என்பனவெல்லாம் நமக்கு தெரியாது. அவை ''முன் ஒரு காலத்தில்'', ''எங்குமேயில்லாத இடத்தில்'' நடந்தன என்று தோன்றுகிறது. இதில் வரும் பாத்திரங்கள் அனைவரும் மலையாளிகள் அல்லாதவர்கள். கதை மலையாள நாட்டுக்கு வெளியே நடந்தது. இதில் வரும் சம்பவங்கள் நடைமுறைக்கு ஒவ்வாதவை. மலையாளிகள் வாழ்க்கை முறையையோ, அவர்கள் பண்பாட்டையோ ஒட்டி எழுதப்படவில்லை. ஆனால் மலையாள மொழியில் எழுதப்பட்டுள்ள ஒரே காரணத்தினால் முதல் மலையாள நாவல்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

அதன் பின்னர் இந்துலேகா 1890-ல் வெளிவந்தது. சந்து மேனனின் சாரதா பாகம் I 1892-ல் வெளிவந்தது. இதற்கிடையில் 1891-ல் ஸி. வி. ராமன் பிள்ளை, மார்த்தாண்ட வர்மா என்ற தனது தலை சிறந்த நாவலை மலையாள இலக்கியத்திற்கு அளித்தார். இது ஒரு சரித்திர நாவல். ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர் அரசாண்ட திருவாங்கூர் பேரரசர் வீரமாத்தாண்ட வர்மா என்பவர் பற்றி இந்த நாவல் எழுதப்பட்டுள்ளது. இதில் வரும் சம்பவங்கள் அனைத்தும் கேரளத்தில் நடந்தவை. பாத்திரங்கள் அனைத்தும் கேரளத்தைச் சேர்ந்தவை. இந்நாவல் மலையாள மொழியில் எழுதப்பட்டுள்ளது. ஆனால் இந்த மலையாள மொழி வீட்டில் பேசப்படும் மொழி அல்ல. பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் நடைபெற்ற சம்பவங்களைப் பின்னணியாகக் கொண்டு, எழுதப்பட்டுள்ள இந்த நாவல் விறுவிறுப்பான கருத்தோட்டத்துடன் அமைந்துள்ளது. 18-வது நூற்றாண்டின் பிற்பகுதியில் திருவாங்கூரை ஆண்டு வந்த அரசரைப் பற்றியும் நிலக்கிழார் குடும்பங்கள் பற்றியும் அரசுக்கு உண்மையாக நடந்து கொண்டவர்கள், துரோகம் செய்தவர்கள் பற்றியும் இந்த நாவல் அழகாகச் சித்திரிக்கிறது. இது ஓர் உயர்தரமான நாவல். ராமன் பிள்ளை மலையாள இலக்கியத்தில் சிறந்த அறிவாளி. அவர் எழுதுவதையே தமது தொழிலாகக் கொண்டிருந்தார்; மார்த்தாண்ட வர்மா பற்றி விவாதித்து, எழுதி, அதனைச் சரிபார்த்து, அழகுபடுத்த அவருக்குச் சிறிது காலம் பிடித்தது. இவையெல்லாம் அவரது வரலாற்றிலிருந்து நமக்குக் கிடைக்கும் செய்திகளாகும். மார்த்தாண்ட வர்மாவை எழுதியவரின் தொழில் வேறு. இந்துலேகாவைப் படைத்தவரின் தொழில்வேறு. இரண்டும் வெவ்வேறு சூழ்நிலைகளில், வெவ்வேறு பொருள் பற்றி எழுதப்பட்டுள்ளன. மொழி நடையில் கூட இரண்டும் வேறுபடுகின்றன. மார்த்தாண்ட வர்மாவின் சில இடங்கள் வால்டர் ஸ்காட்டின் ஐவன்ஹோவை ஒத்திருக்கிறது என்று திறனாய்வாளர்களில் சிலர் குறிப்பிட்டுள்ளனர். எடுத்துக்காட்டாக,

திரு. பாலகிருஷ்ணன் எழுதியுள்ளதை எடுத்துக் கொள்ளலாம். சி. வி. ராமன் பிள்ளை முன் மாதிரியாக சரித்திர நாவல் எழுதத் தொடங்கினுரென்றும் தெரிந்தோ தெரியாமலோ ஐவன் ஹோ பாணியில் அது அமைந்து விட்டது என்றும் திரு. பாலகிருஷ்ணன் எழுதியுள்ளார். மாருக, சந்துமேனன் ஹென்ரி யெட்டா டெம்பிள் பாணியில் நாவல் எழுதத் தொடங்கினுர். ஆனுல் புதியதொரு சமூக நாவலை உருவாக்கினுர். எழுத்தாளர் என்ற முறையில் ராமன் பிள்ளையின் மதிப்பைக் குறைக்கவோ மாத்தாண்ட வர்மா என்ற நாவலின் தரத்தைக் குறைக்கவோ மேற்சொன்ன ஒப்புநோக்குத் திறனுய்வு எழுதீப்படவில்லை. அவர் ஒரு சிறந்த எழுத்தாளர். அவரது படைப்பு ஒரு சிறந்த படைப்பு. சந்துமேனனும் தலைசிறந்த எழுத்தாளர்; இந்துலேகா முற்றிலும் புதிய பாணியில் அமைந்த நாவல் என்பதை எடுத்துக் காட்டவே இந்த ஒப்புநோக்கு இங்கு காட்டப்பட்டுள்ளது.

கேரளவர்மா வலிய கோயில் தம்புரான் எழுதியுள்ள அக்பர் மற்ளெரு சிறந்த நாவலாகும். இதனை சுமார் 1880-ம் ஆண்டு அளவில் அவர் எழுதியிருப்பார் என்று தோன்றுகிறது. இந் நூல் மலையாள மொழியில் எழுதப்பட்டுள்ளது என்பதைத் தவிர, கேரளத்தின் நிழல்கூட இதில் படவில்லை. இந்நூலில் கையாளப் பட்டுள்ள மலையாளம் சாதாரணமாக வழக்கில் உள்ள மலையாளம் அல்ல. வடமொழி அதிக அளவில் கலந்துள்ளது. எனவே இதனைப் புரிந்து கொள்வது சிறிது கடினமாக உள்ளது என்று சந்துமேனன் குறிப்பிட்டுள்ளார். இது மூலக் கதையல்ல. வெறும் மொழி பெயர்ப்பு மட்டுமே. டச்சு மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு ஆங்கிலத்திலிருந்து மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இந்த வகையில் பார்த்தால், மூல மொழியிலிருந்து நேரடியாக மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்ட நூல் அல்ல; இரண்டாவது மொழிபெயர்ப்பே என்பது விளங்கும்.

இந்துலேகா 1890ல் வெளிவந்தது என்று முன்னர் நாம் குறிப்பிட்டிருந்தோம். ''இந்த நூலை 1889 ஜுன் 11ம் நாளன்று எழுதத் தொடங்கினேன்; ஆகஸ்ட் 17ம் நாளன்று முடித்தேன்'' என்று சந்துமேனன் குறிப்பிட்டுள்ளார். இந்நூலை அச்சிட்டு வெளியிடுவது பற்றி முடிவெடுக்கவும் அதன் பின்னர் அதனை அச்சிடுவதற்கும் சிறிது காலம் பிடித்தது போலும். ''இந்நூலின் முதற் பதிப்பு 1890 ஜனவரி தொடக்கத்தில் விற்பனைக்கு வந்தது. மார்ச் 30ம் தேதிக்குள் அவை அனைத்தும் விற்பனையாகிவிட்டன'' என்று இந்துலேகாவின் இரண்டாவது பதிப்பின் முன்னுரையில் சந்துமேனன் குறிப்பிட்டுள்ளார். மலையாள நாவலுக்கு இந் நாளில் கூட அத்தகைய மதிப்பு இருப்பதில்லை. நம்பத்தகாத அளவுக்கு அந்த நாட்களில் இந்நூல் மக்களின் ஆர்வத்தை

ஈர்த்தது. இந்தநூல் அக்காலத்தில் புதிய படைப்பாகும். இன்றைக்குக்கூட இந்துலேகா மலையாள இலக்கியத்தில் தன்னிகரற்ற —தலைசிறந்த நாவலாக விளங்குகிறது.

அக்பர் என்னும் நூல் மலையாளத்தில் மொழி பெயர்க்கப்பட்டதற்குக் காரணமே தனி. திருவாங்கூர் மன்னர் இந்நூலின் ஆங்கில மொழிபெயர்ப்பைப் படித்து ரசித்தார். இந்நூலை மலையாளத்தில் மொழி பெயர்த்து மலையாளிகளுக்குக் கிடைக்குமாறு செய்யும்படி கேரளவர்மா வலிய கோயில் தம்புரானை, மன்னர் கேட்டுக்கொண்டார். இந்துலேகா உருவானதற்குப் பின்னணியாக இருந்தது வேறு சூழ்நிலை. தான் இந்துலேகா எழுதியதன் காரணங்களைச் சந்துமேனனே எழுதியுள்ளார். அவர் எழுதத் தொடங்கிய நூல் வேறு. அவருடைய நண்பர்களில் சிலருக்கு ஆங்கிலம் தெரியாது. மேனன் கதை சொல்வதில் வல்லுநர். அவர் படித்த ஆங்கில நாவல்களைச் சொல்லச் சொல்லிக் கேட்பதில் அவர்களுக்குத் தனி மகிழ்ச்சி. அவர்களில் ஒருவர் பீகன்ஸ் பீல்டு பிரபு எழுதிய ஹென்றியெட்டா டெம்பிள் என்னும் நாவலில் பெரும் ஈடுபாடு கொண்டார். அதனை மலையாளத்தில் மொழிபெயர்க்கும்படி அவர் மேனனைக் கேட்டுக் கொண்டார். மேனனும் அதற்கு இசைந்து மொழியாக்கப் பணியைத் தொடங்கினார். ஆயினும் போகப்போக இப்பணியில் அவர் மனம் ஈடுபடவில்லை. வெறும் மொழியாககம் விறுவிறுப்பாக இருக்காது, அதில் உயிர் இருக்காது என்று அவருக்குத் தோன்றியது. கதையை வாய்மொழியாகச் சொல்வதென்பது வேறு. அப்பொழுது கை, கால்களை அசைத்தும், நடித்தும், குரலை ஏற்றி இறக்கியும் வேறு பொருள்கள் பற்றி இடையிடையே பேசியும் கதைக்கு உயிரோட்டம் கொடுக்கலாம். மூல ஆங்கில நாவலில் உள்ள காதல் வசனங்களை மலையாளத்தில் மொழி பெயர்ப்பதும் எளிதல்ல என்பதையும் அவர் உணர்நதார். எனவே மொழி பெயர்ப்பை அவர் நிறுத்தினர். ஆனால் அவரது துணைவியார் அவ்வளவு எளிதாக அதை ஒப்புக் கொள்ளவில்லை. ஏறத்தாழ ஆங்கில பாணியில் அமைந்துள்ள மலையாள நாவலைத் தாம் அவருக்காக எழுதுவதாக மேனன் தம் துணைவியாருக்கு வாக்களித்தார். இது 1889 ஜனவரி திங்களில் நடைந்தது. ஆனால் இப்பணி தொடங்குவதை அவர் ஒத்திப் போட்டுக்கொண்டே வந்தார். ஆனல் நிலையாக ஒத்திப் போட முடியாத வண்ணம் அவரது துணைவியார் வற்புத்திக் கொண்டே வந்தார். ஜூன் 11-ம் நாளன்று இந்நாவலைத் தொடங்கினர். ஒன்பதே வாரங்களில் இந்துலேகா முடிவுற்றது. அவர் தொழில் முறையில் எழுத்தாளர் அல்ல. எழுதுவதில் அவருக்கு அனுபவமும் இல்லை. இது அவர் எழுதிய முதல் நாவல். அதுவும் அன்றுடம் அலுவலகப்

பணியைக் கவனித்து வந்த பிறகு அதை எழுதினுர் என்பதை நினைவில் கொள்ளவேண்டும். நண்பர்களுடன் விவாதித்து ஆங்காங்கே மெருகேற்ற அவருக்கு நேரமில்லை. ஒவ்வொரு நாளும் அவர் சந்தித்த மனிதர்களைப் பற்றி, அவர்கள் அன்ருட வழக்கில் பயன்படுத்தும் சொற்களை வைத்துக் கொண்டே பக்கம் பக்கமாக எழுதித் தள்ளினுர். அவரது எளிய நடை மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தது. பாத்திரங்களுடன் தாம் நேரே நெருங்கிய தொடர்பு கொள்வது போன்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட்டது. நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர் நிகழ்ந்த சம்பவங்கள் பற்றி அவர் எழுதவில்லை. அவர் நாவலில் வந்த மனிதர்களை அவர்கள் நேரில் கண்டவர்கள். அந்தப் பாத்திரங்கள் மர்மமாக நடந்து கொள்ளவில்லை; கதை ஆசிரியரும் எதையும் ரகசியமாக மறைக்கவும் இல்லை. ''மார்த்தாண்ட வர்மாவும்'' ''அக்பரும்'' பழைய முறைகளே சிறந்தவை என்று தோன்றுகிற வகையில் அமைந்திருந்தன. அரசருக்கு அல்லது சிற்றரசர்களுக்கு உண்மையாக நடந்து கொள்ள வேண்டிய அவசியம் பற்றியும் அவர்களைக் காப்பற்ற அல்லது அவர்களது நற்பெயரைப் பாதுகாக்கத் தியாகம் செய்ய வேண்டிய கடமை பற்றியும் மார்த்தாண்ட வர்மாவில் பன்னிப் பன்னி எழுதப் பட்டிருந்தது. ஆனுல் சந்து மேனனின் இந்துலேகா எழுதப்பட்டிருந்த பாணியே வேறு. பழைய முறையில் இருந்த விரும்பத்தகாத அம்சங்களை அகற்றத் துடிதுடித்துக் கொண்டிருந்த சக்திகளை, மருமக்கள் தாயம், தரவாடு முறையின் ஒருமைப் பாட்டிற்கும் வளமான வாழ்வுக்கும் ஊறுவிளைவிக்கக்கூடிய வகையில் பழைய முறையில் அமைந்திருந்த அவசியமற்ற, அர்த்தமற்ற அம்சங்களைக் களைந்தெறிய எழுந்து வந்துள்ள இளைய பாரதத்தின் இளவல்கள் பற்றியும் அழகாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது.

பழைய முறையின் பத்தாம் பசலித்தனத்தை வேண்டுமென்றே அம்பலப் படுத்த மேனன் துணிந்தாரா என்பது பற்றி நாம் திட்டவட்டமாக ஒன்றும் சொல்ல முடியாது. ஆனுல் அவருக்கு வேறு ஒரு எண்ணம் இருந்தது என்பது நமக்குத் திண்ணமாகத் தெரியும். ஏனெனில் இந்துலேகாவின் ஒரு படியை வில்லியம் டூமெர்க்குக்கு அனுப்புகையில் அவர் தனது எண்ணங்களை வெளிப் படுத்தியுள்ளார். இத்தகைய நாவல் ஒன்றைப் படிக்கத் தமது துணைவியாருக்கு இருந்த ஆர்வத்தைப் பூர்த்திசெய்ய அவர் விரும்பியது முதற் காரணம். எனது வாசகர்களில் ''ஆங்கிலம் தெரியாத மலையாளிகள் பலர் உள்ளனர். ஆங்கில நாவல் இலக்கியம் பற்றி இவர்களுக்குத் தெரியாது. இயற்கைக்கு ஒவ்வாத, முட்டாள் தனமான, நகைப்பிற்கிடமான, நடக்க முடியாத கதைகளை மலையாளத்தில் படித்தே இவர்களுக்குப் பழக்கம். ஆங்கில

நாவல் இலக்கியத்தில், இவர்களுக்கு ஈடுபாட்டை ஏற்படுத்தி, குறிப்பிட்ட சூழ்நிலையில் அவர்களது குடும்பங்களில் ஏற்படுவது போன்ற நிகழ்ச்சிகள், விவகாரங்கள் அடங்கிய கதை ஒன்றை அவர்கள் ரசிக்கின்றனரா என்று பார்க்க விரும்புகிறேன். அறிவும் அழகும் நிரம்பிய நமது நாயர் பெண்களுக்கு ஆங்கிலக் கல்வி கற்பிக்கப்பட்டால் அவர்கள் எந்த நிலைக்கு உயர முடியும், எந்த அளவுக்குச் சக்தியடைய முடியும், செல்வாக்குப் பெறமுடியும் என்பதை எனது மலையாள சகோதரர்களுக்கு விளக்கிக் காட்டுவதும் எனது அவா. பயன்படுத்தப்படாத காரணத்தினாலும் தவறாகப் பயன்படுத்தப்படும் காரணத்தினாலும் வெகுவிரைவாக நலிந்து வரும், மலையாள இலக்கியத்திற்கு உயிரூட்டி, சீர்படுத்த எனது எளிய இந்தப்படைப்பை அளிக்க வேண்டுமென்பதே இறுதியான காரணமாகும்.'' என்று அவர் எழுதியுள்ளார்.

டுமெர்க்குக்கு அவர் எழுதிய கடிதத்தின் கடைசி வரியில், அவர் எழுதியது: ''எனது நாட்டு மகளிரின் நிலையையும் நிலைமையையும் பொதுவாக உயர்த்தும் நோக்கத்துடனேயே நான் இந்துலேகாவை எழுதினேன்.''

அவர் இக்கதையை எழுதுகையில் அவரது ஊக்கத்தைக் குறைக்கும் வகையில் பலர் பலவிதமாகக் கருத்துக்கள் தெரிவித்தனர். ''நீங்கள் நூல் எழுதுவதாக இருந்தால், விஞ்ஞானத்தைப்பற்றி எழுதுங்கள். மலபாரில் நமக்கு வேறு எதுவும் தேவையில்லை''. என்று ஆலோசனை நல்கினார் நண்பர் ஒருவர். கதையைக் கேட்ட மற்றொருவர் ''இதில் பயன் ஒன்றுமில்லையே! இதில் வரும் சம்பவங்கள் உண்மையானவை அல்லவே! வெறும் கற்பனை தானே'' என்றார். மலையாளி குடும்பத்தில் சாதாரணமாக நடக்கும் நிகழ்ச்சிகள் பற்றியே கதை அமைந்திருப்பதால், கதையைப் படிப்பவர்களுக்கு அதில் விறுவிறுப்பு இருக்காது என்று கருத்துத் தெரிவித்தனர் மற்றும் சிலர்; படிப்பவர்களுக்குக் கதையில் கருத்தூன்ற வேண்டுமாயின் கதையில் தெய்வீக சக்திகள் இடம் பெறவேண்டும் என்று வேறு சிலர் கருத்துத் தெரிவித்தனர். கதையில் இயற்கையான சக்திகள் இருந்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட தெய்வீக சக்திகள் இருந்தாலும், சம்பவங்கள் சாதாரணமாக இருந்தாலும் அசாதாரணமாக இருந்தாலும் கதையைச் சரிவர எழுதினால் அது மக்களால் பெருமளவில் விரும்பப்படும் என்று சந்துமேனன் திண்ணமாக நம்பினார். கதையை முறைப்பட எழுத வேண்டும் என்று சந்துமேனன் திட்டவட்டமாகக் கூறினார். அவர் கூறியது மிகவும் சரியாகும், குறிப்பாக இந்துலேகாவைப் பற்றிய வரையிலுமாவது சரியாகும். அது மக்களால் விரும்பப்பட்டது என்று சொன்னால் அதன் பெருமையை மட்டுப்படுத்துவதாகும். அது சமுதாயத்தில் பெரும்

பரபரப்பை யூட்டியது என்று சொன்னால் மிகையாகாது. முதல் பதிப்பு முழுவதும் மூன்று மாதங்களுக்குள் விற்பனையாகிவிட்டது. 1890—1956 ஆகிய ஆண்டுகளுக்குள் ஐம்பத்து மூன்று பதிப்புகள் வெளிவந்துள்ளன.

இந்துலேகா முதன் முதலில் வெளியிடப்பட்டதிலிருந்து இரண்டு ஆண்டுகளுக்குள் அதாவது 1892-ல் சந்துமேனனின் இரண்டாவது நாவலாகிய சாரதாவின் முதல் பாகம் வெளியாகியது. இந்த இரண்டு ஆண்டுகளில் தனது இரண்டாவது நாவலுக்கான (சாரதா) கருப்பொருளையும் கருத்துக்களையும் அவர் சேகரித்தார். மருமக்கள் தாயம் தரவாடு குடும்பத்தில் ஏற்றுக் கொள்ளப்படுவதற்காக ஒருவரது உரிமைக் கோரிக்கை பற்றிய வழக்குக் குறித்து இந்த நாவலில் எழுதப்பட்டது. இடைப்பட்ட இரண்டு ஆண்டுகளில் பொறுப்பு வாய்ந்த நீதிபதி என்ற முறையில் மேலும் அனுபவம் பெற்றார். மலபார் திருமண முறை ஆய்வு ஆணைக்குழு உறுப்பினர் என்ற முறையில் அவர் ஆற்றிய பணி மிகவும் முக்கியமாகும். மலபாரில் உள்ள பல்வேறு குடும்பங்களின் வரலாற்றை அவர் இப்பணியின்போது தெரிந்து கொள்ள முடிந்தது. பல்வேறு வகைக் குடும்ப ஏற்பாடுகள், குடும்பத் தினரின் பல்திறப்பட்ட பற்றுகள், குடும்பத்தில் உள்ள கருத்து வேறுபாடுகள், வெளியார் தலையீட்டினால் பூசல்களாகவும் சச் சரவுகளாகவும் மாறுதல், சிக்கல் வாய்ந்த, நீண்டகாலம் இழுத்துச் செல்கிற நீதிமன்ற வழக்குகளினால் குடும்பங்கள் அழிந்து போதல், புதிய குடும்பங்கள் கிளைத்தல் போன்ற பல்வேறு விவரங்களை அவர் தெரிந்து கொண்டார். ஆணைக்குழுவின் ஆய்வு விசாரணைப் பணியின் போது, பல்வேறு நபர்களைச் சந்தித்தார்; பல்வேறு நிகழ்ச்சிகள் பற்றி அறிந்து கொண்டார். இவையெல்லாம் அவர் எழுத நினைத்த நாவலில் அருமையாகப் பயன்படுத்தப்பட்டன. 1889 ஜூன் முதல் ஆகஸ்ட் வரையில், நீதிமன்றப் பணி முடிந்த பிறகு தமது ஓய்வு நேரத்தில் இந்துலேகாவை அவர் எழுதிக் கொண்டிருந்தார். இந்நூலை எழுதுவதாக 1889 ஜனவரியில் அவர் தமது துணைவியாருக்கு உறுதி அளித்திருந்தார். ஜூன் 11-ம் நாளன்று இந்நாவலை எழுதத் தொடங்கினார். ''ஜூன் திங்களுக்கு முன்னரே இந்நூலின் கதை பற்றி நான் சிந்திக்கத் தொடங்கிவிட்டேன். அவ்வப்போது, அவசியமான போதெல்லாம், குறிப்புகள் தயாரித்து அவற்றைப் பாதுகாத்து வந்தேன்'' என்று இந்துலேகாவின் இரண்டாவது பதிப்புக்கு முன்னரே எழுதுகையில் அவர் குறிப்பிட்டார். இப்பணியும் நீதிமன்றப் பணிகளை முடித்த பிறகு செய்யப்பட்டது. முதல் நாவல் வெற்றி நடைபோட்டதைக் கண்டு மகிழ்ச்சியடைந்த அவர், துணிவு பெற்று 1890 முதல் 1892 வரையில் நீதிமன்றத்தில் வழக்குகளை விசாரணை செய்யும்

போதும் ஆணைக்குழுவின் ஆய்வு விசாரணையின் போது பல் வேறு தரவாடு உறுப்பினர்களைக் கண்டு பேசியபோதும் சாரதா வுக்கான குறிப்புகளை எடுத்துக் கொண்டார். 1892-ல் அதாவது ஆணைக்குழுவின் அறிக்கை வெளியிடப்பட்ட ஓராண்டுக்குப் பின்னர் சாரதாவின் முதல் பாகம் வெளிவந்தது. அந்த நூலின் முன்னுரையில் ஆகஸ்ட் 19, 1892 என்று நாளிட்டு அவர் சுருக்கமாக முன்னுரை எழுதியுள்ளார். ''மலையாள மொழியில் வெளிவரும் நாவல்களின் எண்ணிக்கை நாள் தோறும் பெருகி வருகின்றன. இந்நாட்களில் இத்தகைய இரண்டாவது நாவலை நான் எழுதுகிறேன். எனவே நான் சிறப்பாக ஒன்றும் சொல் வதற்கில்லை.''

இம் முன்னுரை இருபது வரிகள் கூட இல்லை. இந்துலேகாவின் முன்னுரை ஐந்து பக்கங்கள் ஓடின. ஏனெனில் அது அவரது முதல் நாவல் மட்டுமல்ல; அத்தகைய நாவல் வருவது அதுவே முதல்முறை. எனவே இத்தகைய நாவலைத் தாம் எழுதத் துணிந்த சூழ்நிலைகளை விவரிப்பது பொருத்தமாகும் என்று அவர் கருதினார். சாரதாவின் முதல் பாகம், நண்பர்களின் வற்புறுத்தலினால் வெளி யிடப்படுகிறது என்றும் ஆண்டு முடியுமுன் இரண்டாவது, மூன் றுவது பாகங்களை வெளியிட முடியும் என்று தாம் நம்புவ தாகவும் சாரதாவின் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார். ஆனால் காலன் அவரை முந்திக் கொண்டான். நீதித் துறைக்கும் மலை யாள இலக்கியத்திற்கும் அது ஒரு ஈடு செய்ய முடியாத பேரிழப் பாகும்.

# 4. இந்துலேகா

இந்துலேகா ஒரு காதல் கதை. இளங்காதலர்கள் பிரிக்கப் படுகின்றனர்; பிரிவாற்றுமையால் வருந்துகின்றனர்; துன்புறு கின்றனர்; பின்னர் ஒன்று சேர்கின்றனர்; மகிழ்ச்சியுடன் வாழ் கின்றனர். இதுதான் கதைச் சுருக்கம்.

டூமார்க்கின் வசதிக்காக கதைச் சுருக்கம் ஒன்றைச் சந்து மேனனே தயாரித்தார். கதையின் முக்கியமான அம்சங்கள் என்று அவர் கருதிய, டூமார்க்கும் ஏனைய வாசகர்களும் கருத்தில் கொள்ளவேண்டுமென அவர் விரும்பிய நிகழ்ச்சிக் குறிப்புகள்

மேற்குறிப்பிட்ட சுருக்கத்தில் அடங்கியுள்ளன. அச்சுருக்கம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது:—

''கதைத் தலைவன் பெயர் மாதவன். அவன் தரவாடைச் சேர்ந்த பையன், ஒருவனது கல்விப் பயிற்சி குறித்து, காரண வனுடன் அல்லது குடும்பத் தலைவனுடன் சச்சரவிட நேர்ந்தது. இது பற்றி மாதவனும் நாயர் தரவாடைச் சேர்ந்த ஏனைய உற வினர்களும் விவாதித்துக் கொண்டிருக்கின்றனர். இப்படித்தான் என் கதை தொடங்குகிறது. கதையின் முக்கிய நிகழ்ச்சிகள் கொச்சியின் அருகாமையில் உள்ள இடத்தில் நடந்தன என்று கொள்ளலாம்.

நாவலில் வரும் முக்கியமான பாத்திரங்கள்:—

1. பஞ்சுமேனன்; சம்பழியாட் பூவல்லி இல்லத்தின் காரணவன் அல்லது இல்லத் தலைவர்;
2. பஞ்சுமேனனின் இளவல் சங்கரமேனன்;
3. பஞ்சுமேனனின் நேரடி சகோதரியின் மகள் பார்வதி அம்மா;
4. பார்வதி அம்மாவின் மகன் மாதவன்; பி.ஏ.,பி.எல்;
5. பஞ்சுமேனன் பாட்டியின் சகோதரியின் பேத்தி கும்மினி அம்மா;
6. கும்மினி அம்மாவின் பிள்ளை சாதர் மேனன்;
7. கும்மினி அம்மாவின் மகன் கோபாலன்;
8. கும்மினி அம்மாவின் மகள் கல்யாணிக் குட்டி;
9. கும்மினி அம்மாவின் மகன் சின்னன் (9 அல்லது 10 வயதுப் பையன்);
10. பஞ்சுமேனனின் மனைவி குன்ஹி குட்டி அம்மா;
11. பஞ்சுமேனன் மகள் லட்சுமி குட்டி அம்மா;
12. பஞ்சுமேனன் மகன் கோவிந்தகுட்டி மேனன்;
13. லட்சுமி குட்டி அம்மாளின் மகளும் பஞ்சுமேனனின் பேத்தியுமாகிய இந்துலேகா;
14. இந்துலேகாவின் தந்தையாகிய கில்மனூர் ராஜாவை (இவர் தற்போது இறந்து விட்டார்) முதலில் மணந்த லட்சுமிகுட்டி அம்மாவின் இரண்டாவது கணவர் கேசவன் நம்பூத்ரி;
15. மாதவன் தந்தை கோவிந்த பணிக்கர்.

சாதர் மேனனுக்கும் மாதவனுக்குமிடையே நடக்கும் உரையாட லுடன் அத்தியாயம் தொடங்குகிறது. சாதர் மேனனுக்கு ஆங்கிலம் தெரியாது. எனினும் கூர்மையான அறிவுடையவன்; விவேகமுள்ள இளைஞன்; சாதர் மேனனின் சொந்தத் தம்பிக்காகத்தான் மாதவன் பரிந்து பேசினாலும், மாதவன் காரணவனிடம் பேசிய

முறை மேனனுக்குப் பிடிக்கவில்லை. சச்சரவின் காரணம் வருமாறு:—

காரணவன் பஞ்சுமேனன், சின்னப் பையன் சின்னனுடைய பள்ளிப் படிப்புக்கான செலவை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று மாதவன் கூறினார். எழுபது வயதான பஞ்சுமேனன் குறுகிய மனப்பான்மை கொண்டவர்; அவர் மாதவனின் கருத்துக்களை ஒப்புக் கொள்ளவில்லை. அவர் சின்னப் பையனது பள்ளிச் செலவை ஏற்க மறுத்தார். இதனால் வயது முதிர்ந்த காரணவனுக்கும் இளம் பட்டதாரிக்கும் கடுமையான வாய்ச் சண்டை ஏற்பட்டது. மாதவன் துடுக்குத்தனமாகப் பேசிவிட்டதாக காரணவன் கருதினார். மாதவன் மீது கடுமையான கோபம் கொண்டார். பஞ்சுமேனனின் நடத்தை கண்டு மாதவனும் சினந்தார். தனது நேரடி அனந்தரவன்களிடம் பஞ்சுமேனன் காட்டும் ஓரவஞ்சனையை நேர்மையும், துணிவுமுள்ள மாதவன் வெறுத்தார். மாதவனைப்போல சின்னனும் நேரடி அனந்தவரவனாக இருந்தால் அவனது படிப்புக்காக பஞ்சுமேனன் எவ்வளவு பணம் வேண்டுமானாலும் செலவிட்டிருப்பார். ஆனால் அப்பையன் பஞ்சுமேனனின் தூரத்து உறவினன். மாதவனைப் போல அல்லது தரவாடைச் சேர்ந்த மற்றவரைப் போல தரவாடு செலவில் கல்வி பெற அந்தப் பையனுக்கும் உரிமை உண்டு என்றாலும் மலபாரில் உள்ள தரவாடுகளில் வயதான, அறிவிலியான, மூர்க்கத்தன்மை வாய்ந்த காரணவர்கள் தங்களது நேரடி மருமக்களைத்தான் படிக்க வைப்பார்கள். தூரத்து உறவினர்களை விவசாயிகளாக அல்லது தரவாடைச் சேர்ந்த வேலைக்காரப் பையன்களாகவே வளர்ப்பது வழக்கம்: அது வியப்பானதுமல்ல. உயர் உணர்வும் நேர்மையும் மிகுந்த இளைஞரான மாதவன் காரணவனின் நடத்தை, கண்டிக்கத்தக்கது என்றும் இழிவானது என்றும் கருதினார். எனவே காரணவன், தரவாடின் தலைவர் என்பதை மதிக்காமலேயே அவரைக் கண்டித்துப் பேசினார். இது பற்றி மாதவனுக்கும் அவரது இளைய மாமன் சங்கரமேனனுக்கும் தாய் பார்வதி அம்மாவுக்கும் இடையே நடக்கும் உரையாடலுடன் இந்த அத்தியாயம் முடிவடைகிறது. மாதவனது உருவம், உடற்கட்டு, அறிவுத் திறமை ஆகியவை பற்றியும் விரிவாக இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

மாதவன் கலை-சட்டப்பட்டதாரி. எடுப்பான தோற்றம் உடையவர்; அசாதாரணமான அறிவு படைத்தவர்; வடமொழியில் புலமை மிக்கவர். விளையாட்டுப் போட்டிகளிலும் கிரிக்கெட், டென்னிஸ் போன்ற ஆங்கிலேய விளையாட்டுக்களிலும் நல்ல திறமை படைத்தவர்.

இரண்டாவது அத்தியாயம் கதைத் தலைவியைப் பற்றியதாகும். பெண்களின் அழகு பற்றிய பொதுவான கருத்துக்களுடன் இந்த அத்தியாயம் தொடங்குகிறது. அதன் பின்னர் இந்துலேகாவின் தனிபட்ட அழகு, அறிவு, கல்வி, நடை, உடை, பாவனைகள் ஆகியவை பற்றி விவரிக்கப்படுகிறது. மாதவனும் இந்துலேகாவும் திருமண உறுதி ஒப்பந்தம் எவ்வாறு செய்து கொள்கின்றனர் என்பதை விவரித்து முடிகின்றது.

அவர்கள் திருமண உறுதி ஒப்பந்தம் செய்து கொண்ட சில மாதங்களுக்குப் பின்னர் நடந்த சம்பவங்களுடன், என் கதை தொடங்குகிறது என்பதை இங்கு குறிப்பிடவேண்டும்; நமது கதை தொடங்குவதற்கு முன்னர், மாதவன் காதல் வாழ்க்கையில் சில சம்பவங்களை இரண்டாவது அத்தியாத்தில் நான் விவரித் துள்ளேன். ஆங்கில பாணியில் நாவல் ஒன்றை எழுதுவதே என் நோக்கம் என்பதைத் தொடக்கத்திலேயே நான் குறிப்பிட்டுள் ளேன். சாதாரண மலையாளி பெண் ஒருத்தியால் அத்தகைய கதையின் தலைவியாக விளங்கமுடியாது என்பது தெளிவு. எனவே என் இந்துலேகா சாதாரண மலையாளிப் பெண் அல்ல. நமது கதை தொடங்கும் சமயத்தில் ஏறத்தாழ பதினேழே ஆண்டுகள் நிரம்பிய இந்துலேகா ஆங்கிலம், வடமொழி, இசை முதலியவை பயின்றவர்; எழிலே உருவெடுத்தவர்; கலைத்திறன் நிறைந்தவர். இந்துலேகாவைப் போன்று அறிவும் திறனும் நிரம்பிய இளம் நாயர் பெண்ணை மலபாரில் காண்பது இயலாத செயலாகும் என்று சிலர் கண்டிக்கலாம். தற்போது மலபாரில் உள்ள படித்த பெண்களை, அவர்கள் அறிந்ததில்லை என்று மட்டும் குறை கூறு பவர்களுக்குத் தெரிவித்துக் கொள்வேன். எனக்குத் தெரிந்த இரண்டு மூன்று நாயர் பெண்கள்—அவர்களுக்கு ஆங்கிலம் தெரி யாது என்ற குறை ஒன்றைத் தவிர அறிவு, திறமை, பண்பு, நெஞ்சுரம் ஆகியவற்றில் இந்துலேகாவை ஒத்தவர்கள் ஆவர். அழகு, வனப்பு, நடத்தை, நயம், எளிய பழக்க வழக்கங்கள், பேச்சுத் திறமை, சொல்திறன், கூர்மையான அறிவு, நகைச்சுவை ஆகியவற்றைப் பொறுத்தவரையில் இந்துலேகாவின் தரத்திற்கு வரக்கூடிய நுற்றுக் கணக்கான இளம் பெண்களை நாயர் தர வாடுகளில் நான் காண்பிக்க முடியும்.

இந்துலேகாவின் ஆங்கில அறிவு ஒன்றுதான் எனது வாசகர்கள் ஒப்புக் கொள்ள இயலாத ஒன்றாகும்; அது நியாயமே. மலையாளி இளம் பெண் ஒருத்தி, தன்னிடம் இயற்கையாக அமைந்துள்ள அழகு, ஆற்றல், அறிவு, பண்பு ஆகியவற்றுடன் ஆங்கில அறிவும் பெற்றிருந்தால், வாழ்க்கைத் துணைவனைத் தேடிக் கொள்வது போன்ற முக்கியமான விவகாரங்களில் எவ்வாறு நயம்பட, திறம் பட நடந்து கொள்வாள் என்பதை விளக்குவதே இந்நூலை எழுதி

யதன் நோக்கங்களில் ஒன்ருகும். என்னுடைய இந்துலேகா, உலகிலேயே உயரிய ஆங்கில மொழியை அறிந்திருப்பது அவசியம் என்று நான் கருதினேன். இந்துலேகா ஆங்கில மொழி அறிவையும் ஏனைய தகுதிகளையும் அடைந்த சூழ்நிலையை நான் விவரித்துள்ளேன். அவளுடைய கல்வி தொடர்பாக நான் எழுதியுள்ளதில் ஒவ்வாதது ஏதேனும் உள்ளதா என்பதை முடிவு செய்யும் பொறுப்பை நான் எனது வாசகர்களுக்கே விட்டுவிடுகிறேன்.

மாதவன் காதல் பற்றியும் தன் காதலை வெளிப்படுத்தி அவர் நடந்து கொண்ட முறை பற்றியும் இந்த அத்தியாயத்தில் கண்டுள்ளதைப் பொறுத்த வரை, கல்வித்தகுதி பெற்ற, நாயர் வகுப்பைச் சேர்ந்த காதலர்களிடையே இவ்வாறு உரையாடல் நடப்பது, அல்லது அவர்கள் கருத்தொருமிக்க காதலர்களாக நடந்து கொள்வது விந்தையல்ல என்பது எனது தாழ்மையான கருத்தாகும். இந்துலேகா போன்று, தம் காதலர்களுடன் உரையாட வல்ல நாயர் பெண்கள் பலர் மலபாரில் உள்ளனர். திருமண உறுதி ஒப்பந்தத்தைப் பொறுத்தவரை, அதில் விந்தை எதுவும் இருப்பதாக அல்லது சாதாரணமாக நடக்கக்கூடாதது ஒன்று நடந்து விட்டதாக எனக்குத் தோன்றவில்லை. மதிப்பு வாய்ந்த தரவாடுகளைச் சேர்ந்த, கல்வி அறிவும் ஏனைய தகுதிகளும் பெற்ற நாயர் பெண்கள் பலர், தங்கள் காரணவர்களை அல்லது பெற்றோர்களை எதிர்த்து, தாங்கள் விரும்பிய காதலரைத் திருமணம் செய்துக் கொண்டுள்ளது எனக்குத் தெரியும். காதல் என்பது இங்கிலாந்திலாயினும் இந்தியாவிலாயினும் ஒன்று தான். மலபாரில் உள்ள பெண்கள் திருமணத்தைப் பொறுத்தவரையில் தங்கள் காரணவர்கள் அல்லது பெற்றோர்களின் கண்டிப்பான கட்டுப்பாட்டுக்குட்பட்டவர்கள் என்பது உண்மைதான். ஆனல், தத்தம் வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதில் இந்தியாவில் வேறு எந்தப் பகுதியில் உள்ள பெண்களையும்விட மலபாரில் உள்ள நாயர் பெண்களே அதிக உரிமை உடையவர்கள் என்பது எனது கருத்து. மேற்கத்திய நாகரிகம் மலபாரில் பரவுவதற்கு முன்னரே, வடமொழியில் புலமை பெற்று, கவிதைகள் புனையும் ஆற்றல் வாய்ந்த நாயர் பெண்கள் பலர் மலபாரில் இருந்துள்ளனர்; பலர் இசையில் தேர்ச்சியும் பெற்றிருந்தனர். இருபது ஆண்டுகளுக்குப் பின்னர் மலபாரில் நூற்றுக்கணக்கான இந்துலேகாக்கள் இருப்பர். காதலுக்காகவே வாழ்ந்து கடிமணம் செய்து கொள்ளக்கூடிய இந்துலேகாக்கள் நூற்றுக்கணக்கில் மலபாரில் இருப்பார்கள். திருமண வயதை அடையும் போது தன்னிடம் முதலில் பழகி, நண்பனுகி, சிறுகச் சிறுக அந்த நட்பு அன்பாக அரும்பி அப்பால் காதலாக மலரும். தானின்றி வாழமுடியாது என்ற நிலை உருவாகி தனக்காக, தன்

கடைக்கண் பார்வைக்காகக் காற்றிலேறி விண்ணையும் சாடும் ஆற்றல் படைத்த, மாதவன் போன்ற நன்கு படித்த, எடுப்பான தோற்றமுடைய, தூய ஒழுக்கமுடைய இளைஞனைக் கண்டு, அவனது இனிய பண்புகளை ஆய்ந்தறிந்து பாராட்டிக் காதலிக்கும் வாய்ப்புக் கிடைத்தால் எவ்வளவு இன்பமாயிருக்கும் என்பதையும், தான் காதலிக்கும் இளைஞரையே திருமணம் செய்து கொள்ளும் சுதந்திரம் இருந்தால் அவர்கள் எவ்வளவு மகிழ்ச்சிகரமாக இருக்கமுடியும் என்பதையும் மலபாரில் உள்ள இளம் பெண்கள் தெரிந்து கொள்வதற்காகவே மாதவனது காதல் பற்றி விவரமாக எழுதியுள்ளேன். இரு பாலாரிடத்தும் எழுகின்ற இத்தகைய தூய்மையான, இனிமையான, காதலிலிருந்து எழும் திருமணத்தைத்தான் உண்மையான திருமணம் என்று சொல்ல முடியும். தங்கள் திருமணம் பற்றி முடிவு செய்துகொள்வதில் ஏனைய இந்துப் பெண்களைவிட அதிக சுதந்திரத்தை முன்னரே அனுபவித்து வரும் நாயர் பெண்கள், இந்த வழியிலேயே தங்களது வாழ்க்கைத் துணைவர்களைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும் என்பது எனது உள்ளமெல்லாம் நிறைந்த ஒரு விருப்பம்.

மாதவனை மணந்துகொள்ள இந்துலேகா விரும்புகிறாள் என்று ஐயப்படுவதற்குப் பஞ்சுமேனனுக்குப் போதிய காரணம் இருப்பினும் அத்திருமணத்தைத் தடை செய்ய அவர் விரும்பவில்லை. அவர்கள் திருமணம் உறுதி செய்யப்பட்ட ஒரு சில திங்களுக்குப் பின்னர்தான் பஞ்சுமேனனுக்கும் மாதவனுக்கும் சச்சரவு ஏற்பட்டது. சச்சரவுக்குப் பின்னர்தான் அத்திருமண ஏற்பாட்டை முறிக்க, பஞ்சுமேனன் முடிவு செய்தார்.

இருபது அத்தியாயத்தில் அடங்கியுள்ள கதையை (498 பக்கம் நெருக்கமாக அச்சிட்டது) ஒரு கடிதத்திற்குள் சுருக்கமாக எழுதுவதென்பது எளிய செயல் அல்ல.

இந்துலேகா—மாதவன் திருமண ஏற்பாட்டைக் குலைக்க பஞ்சுமேனன் முடிவு செய்த பின்னர் நிகழும் சம்பவங்கள், மலபாரில் நாயர் தரவாடு ஒன்றில் சாதாரணமாக நிகழ்பவை. இதற்கென்று தனியாக விளக்கம் எதுவும் தேவையில்லை. மலபாரில் உள்ள பல்வேறு வகை மக்களின் இயல்பை அவை விவரிப்பவையாகும். நான் இம்முயற்சியில் எந்த அளவுக்கு வெற்றியடைந்துள்ளேன் என்பதை என் வாசகர்கள்தான் முடிவு செய்ய வேண்டும். சமுதாயத்தில் உயர்ந்த நிலையில் உள்ள நாயர்கள், தாழ்ந்த நிலையில் உள்ள நாயர்கள், பல்வேறு நிலைகளில் உள்ள நம்பூத்ரிகள், பட்டர் பிராம்மணர்கள் ஆகிய பல்வேறு பாத்திரங்களை நான் என் கதையில் கொண்டு வந்துள்ளேன். ஐரோப்பிய அதிகாரிகளும் அவர்களது இந்திய நண்பர்களும் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டார்களானால் அவர்களிடையே

எத்தகைய உறவு நிலவும் என்பதையும் நான் குறிப்பிட்டுள்ளேன். இவற்றையெல்லாம் விவரிப்பதற்காக, சில இடங்களில் கதையின் ஓட்டத்தை மலபாருக்கு வெளியிலும் ஓட்டிச் சென்றுள்ளேன்.

மாதவன்—இந்துலேகா திருமணத்தில் இந்துலேகா மட்டுமல்ல, அவளது தாயாரும் (பஞ்சுமேனனின் சொந்த மகள்) ஆர்வம் காட்டி வருவதுடன் அவர்கள் காதல் வெற்றிபெற, இந்துலேகாவின் தாய் ரகசியமாக உதவி செய்துவருவதைத் தெரிந்துகொண்ட பஞ்சுமேனன் சினம் கொள்கிறார். மாதவன், இந்துலேகாவை மணம் செய்துகொள்ள ஒரு நாளும் அனுமதிக்க முடியாது என்று குடும்ப தேவதையின் முன் சபதமெடுத்துக் கொள்கிறார். மாதவனைத் திருமணம் செய்துகொள்ளும் எண்ணத்தைக் கைவிடுமாறு தம் பேத்தியை வற்புறுத்துகிறார். ஆனால் இந்துலேகாவின் கனிந்த காதல் உள்ளத்தை அவரால் மாற்ற முடியவில்லை. எனவே பல்வேறு சூழ்ச்சி முறைகளைக் கையாள்கிறார். செல்வமும் செல்வாக்கும் மிக்க நம்பூத்ரி ஒருவரை, இந்துலேகாவுடன் பழக விடுகிறார். அந்த நம்பூத்ரி தன் செல்வத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி இந்துலேகாவைத் தன் வயப்படுத்தி விடுவார் என்று பஞ்சுமேனன் நம்புகிறார். இந்த நம்பூத்ரி, மலபாரில் சாதாரணமாகக் காணப்படும் செல்வம் மிக்க, ஒழுக்கமற்ற, வரம்பற்ற நம்பூத்ரிகளில் ஒருவர். இந்துலேகாவைத் தன் வயப்படுத்தும் முயற்சியில் நம்பூத்ரி தோல்வியடைகிறார். நம்பூத்ரியைத் திருப்திப்படுத்துவதற்காக பஞ்சுமேனன், அறிவிலியான, நாதியற்ற மருமகள் ஒருத்தியை, அவ்வொழுக்கங்கெட்ட, வரன்முறையற்ற, நம்பூத்ரிக்குத் திருமணம் செய்து கொடுக்கிறார். நம்பூத்ரி, இந்துலேகாவுக்குக் காதல்வலை விரிக்கையில், இந்துலேகாவின் சொந்தத்தாய் உட்பட பஞ்சுமேனன் இல்லத்தில் உள்ள வேறு சில பெண்களுக்கும் வலைவிரிக்கிறார்.

பஞ்சுமேனன் மருகமளை மணம் செய்து கொண்ட பிறகு, நம்பூத்ரி, இந்துலேகாவின் மீது தாம் கொண்ட பகைமை காரணமாக, இந்துலேகாவின் மீது வஞ்சம் தீர்க்கும் நோக்கத்துடன் வதந்தி ஒன்றைப் பரப்புகிறார். இந்துலேகா தனது காமக் கிழத்தியாகிவிட்டாள் என்பதே அந்த வதந்தி. நம்பூத்ரியின் காரியஸ்தர் ஒருவர் தமது தந்திரமான, விஷமத்தனமான பிரச்சாரத்தினால் பல்வேறு மக்களை இந்த வதந்தியை நம்பும்படிச் செய்கிறார். இதற்கிடையில், மாமனுடன் சச்சரவு காரணமாக சென்னையில் எதிர்ப்பை வெளிப்படையாகவே புறக்கணித்து, இந்துலேகாவைத் திருமணம் செய்து கொள்ள மாதவன் மலபார் வருகிறார். இந்துலேகா நம்பூத்ரியின் காமக் கிழத்தியாகவோ மனைவியாகவோ ஆகிவிட்டார் என்ற வதந்தி, வரும் வழியில்

அவர் செவிக்கும் எட்டுகிறது. இந்த வதந்தியை அவர் நம்பும் படியான சூழ்நிலைகள் உருவாக்கப்படுகின்றன; காரணங்கள் காட்டப்படுகின்றன. இவையனைத்தும் பொய்யென்பதை அறியாத மாதவன் மனமுடைந்து, வாழ்க்கையில் வெறுப்படைகிறார். மலபாரில் தம் இல்லத்திற்கு வந்து விவரமாக விசாரியாமல் வட இந்தியாவுக்குச் செல்கிறார். அங்கு நிகழும் பல்வேறு சம்பவங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. ஆனால் இந்துலேகா தான் மனத்தினால் வரித்த மணவாளனை மறக்கவில்லை: மாதவன் இருக்குமிடத்தை அறிய இடைவிடாமல் முயற்சி செய்கிறாள். இறுதியில் தன் முயற்சியில் வெற்றியும் அடைகிறாள். உண்மை நிலையை அறிந்த மாதவன் உடனடியாகச் சென்னை திரும்புகிறார். இந்துலேகாவை மணம் செய்து கொள்கிறார். பஞ்சுமேனன், குறுகிய மனப்பான்மை உடையவராக இருப்பினும் கெட்ட மனப்பான்மை கொண்டவரல்ல. தனது பேத்தி இந்துலேகாவிடம் உள்ள பாசம் அவரை இறுதியில் பணியவைக்கிறது. ஆனால் குடும்ப தேவதையின் முன் எடுத்துக் கொண்ட சூளுரை என்ன ஆவது? எதற்கும் கழுவாய் ஒன்று உண்டு என்று சொல்லத்தான் பேராசை கொண்ட புரோகிதர்கள் பலர் இருக்கிறார்களே! கழுவாய் நடந்தேறுகிறது; கதையும் இனிது முடிகிறது.

என்னுடைய மலையாளி நண்பர்கள் சிலர் குறிப்பாகக் கேட்டுக் கொண்டதன் மேல் 18-வது அத்தியாயம் எழுதப்பட்டது. நன்கு படித்த மலையாளிகளிடையே நிலவிவரும் நாத்திகம் பற்றிய விவாதம் ஒரு பாதியிலும் தேசிய காங்கிரசினால் ஏற்படக்கூடிய நன்மை, தீமைகள் பற்றிய விவாதம் மற்றொரு பாதியிலும் காணப்படுகிறது. மாதவன், அவரது தந்தையார், மாதவனின் பட்டதாரி உறவினர், காங்கிரஸ் எதிர்ப்பாளர், நாத்திகவாதி—ஆகியோரிடையே நடக்கும் விவாதத்தில் இக்கருத்துப் பரிமாறல்கள் வெளிப்படுகின்றன.

மாதவன் நிதானப் போக்குடைய காங்கிரஸ்காரர்; நாத்திகவாதியல்ல. மாதவனின் தந்தை மதவெறிபிடித்த இந்து; ஒவ்வொருவரும் தத்தம் கோணங்களிலிருந்து தங்கள் கருத்துக்களை எடுத்துரைக்கின்றனர். கோவிந்தக்குட்டி காங்கிரஸ் என்றால் வெறுப்பவர்; மாதவன் நிதானமான போக்குடன் காங்கிரசுக்கு ஆதரவளித்தார். ஆனால் காங்கிரஸ் அமைப்பில் உள்ள குறைபாடுகள் அவருக்குத் தெரிந்ததே. இக் குறைபாடுகளை காங்கிரஸ் அகற்றிக்கொள்ள வேண்டுமென அவர் விரும்பினார்.

# 5. இந்துலேகா—ஓர் ஆய்வு

இந்துலேகா பத்தொன்பதாவது நூற்றாண்டில் மலர்ந்த கதை. நாயர் தரவாடுகளைச் சேர்ந்த அல்லது மருமக்கள்தாயம் கூட்டுக் குடும்பங்கள் பற்றிய கதை. இத்தகைய குடும்பங்களில் சாதாரணமாக நடக்கும் நிகழ்ச்சிகளும், இக்குடும்பங்களுக்கே உரிய பாத்திரங்களும் நம் முன்னால் கொண்டுவரப்படுகின்றன. தரவாடின் தலைவராகிய காரணவன், அவரது அதிகாரத்தின் கீழ் உள்ள இல்லத்தின் தன்மை, குடும்பத்தைச் சேர்ந்த இளைய தலைமுறையினரை அவர் நடத்தும் விதம், பெண்களை அவர் நடத்தும் முறை, ஏனைய உறவினர்களை அவர் நடத்தும் இயல்பு, அவைபற்றிய அவர்கள் கருத்துக்கள் ஆகியவற்றை அப்படியே சித்திரிக்கின்றது. ஏதோ சில நோக்கங்களைக் கருத்தில் கொண்டுதான் சந்துமேனன் தமது நாவல்களை எழுதினார். இந்நோக்கங்களுக் கேற்ப பாத்திரங்களும் நிகழ்ச்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. இந்துலேகாவில் பஞ்சுமேனனும் சாரதாவில் கொப்புண்ணி அச்சனும், வீறுப்பும் முன்கோபமும் உள்ள காரணவர்களாகச் சித்திரிக்கப்படுகின்றனர். தரவாடைச் சேர்ந்த ஒரு பையனை நியாயமான முறையில் நடத்த வேண்டுமென்று கேட்டதற்காகத் தனது மருமகள், பேரன் மாதவன் ஆகியவர்களைத் தண்டிக்க முனைகிறார் பஞ்சுமேனன். செல்வம் கொழித்த செம்பழியாட் பூவல்லி இல்லத்தின் காரணவராகிய அவர் எழுபது வயதானவர். பணியிலிருந்து ஓய்வுபெற்ற தாசில்தாரர். அடக்கமுடியாத கோபம் கொண்டவர்; பழைய தலைமுறையைச் சேர்ந்த முதியவர். நல்ல நிறம்; கட்டை குட்டையான உடல்; அவரது நிறம்தான் அவருடைய தோற்றத்தை எடுத்துக் காட்டியது. வழுக்கைத் தலையர்; மேலே மூன்று பற்களும் கீழே ஐந்து பற்களும் இழந்தவர்; சிவந்த கண்கள். இடுப்பு வேட்டியைச் சுற்றி தங்கக் கச்சை; கழுத்தில் தங்கத்தில் தொழுகை மணிமாலை; தலையில் கம்பளிக் குல்லாய்; கையில் வெள்ளிப் பூண் போட்ட தடி; அவரது வசைமாரி அங்குள்ள மக்களுக்கு வழக்கமான அன்றாட நிகழ்ச்சி. இந்துலேகாவில் நாம் காணும் குணச் சித்திரங்களில் இவர் ஒருவர்.

ஆனால் இவர் எப்பொழுதும் வசைமாரி பொழிந்துகொண்டே இருப்பதில்லை; இந்துலேகாவைப் பொறுத்தவரையில் அவர் மிகவும் அன்பும் கழிபேரிரக்கமும் பாசமும் காட்டி வந்தார்.

சூரி நம்பூத்ரி கயவன்; முட்டாள். அவன் சிரிக்கும் பொழுது அவனது வாய் ஒரு காதிலிருந்து மற்றொரு காதுவரை நீண்டது. அவனது மூக்கு சப்பையாக இராவிடினும் அவனது முகத்திற்கு மிகவும் சிறியது. நடப்பதற்குப் பதிலாக அவன் காக்கை போன்று தத்தித் தத்திச் செல்கிறான். அவனுக்குக் காமக்கிழத்திகள் பலர்—தான் ஒரு மன்மதன் என்ற நினைப்பு அவனுக்கு இருந்தது. ''பெண்கள் அளிக்கும் சுகத்தைவிட மனிதனுக்கு என்ன இன்பம் தேவை'' என்று அவன் கேட்பான். இதுதான் அவன் கோட்பாடு. நம்பூத்ரியின் சிறப்பியல்பு வெகு நன்றாகத் தீட்டப்பட்டுள்ளது. நம்பூத்ரி வகுப்பையே தாம் பழிப்பதாகத் தன்னைத் தவறாக நினைப்பார்களோ என்ற அச்சம் மேனனுக்கு உண்டு. இந்துலேகா வெளியானவுடன், இந்தப் பாத்திரம் பற்றிச் சிறிது பரபரப்பு ஏற்பட்டது என்னவோ உண்மை. ''நம்பூத்ரிகளிடம் எனக்கு உள்ள மரியாதை, மலபாரில் உள்ள வேறு எந்த வகுப்பினரிடமும் எனக்குக் கிடையாது. அறிவும் ஆற்றலும் நிரம்பிய ஆன்றோர் பலர் நம்பூத்ரிகளில் உள்ளனர்; அவர்களில் ஒரு சிலர் எனது நெருங்கிய நண்பர்கள் என்பதில் நான் பெருமிதமடைகிறேன்'' என்று அவர் கூறினார். நம்பூத்ரிக்குச் சரியான பாடம் கற்பித்த இந்துலேகாவும் சொல்கிறார்:—''மற்ற வகுப்புகளில் அறிவாளிகள் இருப்பது போல, நம்பூத்ரிகளிலும் அறிவார்ந்தவர்கள் உளர்''.[1]

ஆயினும், சூரிநம்பூத்ரிபாடு வாயிலாகத்தான் சந்துமேனன் நாவலில் நகைச்சுவையைக் கொண்டு வருகிறார். இந்துலேகாவின் நகைச்சுவையே தலைமுறை தலைமுறையாக வாசகர்களை ஈர்த்து வருகிறது. சூரிநம்பூத்ரி வரும் ஒவ்வொரு அத்தியாயமும் நமக்கு நகைப்பூட்டுகின்றது; அது நாடகமாக நடிக்கப்படுகையில் அவர் வரும் ஒவ்வொரு காட்சியும் நகைச்சுவை மிக்கதாகவுளது[2] பல்லக்கிலிருந்து வெளிப்போந்து, தான் ஒரு பொன் வண்ண மன்மதன் என்று கூறிக் கொள்கிறார்; தான் வெற்றி கண்ட மகளிர் பற்றி மார்தட்டி, தற்புகழ்ச்சி செய்து கொள்கிறார். இந்துலேகாவைத் தொடர்ந்து சென்று பல்லிளிக்கின்றார்; மூக்கு உடைபடுகிறார்; ஒவ்வொரு முறையும் சிரித்துச் சிரித்து நமக்கு விலா வலிக்கின்றது. இந்துலேகாவிடம் மூக்கு உடைபட்ட பின்னர் இவர் துணிச்சலுடன் கல்யாணிக் குட்டியைப் பெண்கள் குளியலறைக்குள் தொடர்கிறார்; இது ஒரு கேலிக் கூத்தான காட்சி; அவரது வேலையாள் கோவிந்தன் இது கேட்டு ஓடோடி வருகின்றான். பெண் வேட்டையாடும் தனது எஜமானரை மற்றவர் கையும்

---

1 பக்கம் 94 2 இந்த நாவல் நாடகமாக்கப்பட்டுப் பல சமயங்களில் நடிக்கப்பட்டுள்ளது.

களவுமாகப் பிடிக்கும் முன்னர் காப்பாற்றுகிறான். பல்வேறு காட்சிகளில் பஞ்சுமேனனின் கனல் கக்கும் கோபம் கூட நமக்கு நகைப்பூட்டுகின்றது. கோபாலன், சீனு பட்டர், சாதர்மேனன், முதலியோரிடம் அவர் பேசும் பொழுது நாம் இதனைப் பார்க்கிறோம். இவர்கள் நமக்கு நல்ல பொழுது போக்கு; நம்பூத்ரியைக் கோமாளியாகவும் பஞ்சுமேனனைத் தீப்பொறி கக்கும் பத்தாம் பசலியாகவும் சித்திரிக்கிறார். கேசவ நம்பூத்ரி இயந்திரங்கள் பற்றி தமது அறியாமையை வெளிப்படுத்தும் போதும் தனது மனைவியை சூரி நம்பூத்ரி தட்டிக் கொண்டு போய் விடுவார் என்று அவர் அஞ்சும்பொழுதும் நமக்கு நகைப்புண்டாகிறது.

இந்துலேகா, மாதவன், கோவிந்தன் குட்டி போன்ற ஏனைய பாத்திரங்கள் வேறுவகையான பண்பாடுகள் கொண்டவர்கள்; மாதவனும் இந்துலேகாவும் மேன்மக்கள்; மிகச் சிறந்தவர்கள். மாதவன் அரும்பெருந் திறமைகளும் எடுப்பான தோற்றமும் உடையவர்: சிறந்த அறிவாளி; விளையாட்டு விற்பன்னர். ''மாதவனை முதல் முறை சந்தித்த ஐரோப்பியர் அனைவரும் அவர்பால் ஈர்க்கப்பட்டனர். பின்னர் அவர்கள் எப்பொழுதும் அவரது நண்பர்களாகவே இருந்தனர்.'' சந்துமேனன் தனது சுயசரிதையையே எழுதி வந்தாரா?

இந்துலேகாவைப் பற்றி அவர் அழகாக விவரிக்கிறார். அழகான பெண்களில் இந்துலேகா எழிலரசி. அவள் உடுத்தியிருந்த பூவேலை செய்யப் பட்ட சேலையின் சரிகைக் கரையின் வண்ணமும் அவளது மேனியின் நிறமும் ஒத்திருந்ததால், ஒன்றையொன்று பிரித்தறிவது கடினமாக இருந்தது. அவளது கூந்தலை வர்ணிக்கிறார்; கண்களை எழுதிக் காட்டுகிறார்; அவளது உடலமைப்பைச் சித்திரித்துக் காட்டுகிறார். அவ்வளவு அழகான வர்ணனைக்குப் பின்னரும் ''அழகெல்லாம் ஒன்று திரண்டு ஈடு இணையற்ற எழிலரசியாக விளங்கிய இந்துலேகாவின் வனப்பை வர்ணிக்க எனது பேனாவால் முடியாது''. என்று வெளிப்படையாகவே ஒப்புக் கொள்கிறார். ஆங்கிலம், வடமொழி, இசை, சித்திரம், தையல் முதலிய கலைகள் பலவற்றில் தேர்ச்சி பெற்றிருந்தார். பழமையும் புதுமையும் கலந்த பழக்க வழக்கங்களை உடையவர். இவரது பண்பு பார்ப்போரை ஈர்க்கும் தன்மை உடையதாய் இருந்தது. பிறக்கும் பொழுது மாதவி என்று பெயரிடப்பட்ட தன் மகள், எழிலே உருவெடுத்த ஏந்திழையாளாய் வளர்வதைக் கண்ட கிருஷ்ண மேனன் இந்துலேகா அல்லது மதியொளி என்று செல்லமாய் அழைக்க அந்த பெயரே நிலைத்து நிற்கலாயிற்று.'' இந்துலேகாவின் புகழ் பாடி ஆறுபக்கங்கள் எழுதித் தள்ளிய பின்னரும் சந்துமேனன் எழுதுவதாவது: — ''விரும்பத்தக்க எல்லா நற்பண்புகளும் ஒருங்கிணைந்து உருவெடுத்த இந்துலேகாவின் சிறு ஆசைகூட, அவரது

பாட்டனூர் வீட்டில் உள்ள அனைவராலும் பெரிதாகப் பாராட்டி நிறைவேற்றப் பட்டது. எனினும் அரசி போன்ற நிலை அக்குடும்பத்தில் அவருக்கிருந்த போதிலும் அவரது செயல்குறித்தோ நடத்தை குறித்தோ எவரும் அதிருப்தி தெரிவித்து முணுமுணுத்தது கூடக் கிடையாது''.*

இப்பாத்திரங்களை அவர் விரிவாகச் சித்திரித்து எழுதுவதன் முக்கியமான நோக்கம் நமக்குத் தெளிவாகத் தெரிகிறது. ஆங்கில அறிவு பெறுவதனால் மலையாளிகள், குறிப்பாக மலையாளப் பெண்கள் அடையக்கூடிய நன்மைகள் பற்றி வலியுறுத்தவே அவர் இங்ஙனம எழுதியுள்ளார் என்பது தெளிவாகிறது. கல்யாணிக் குட்டி வயதில் இந்துலேகாவை ஒத்தவளாகயிருந்தாலும் அவளுக்கு ஆங்கிலப் படிப்பு கிடையாது. உயிருள்ள பன்றி போன்று அல்லது ஏனைய ஒரு விலங்கு போன்று தன்னை மற்றவர்கள் நடத்த, எதிர்த்து நின்று போராடச் சக்தியற்று மற்றவர்களின் கைப்பாவை ஆகிறாள். அவள் இழுத்துச் செல்லப் பட்டு, அவளுக்காகக் காத்திருக்கும் சூரிநம்பூத்ரி அறைக்குள் தள்ளப்படுகிறாள். இந்துலேகாவை நம்பூத்ரிக்குக் கொடுக்க இயலாமற் போனதால் காரணவன் கல்யாணிக் குட்டியை நம்பூத்ரியின் இச்சைக்குப் பலியிடுகிறார். காரணவனின் கட்டளைக்கு அவளும் கீழ்ப்படிய வேண்டியிருக்கிறது.

மாறாக, இந்துலேகா ஆங்கில அறிவு உள்ளவர்; தனது எழிலினால் நம்பூத்ரியை திக்குமுக்காடச் செய்கிறார். ஆனால் அவருடைய எண்ணம் நிறைவேறாது என்பதையும் தனக்குப் பிடிக்காத திருமணத்திற்கு தான் உடன்பட முடியாது என்பதையும் திட்டவட்டமாகச் சொல்லிவிடுகிறார். திருமணம் பற்றிப் பஞ்சு மேனன் பேசுகின்றபோதும், இந்துலேகா அசைந்து கொடுக்கவில்லை. அவளது பிடிவாதத்தைக் கண்ட பஞ்சுமேனன் கேட்கிறார்:—ஆங்கிலம் துளிர்த்து விளைவதைப் பார்த்தாயா? அதற்கு பதினெட்டே வயதான இந்துலேகா பதிலளிக்கிறார். ''நிச்சயமாக, தாத்தா. நான் மலையாளத்தில் பேசினேன். பூவல்லி தரவாடில் சர்வாதிகாரியான காரணவனுக்கு இந்தப் பதில் அதிர்ச்சியைத் தந்திருக்கும். ஆனால் இந்துலேகாவிடம் ''ஆமாம் அம்மா! எனக்குத் தெரியாதா நீ திறமைசாலி'' என்று சொல்லி மழுப்புகிறார். ''இந்த உலகிலேயே நான் எவருக்கும் அஞ்சுவதில்லை. ஆனால் எனக்கே ஏன் என்று தெரியவில்லை—இந்துலேகாவைக் கண்டால் அச்சமாக இருக்கிறது. அவளுக்குக் கோபம் வந்தால், என்னால் அவள் எதிரில் நிற்க முடிவதில்லை''.[1] என்று பின்னர் அவரே ஒப்புக் கொள்கிறார். மலபார் பெண்களைப் பற்றி

[1] பக். 86

மாதவன் தரக்குறைவாகப் பேசுகையில் மாதவனுக்கே சவுக்கடி கொடுக்கிறாள்.

புத்தகத்தின் இறுதியில் சந்துமேனன் எழுதுகிறார்:— இந்தியாவில் ஆண்களுக்குச் சரிநிகர் சமானமாகப் பெண்களுக்கும் கல்வி வசதி கிடைக்குமாயின், அதனால் எவ்வளவு நன்மை கிட்டும் என்பதை எனது நாட்டு மக்களுக்கு உணர்த்தவே இக்கதையை நான் எழுதினேன்''. கல்யாணிக் குட்டியின் பரிதாபகரமான கதையைச் சுட்டிக் காட்டி அவர் சொல்கிறார்: ''என்னுடைய நாட்டு மகளிரே! இது உங்களுக்கு வெட்கமாக இல்லையா? உங்களில் சிலர் வடமொழி படித்திருக்கிறீர்கள். மற்றும் சிலர் இசையில் பயிற்சி பெற்றுள்ளீர்கள். நீங்கள் தெளிவு பெறவேண்டுமாயின், ஆங்கிலம் பயில வேண்டும். அப்பொழுதுதான் நீங்கள் தற்காலத்தில் தெரிந்து கொள்ள வேண்டிய பல விஷயங்களைத் தெரிந்து கொள்ள முடியும். ஆண்களைப் போலவே நீங்களும் கடவுளால் படைக்கப்பட்டவர்கள். ஆண்களைப் போலவே உங்களுக்கும் சுதந்திரம் உண்டு என்பதையும் பெண்கள் ஆண்களுக்கு அடிமைகள் அல்ல என்பதையும் நீங்கள் அப்போதுதான் உணர்ந்து கொள்ள முடியும்.''[2] சமுதாயத்தில் உயர்நிலையில் உள்ள குற்றங் குறைகள், பெரிய தொழிற்சாலைகளில் உள்ள தீமைகள், மருத்துவத் தொழிலில், மனநோய் மருத்துவ மனைகளில், ஆதிக்கங்கள் அனைத்தும் குவிந்துள்ள நிர்வாகத்தில் உள்ள கேடுகள் போன்றவற்றை விளக்கும் நாவல்கள் பல உள்ளன. இந்தியப் பெண்கள், தாழ்த்தப்படுவதனின்றும் சுரண்டப்படுவதனின்றும் தங்களைக் காத்துக் கொள்ள கல்வியறிவு, குறிப்பாக ஆங்கிலக் கல்வியறிவு பெறுவதன் அவசியத்தை வலியுறுத்துவதற்காக இந்த நாவல் எழுதப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்துலேகா ஆழ்ந்த கருத்துள்ள நாவலல்ல. இதில் வரும் பாத்திரங்களும் கற்பனையூற்றில் தோன்றியவர்களல்ல.

சிக்கல் இல்லாத கதை; எளிமையான கதை; வெளிப்படையாகச் சொல்லப்படும் கதை; கதையில் ஏதாவது ஒன்று தெளிவாக இல்லாவிடின், மேனன் அதனை அழகாகத் தெளிவாக்குகிறார்: வாசகர்களைத் தம்முடன் அழைத்துச் செல்கிறார். மாதவனும் இந்துலேகாவும் கதையில் சந்திக்குமுன்னரே, அவர் நம் காதோடு சொல்கிறார் ''மாசு மறுவற்ற அவர்களின் உள்ளங்கள் ஏற்கெனவே இணைந்து விட்டன'' அவர்கள் உள்ளத்தில் அன்பு அரும்பி, அது காதலாக மலர்ந்து விட்டது. ஆனால் அவர்கள் அதை வெளியில் காட்டிக் கொள்ளவில்லை.'' ஆயினும் சந்துமேனன் அதனைத் தன் வாசகர்களுக்கு எடுத்துச் சொல்கிறார். நம்பூத்ரிகள்

[2] பக். 368

பற்றித் தன்னுடைய கருத்தை அவர் வாசகர்களுக்கு விளக்குகிறார். ஏனெனில் தன்னுடைய வாசகர்கள் தன்னைத் தவறாகப் புரிந்து கொள்வதை அவர் விரும்பவில்லை. சூரிநம்பூத்ரி இந்துலேகாவை எடுத்துச் செல்லவில்லை; கல்யாணிக் குட்டியையே எடுத்துச் சென்றார் என்பதை வாசகர்களுக்குப் புரியவைக்கிறார்; ஆனால் இதனை மாதவனுக்குத் தெரியாமல் ரகசியமாக வைக்கிறார். வேறொரு நாவலாசிரியராக இருந்தால் இதனை வாசகர்களுக்கும் தெரியாமல் வைத்து, மர்மமான சூழ்நிலையை உருவாக்கி, உயர் வகை நாவல் என்று அவர் கருதக்கூடிய நாவலை எழுதியிருப்பார். ஆனால், இந்துலேகாவில் எதுவுமே மறைத்து வைக்கப்படவில்லை. தரவாடு ஒன்றில் சாதாரணமாக நடக்கக்கூடிய விவகாரங்கள்தாம். இரண்டு தலைமுறையினருக்கிடையே நிலவும் இடை வெளிகள், உறவினர்களிடையே உள்ள கருத்து வேறுபாடுகள், திருமணப் பிரச்சினைகள், வெளியாரிடமிருந்து கிட்டிய நன்மைகள், வெளியி லிருந்து வந்த பழி கேடுகள் முதலியன இந்த நாவலில் விவரிக் கப்பட்டுள்ளன. நம்பூத்ரியின் செல்வாக்கு, பழைய தரவாடு வாழ்க் கையில் சாதாரணமாகப் பின்னிப் பிணைந்த ஒன்றாகும். அன்றாட வாழ்க்கையில் பழக்கமான முகங்களையும் உலகியலான விவகாரங் களையும் வைத்துக் கொண்டே சிறப்புமிக்க நாவல் ஒன்றை எழுத முடியும் என்பதைச் சந்துமேனன் மெய்ப்பித்துள்ளார். முன்பின் அறியாத நாடுகளில் உள்ள அந்நியர்கள் பற்றியும் பன்னெடுங் காலத்திற்கு முன் நடைபெற்ற சம்பவங்கள் பற்றியும் எழுதப் பட்டுள்ள கதைகளை விட அன்றாட வாழ்க்கையில் நடக்கக்கூடிய நிகழ்ச்சிகள் பற்றியும் நாள்தோறும் நாம் சந்திக்கக்கூடிய மக்கள் பற்றியவையுமான கதைகளையே சாதாரண மனிதன் விரும்பு கிறான். நடைமுறையில் இருக்கக்கூடிய ஓவியம் அல்லது சிற் பத்தினையே சாதாரண மனிதன் புரிந்து கொள்கிறான். வடி வங்களை அடிப்படையாகக் கொண்டு அல்லது விருப்பம் போல் கோடுகளை வரைந்து எழுதப்படும் சமீப கால நவீன ஓவியங்களைச் சாதாரண மனிதனால் ரசிக்க முடியாது.

சம்பவங்களையும் பாத்திரங்களையும் போல், இக்கதையில் பயன் படுத்தப்படும் மொழியும், மலையாளி குடும்பங்களில் சாதாரண மாகப் பயன்படுத்தப்படும் மொழிதான். அன்றாட வாழ்க்கையில் பயன்படுத்தப்படும் மலையாள மொழி, இலக்கிய அளவில் அமைந் துள்ள எதையும் எழுத திருப்திகரமாகப் பயன்படுத்த முடியாது என்ற எண்ணம் அந்தக் காலத்தில் நிலவிவந்தது. இந்துலேகாவின் முன்னுரையில் சந்துமேனன் எழுதுகிறார்:—

''இந்தப் புத்தகத்தில் நான் பயன்படுத்தியுள்ள மொழி சாதார ணமாக நான் வீட்டில் பயன்படுத்தும் மொழிதான். எனக்கு வடமொழி சிறிதளவு தெரியும் என்றாலும் மலையாளிகள் கொச்

சையாக வடமொழியை எந்த அளவுக்குப் பயன்படுத்துகிறுர்களோ அந்த அளவுக்குத்தான் நான் பயன்படுத்தியுள்ளேன்'' சந்துமேனனது திறமை வாய்ந்த கதைகளில், இந்த வீட்டு மொழி, புத்தகத்தை விரும்பத் தகுந்ததாகவும் பாத்திரங்களை இயற்கையாகவும் ஆககி வாசகர்களை இப்புத்தகத்துடன் ஒன்றிவிடச் செய்கிறது.

பாத்திரங்களின் குண இயல்புகளை விளககுவது இந்துலேகாவின் தனிச் சிறப்பியல்புகளில் ஒன்ருகும். சில நாவல்கள் சிக்கல் நிறைந்த கதைப் போக்கிஞல் நம்மை ஈர்க்கின்றன. இச்சிக்கல்களில் சில இயற்கைக்கு மீறிய தெய்வீக சக்தியிஞல் அல்லது மர்மமான சக்தியிஞல் விடுவிக்கப்படுகின்றன. இன்னும் சில சிக்கல்கள் பல்வேறு சம்பவங்களிஞலும் விடுபடுகின்றன. ஆயினும் இந்துலேகா எளிய காதல் கதை; பத்தாம் பசலிக் காரணவனின் காழ்ப்புணர்ச்சி காரணமாக காதல் பாதை கரடு முரடாகின்றது. இறுதியில் பேத்தியின் பால் கொண்ட தாத்தாவின் பாசம் வெல்கிறது. காதலர்கள் ஒன்றுபடுகின்றனர். கதையில் சிக்கல் ஒன்றும் கிடையாது. ஆஞல் எளிமையான உரையாடல், உள்ளம் கவரும் வகையில் விவரிக்கப்பட்டுள்ள முறை, கதையில் வருவோரது குண இயல்புகளை விளக்கியுள்ள விதம் ஆகியவை காரணமாகக் கதை சிறப்படைகிறது. நேர்த்தி வாய்ந்த கதாநாயகி இந்துலேகா, நல்ல பண்புகளே உருவெடுத்த மாதவன், காமத்தின் பிறப்பிடமான சூரி நம்பூத்ரி, கோபத்திஞல் வெடித்தெழுகிற பஞ்சுமேனன் ஆகியோர் பற்றி அழகாகப் படம் பிடித்துக் காட்டுகிறுர் கதையின் ஆசிரியர். ரயில் நிலைய சிற்றுண்டிச் சாலையில் பணிபுரியும் பரிமாறுபவரிடமிருந்து ஒப்புதல் வாக்குமூலம் பெற வீஞக முயற்சி செய்யும் போலீஸ் இன்ஸ்பெக்டர் கட்டளைகளும் முறைகளும் நடைமுறையை யொட்டி அமைந்துள்ளன. கதையில் வருபவர்களில் சிலர் உயிர் பெற்று எழுந்து வந்துவிட்டனரோ என்ற ஐயம் தோன்றுகிறது. கதை முடிந்த பின்பும், குறிப்பாக சூரி நம்பூத்ரியும் பஞ்சுமேனனும் தனிப்பட்ட முறையில் நம் கண்முன் உலவுகின்றனர். அவர்களது குணஇயல்புகளை அவ்வளவு விரிவாக, நுணுக்கமாக, அழகாக எடுத்துரைத்ததன் காரணமாக அவர்கள் கதையின்றும் தனித்துப் பிரிந்து, நம்மால் மறக்க முடியாத அளவுக்கு அமைந்து விட்டனர். ஷேக்ஸ்பியரில் வரும் ஷைலக், ஃபால்ஸ்டாப், சார்லஸ் டிக்கன்ஸ் நாவலில் வரும் பிக்விக், வோட் உறவுஸ் நாவல்களில் வரும் பட்லர் ஜீவ்ஸ் ஆகியோரை நம்மால் மறக்க முடிகிறதா என்ன?

மாதவன் இக்கதையின் லட்சியக் கதாநாயகன். அவரது கருத்துக்கள் நியாயமானவை; வலிமையானவை; எனவே தன் கருத்துக்களை வலியுறுத்திப் பேசுகிறுர். தரவாடைச் சேர்ந்த சிறுவன்

ஒருவனின் பள்ளிப் படிப்புக்காகக் காரணவனுடன் வாதம் செய்கையிலும் பின்னர் பெரியவர்களுடன் ஆங்கிலக் கல்விபற்றிப் பேசுகையிலும் இந்திய அரசியல் வானில் ஏற்பட்டு வரும் மாறுதல்கள் பற்றி விவாதிக்கையிலும் அவரது வாதத் திறமையைக் காணலாம். மலபாரில் குடும்ப வாழ்க்கையிலும் சமுதாய வாழ்க்கையிலும் பத்தாம் பசலிப் பழக்க வழக்கங்களை எதிர்த்துப் போராடும் இளைய தலைமுறையினரின் பிரதிநிதி என்ற முறையில் அவர் பேசுகிறார். சுதந்திர இந்தியா பற்றிக் கனவு காணும் மாதவனுக்கும் காரணவன் பஞ்சுமேனனுக்குமிடையே ஒரு தலைமுறை இடைவெளி இருக்கின்றது. பஞ்சுமேனனைப் பொறுத்தவரையில் ''இளைஞர்கள் தவறான வழியில் செல்பவர்கள்'' என்பதே அவரது கருத்து.

மாதவன் அறிவில் சிறந்தவர்; இந்துலேகாவிடம் அன்புள்ளம் கொண்டவர்; அப்படியிருந்தும், சூரிநம்பூத்ரி—இந்துலேகா திருமணம் பற்றிய வதந்தியை எப்படி நம்பினார்? வெறுப்படைந்து மலபாரை விட்டு வெளியேறுமுன் அந்த வதந்தி உண்மையானது தானா என்று விவரமாக விசாரித்திருக்க வேண்டாமா? என்ற கேள்வி எழுகிறது. இந்துலேகாவுக்குக்கூட இதில் ஏமாற்றமே. ''என்னைப் பற்றி அவ்வளவு நன்றாகத் தெரிந்திருந்தும் நான் அவ்வளவு தாழ்வடைந்து போவேன் என்று அவ்வளவு அவசரப்பட்டு ஏன் முடிவு செய்தார்?'' என்று இந்துலேகா வினவுகிறாள். ''காதலுக்குக் கண் இல்லை, விவேகமும் இல்லை'' என்ற மூதுரையைத் தான் மாதவனுக்கு ஆதரவாகச் சொல்லலாம். மேலும் அவரது மயக்கம் தற்காலிகமானதே. ''நான் தற்கொலை செய்து கொள்ளப் போவதில்லை. பல இடங்களைச் சுற்றிப் பார்க்கப் போகிறேன். அவ்வளவுதான். வேறு எந்த எண்ணமுமில்லை. நான் கண்டிப்பாகத் திரும்பி வந்துவிடுவேன். நீங்கள் இதைத் திண்ணமாக நம்பலாம்'' என்று தன் தந்தைக்கு எழுதிய கடிதத்தில் மாதவன் எழுதினார். மாதவன் போன்ற முக்கியமான பாத்திரங்களைத் தவிர ஏனைய பாத்திரங்களும் நம் கண்முன் வருகின்றன. எடுத்துக் காட்டாக மாதவனது தந்தை கோவிந்த பணிக்கரும் தாய் பார்வதி அம்மாவும் மாதவனின் நலத்தில் கண்ணும் கருத்தும் உள்ளவர்கள். இந்துலேகாவின் தாய் லட்சுமிக் குட்டி அம்மாவைப் பார்த்ததும் சூரி நம்பூத்ரி ''தனது அறிவையே இழந்து விட்டார்.'' பஞ்சுமேனனது முதல் கோபத்திற்குள்ளாகும் சாதர்மேனன், சூரி நம்பூத்ரியின் உள்ளத்தைச் சிறிது நேரம் கவரும் அம்மு (இந்துலேகாவின் வேலைக்காரி) தனது எஜமானரை இக்கட்டான நிலைகளிலிருந்து காப்பாற்றும் கோவிந்தன்—இந்துலேகாவுக்கு பதிலாக (ஆங்கிலம் தெரியாத) கல்யாணிக்குட்டியை நம்பூத்ரிக்குக் கொடுக்கலாம்

என்ற ஆலோசனை நல்கியவர் இவரே—ஆகிய பாத்திரங்களும் நம் கருத்தைக் கவர்கின்றன. இவர்கள் எல்லோரும் கதையின் ஊடே வந்து போகின்றனர் என்றாலும் கதையின் சுவையான அமைப்பில் இவர்களுக்கும் நல்ல பங்குண்டு.

இந்துலேகா, நாவல் என்ற முறையில் தலை சிறந்த அம்சங்களைக் கொண்டுள்ளது. தலைமுறை தலைமுறையாக இந்த நாவல் பிரபலமாக உள்ளது என்பதே இதற்குச் சான்று. ஆயினும் கதையின் அமைப்பில் ஒரு குறைபாடு சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. கதையின் அமைப்புக்கு 18-வது அத்தியாயம் அவசியமில்லை என்று சொல்லப்படுகிறது. இது மிக நீண்ட அத்தியாயம். கதையில் ஆறில் ஒரு பங்கு நீளத்தை இந்த அத்தியாயமே ஆக்கிரமித்துள்ளது. ஆங்கிலக் கல்வி, கடவுள், மதம், இந்திய தேசிய காங்கிரஸ், மற்றும் சில அரசியல் பிரச்சினைகள் ஆகியவை பற்றிய விவாதங்கள் இந்த அத்தியாயத்தில் அடங்கியுள்ளன. இந்த விவாதத்தில் கலந்து கொள்பவர்கள் மாதவன், மாதவனது தந்தை கோவிந்த பணிக்கர், பஞ்சுமேனன் மகன் கோவிந்தன்குட்டி மேனன் ஆகியோர். தான் செல்லும் இடத்தைப் பற்றி எவருக்கும் தெரிவிக்காமல் மலபாரைவிட்டு மாதவன் சென்ற பின்னர், இம்மூவரும் பம்பாயில் தற்செயலாகச் சந்திக்கின்றனர். மாதவனைத் தேடிக் கொண்டு கோவிந்த பணிக்கரும் கோவிந்தன் குட்டி மேனனும் பம்பாய் வந்து சேர்கின்றனர். அங்கு ஒரு நண்பர் வீட்டில் மாதவனைச் சந்திக்கின்றனர். இந்துலேகா மாவதனையே எண்ணி எண்ணி உள்ளம் ஏங்குவதை மாதவனிடம் தெரிவிக்கின்றனர். அடுத்த நாள் அவர்கள் பம்பாயிலிருந்து மலபாருக்குப் புறப்படவேண்டும். இரவில் படுக்கப்போகுமுன் அவர்கள் இந்த விவாதத்தில் ஈடுபடுகின்றனர். மாதவன் இந்துலேகாவைப் பார்க்கத் துடிக்கிற நிலையில்—பிரிந்தவர் கூட வேண்டும் என்று பணிக்கரும் மேனனும் தவிக்கின்ற நிலையில்—அவர்கள் இத்தகைய விவாதத்தில் ஈடுபடுவது இயற்கையா? என்று திறனாய்வாளர்கள் கேட்கிறார்கள். பலநாட்களாகக் கவலையே உருவாகக் காலம் கழித்த மாதவன், இந்துலேகா தனக்காகக் காத்திருக்கிறாள் என்ற செய்தி கேட்டு மகிழ்ச்சியடைகிறார். மாதவனைப் பல நாட்களாகத் தேடி, அலைந்து கவலையுடன் இருந்த பணிக்கரும் மேனனும் மாதவனை நல்ல உடல் நலத்துடன் சந்திப்பதில் மகிழ்ச்சியடைகின்றனர். கவலைகள் நீங்கி, காதலர்களைச் சேர்த்து வைக்கும் காலம் வந்துவிட்டது என்ற மன அமைதி. அனைவரும் மகிழ்ச்சியாகவுள்ள சமயம். மாலை நேரம். அவர்களுக்கு வேறு எந்த வேலையுமில்லை. எனவே ஒருசில மணி நேரங்களை அவர்கள் விவாதத்தில் செலவிட்டது தவறில்லையே! பெரியவர்கள் சொல்வதையெல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்ளும் காலம் மலையேறிவிட்டது. இளைய தலைமுறை

யினர் எதையும் துருவித் துருவிக் காரணம் காணத் துடிக்கின்றனர் என்பதை பழைய தலைமுறையினருக்குச் சுட்டிக் காட்டவே சந்து மேனன் இந்த அத்தியாயத்தைப் பயன்படுத்தியுள்ளார் என்று திரு. பாலகிருஷ்ணன் கருத்துத் தெரிவித்துள்ளார். டால்ஸ்டாய், டாஸ்டாஸ்வ்ஸ்கி, விக்டர் ஹ்யூகோ போன்ற தலைசிறந்த நாவலாசிரியர்களும் இத்தகைய அத்தியாயங்களைத் தங்கள் கதைகள் சிலவற்றின் இடையில் செருகியுள்ளனர் என்று அதே திறனாய்வாளர் கருத்துத் தெரிவித்துள்ளார். இந்த அத்தியாயத்தை உருவாக்கியது பொருத்தந்தானா என்று சந்துமேனனே ஐயப்பட்டார் போலும்! ஏனெனில் ''18-வது அத்தியாயம் எனது மலையாளி நண்பர்கள் சிலர் வேண்டுகோளின் மேல் எழுதப்பட்டது'' என்று அவரே எழுதுகிறார்.[1] மன்னிப்புக் கேட்கும் பாவனையில் ஏன் இப்படிச் செய்கிறார்? இந்துலேகாவின் அண்மைக் காலப் பதிப்பில் இந்த அத்தியாயம் விடப்பட்டுள்ளது. புதிதாக இந்த நாவலைப் படிப்பவர்களுக்கு இந்த மாற்றம் தெரியாது. நாவலாசிரியர் என்ற முறையில், சந்துமேனன் இந்த அத்தியாயத்தை நாவலில் சேர்க்க விரும்பவில்லை என்றே தோன்றுகிறது. ஆனால் அவர் தமது நாட்டின் வளமான வருங்காலம் பற்றிக் கனவு கண்டவர்; தமது சமுதாயத்தைச் சீர்திருத்த வேண்டும் என்ற துடிப்பு மிக்கவர். எனவே தமது சமுதாயத்தினரின் கண்களைத் திறப்பதற்காக இந்த அத்தியாயத்தைச் சேர்த்தார் போலும்! தனது நண்பர்களின் வேண்டுகோளுக்குச் செவிமடுத்து இந்த அத்தியாயத்தை எழுதினார். இந்த நாவல் முழுவதையுமே ''நண்பர் ஒருவரை'' திருப்திப் படுத்துவதற்காகவே எழுதினார் என்பதையும் நினைவிற் கொள்ளவேண்டும்.

கருத்து வேறுபாடுகளுக்கிடமான இந்த அத்தியாயத்தைத் தவிர, இந்த நாவல் ஆங்கிலக் கல்விக்கு ஆதரவாக உள்ளது என்ற குறையும் கூறப்பட்டுள்ளது. பழைய தலைமுறைக்கும் புதிய தலைமுறைக்கும் இடையே ஏற்படும் கருத்து மோதல், இளைய பாரதத்திற்கும் பழைய பாரதத்திற்கும் இடையே எழுந்த போராட்டம் இந்துலேகாவில் எதிரொளிப்பதை நாம் காண்கிறோம். இந்த இரு தலைமுறைகளுக்கும் இடையே வயது வேறுபாட்டை விட ஆங்கிலக் கல்வியினால் ஏற்பட்ட வேறுபாடே முக்கியமாகத் தெரிகிறது. பஞ்சுமேனன், சூரி நம்பூத்திரி போன்ற பத்தாம் பசலிகளுக்கு ஆங்கில அறிவு கிடையாது. முட்டாள்தனமான கருத்துக்களை அவர்களின் வாய்மூலம் சொல்ல வைக்கிறார் சந்துமேனன். எடுத்துக்காட்டாக, மாதவன் எதற்கெடுத்தாலும் வாதம் செய்கிறார். ஆங்கிலப் படிப்பின் காரணமாக, பெண்கள்

---

[1] பக்கம்

சுத்தமாக இல்லை போன்ற கருத்துக்கள் அவர்கள் வாயிலாக வருகின்றன. ஆங்கிலப் படிப்பினால் அறிவு விரிவடையாத காரணத்தினால் பழைமைப் பற்றுள்ளராக, ஆணவக்காரராக, இந்துலேகாவைத் தவிர பிறர் அனைவரிடமும் எரிந்து விழும் தன்மையாளராகப் பஞ்சுமேனன் சித்திரிக்கப்படுகிறார்.

சூரிநம்பூத்ரி ஒரு கோமாளி; ஆங்கிலம் தெரியாதவர்: இந்துலேகாவின் இல்லத்திற்கு அவர் போகும்பொழுது அவரது ஆடை அலங்காரத்தைச் சந்துமேனன் நகைச்சுவை விஞ்ச விவரிக்கிறார்:[1] ''பல்லக்கிலிருந்து பொன்மயமான உருவம் ஒன்று வெளியே குதித்தது. அதன் தலையில் ஒரு பொன் வண்ணக் குல்லாய். அரையிலே பொன்வண்ண ஆடை. காலிலே பொன்குமிழ் வைக்கப்பட்ட மரச் செருப்புகள். பத்து விரல்களிலும் மோதிரங்கள். இவைபோதாதென்று பொன்மயமான சால்வை ஒன்றையும் மேலே போர்த்திக் கொண்டிருந்தது. கையில் சிறிய தங்கக் கண்ணாடி ஒன்று வைத்திருந்தது. அதனை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தது.'' 'அவர்' என்பதற்குப் பதிலாக 'அது' என்ற சொல் பயன்படுத்தப்பட்டிருப்பதைக் கவனிக்கவும். இதற்கு எதிராக, மாதவனும் இந்துலேகாவும் ஆங்கில அறிவு படைத்தவர்களாதலால் அவர்கள் ஏறத்தாழ குறைபாடில்லாதவர்களாகச் சித்திரிக்கப்படுகின்றனர். மாதவன் யாரிடமும் சொல்லிக்கொள்ளாமல் வெளியூர் சென்று மறைந்த பிறகு, துயருற்ற அவர் தாய் பார்வதி அம்மா இந்துலேகாவிடம் சொல்கிறார்:—மாதவனுக்கு ஆங்கிலத்தில் கடிதம் எழுதி அவனை மணம் செய்து கொள்ளத் தயார் என்று நீ எழுதினால், இரண்டே நாட்களில் என் மகன் திரும்பி வந்துவிடுவான்''[2] கடிதம் ஏன் ஆங்கிலத்தில் எழுதப்படவேண்டும் என்று எண்ணி வாசகர்கள் வியப்படையலாம். இந்துலேகா கடிதத்தை மலையாளத்தில் எழுதினால் மாதவன் வரமாட்டாரா?

இந்தியாவில் தற்போது நிலவிவரும் சூழ்நிலையில், ஆங்கிலக் கல்வியை நேரடியாகவோ மறைமுகமாகவோ ஆதரித்தால் அது நாவலின் விரும்பத்தகாத பகுதியாகக் கருதப்படும். சந்துமேனன் காலத்தில் மலையாள இலக்கியம் பொது அறிவு வளர்ச்சிக்கும் தொழில் நுட்ப அறிவு வளர்ச்சிக்கும் ஏற்ற வகையில் முன்னேற்றமடையாதிருந்த போது, சந்துமேனன் தனது நாட்டு மக்களை, குறிப்பாக பெண்களைப் பார்த்து ''நீங்கள் ஆங்கிலம் கற்றுக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் இந்த நாட்களில் தெரிந்து கொள்ள வேண்டிய பலவற்றை நீங்கள் தெரிந்துகொள்ள

1 பக்கம் 132

2 பக்கம் 354

முடியும் என்று கூறுகிறார். ஆங்கில அறிவு இல்லையெனில் அறிவு இல்லை என்று நான் சொல்லவில்லை'' என்றும் அவர் சொல்கிறார்.

இவ்வாறு ஆங்கில மொழிக்கு ஆக்கம் காட்டுவதால், சந்து மேனன் பழமை விரும்பும் ஆதிக்க வெறியர் என்று இன்று கருதப்படலாம். இவர் 19-வது நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பதை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இதைக் கருத்திற் கொண்டு பார்த்தால், இந்தியப் பெண்களிடையே நிலவிவந்த கல்வியறிவின்மையை எதிர்த்தும் கல்வியைப் பரப்பவும் சமுதாயத்தில் புரட்சிக்குரல் எழுப்பிய நாவல் இந்துலேகாவாகும்.

மறைந்துவரும் தலைமுறையினருக்கு எதிராக இளைய தலைமுறையினர் உருவாக்கிய புரட்சி நாவல் என்ற வகையில் இந்துலேகாவை நாம் ஆராய்ந்தால், பஞ்சுமேனனே எடுத்துக்காட்டாக விளங்குகிறார் என்று சொல்லலாம். அவர் சிறுவனாக இருக்கையில், நடந்த சம்பவத்தை அவரே சொல்கிறார். அக்காலத்தில் சிறுவர்கள் காலில் மிதியடி போட்டுக்கொள்ளக்கூடாது. அந்த வழக்கத்தை மீறி பஞ்சுமேனன் சிறுவனாக இருக்கையிலேயே மிதியடி அணிந்தார்.

மிதியடி அணிந்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டவுடன், நல்ல பிரம்படி கிடைத்தது. எழுந்திருக்கமுடியாமல் இருபது நாட்கள் படுக்கையில் கிடந்தார். அவருடைய மிதியடியும் அவருடைய மாமனுடைய கட்டளைகளின்படி எரித்துச் சாம்பல் ஆக்கப்பட்டது. அதிலிருந்து அவர் மிதியடி அணிந்ததே இல்லை. எங்காவது மிதியடியைக் கண்டாலே அவருக்கு அச்சம் ஏற்படும்.

பஞ்சுமேனனின் பிள்ளைப் பருவத்திலேயே பழைய தலைமுறையினருக்கும் புதிய தலைமுறையினருக்கும் மோதல் ஏற்பட்டது. ஆயினும் அப்பொழுது பழைய தலைமுறையினர் கை ஓங்கியிருந்தது. சிறுவன் பஞ்சு, மிதியடிகளை இழந்தான். அவர் முதியவரான காலத்தில் இளைய தலைமுறையினர் கை ஓங்கியது. மாதவன் செருப்பு, பூட்ஸ் இரண்டையுமே பயன்படுத்தினார். ''அவற்றை வீட்டுக்குள்ளேயே அணிந்து செல்கிறாரே!'' பஞ்சு மேனன் தனது அனந்தரவன்களில் ஒருவருக்குக் கல்வி கற்பிக்க மறுத்தது நியாயமா என்று மாதவன் வினவுகிறார். காரணவனின் தேவையற்ற கருத்துரைகளை மற்றொரு அனந்தரவன் கோபாலன் எதிர்க்கிறார். பழைய தலைமுறை வலுவிழந்து விட்டது என்பதை பஞ்சுமேனன் வருத்தத்துடன் ஒப்புக்கொள்கிறார்'' எல்லாமே தலை கீழாகப் போய்விட்டது. தவறான பாதையில் உலகம் சென்று கொண்டிருக்கிறது என்பதே இதற்கு அடையாளம்.''

இந்துலேகாவின் திருமணத்தை முடிவு செய்ய அவளைக் கலந்து ஆலோசிப்பது அவசியமல்ல என்று பஞ்சு மேனனும் கேசவன்

நம்பூத்ரியும் அவளிடம் சொல்லும் போது அதற்குக் கீழ்ப்படிய இந்துலேகா மறுக்கிருள்.

''இது நம்ப முடியாதது. பகுத்தறிவுக்கு ஒவ்வாதது—அப்படியாயின் என்னை இப்பொழுது ஏன் கேட்கிறீர்கள்? இந்த விவகாரத்தை எனக்குத் தெரியாமலேயே முடித்துவிடலாமே! அதுதான் ஏற்கெனவே முடிவாகிவிட்டதே!'' என்று கூச்சலிட்டாள்.

இந்துலேகாவின் ஒளிவீசும் முகத்தில் தெரிந்த மனஉறுதி பஞ்சு மேனனைத் தலைகுனிய வைத்தது என்று நாவலாசிரியர் கூறுகிருர்.

சூரி நம்பூத்ரியை அவள் எள்ளளவும் மதிக்கவில்லை; அவனது பசப்பு வார்த்தைகளை—முட்டாள்தனமான சொற்களை அவள் பொறுமையுடன் கேட்டுக்கொள்ளத் தயாராக இல்லை. செல்வம் மிக்கவர் பெண் கேட்க வருகிருர்; அவரிடம் தகுந்த முறையில் பேசவேண்டும் என்று அவளுக்கு அறிவுரை கூறப்பட்டது. எப்படிப் பேசவேண்டும்? எத்தகைய சொற்களைப் பயன்படுத்த வேண்டும்? என்று தனக்குத் தெரியாது என்று அவள் சொல்கிருள். அப்படியானல் எப்படிப் பேசவிரும்புகிருளோ அப்படிப் பேசலாம் என்று அவளுக்கு அனுமதி அளிக்கப்பட்டது. ''அதைத்தான் செய்வதாக இருக்கிறேன்'' என்று அவள் சொன்னுள். அவளுடைய விருப்பம் போல் அந்த நம்பூத்திரியிடம் பேசினுள். நம்பூத்ரி தன்னைப் பார்க்க வந்த இரு முறைகளிலும் அவன் பேசிய முட்டாள் தனமான பேச்சுக்களுக்கு, நம்பூத்ரியின் முட்டியில் அடிப்பதுபோல் ஆணித்தரமாகப் பேசினுள். படித்த மலையாளிப் பெண், பலியாடாக இருப்பதற்கு மறுத்தாள்: வெகுண்டு எழுந்தாள்: பெண்களுக்குக் கல்வி இல்லாவிட்டால்தான் அவர்கள் பலியாடாகின்றனர் என்று சந்துமேனன் நம்பினுர். பெண்களைக் கல்வி வாசனையின்றி, பள்ளிக்கு அனுப்பாமல் வைத்திருக்கும் பழக்கத்தை அவர் அடியோடு எதிர்க்கிருர். பெண்களைப் படிக்கவைத்தால் அவர்கள் விரைவில் கைம்பெண்களாகி விடுவர் என்ற நம்பிக்கை வங்காளத்தில் சில பகுதிகளில் நிலவி வந்தது.[1] அவரது காலத்தில் அதாவது 1882-ஆம் ஆண்டு அளவில் இந்தியாவில் 800 பெண்களில் ஒரு பெண் தான் கல்வியறிவு பெற்றவள்.[2] ''பெண்கள் அறிவிலிகளாகவும் கல்லாதவர்களாகவும் இருந்தால் ஆண்கள் அவர்களை வெறுப்பதுடன் தங்கள் வெறுப்பைச் செயலிலும் காண்பிப்பர்'' என்று இந்துலேகாவின் இறுதியில் எழுதினுர். அக்காலத்திய சூழ்நிலைகளைக் கருத்தில் கொண்டு பார்த்தால் பெண்கள் கல்வி குறித்தும் சந்துமேனன் புரட்சி செய்தார் என்று சொல்லவேண்டும். மலபாரில்

---

1 & 2 மகளிர் கல்விகுறித்த தேசியக் குழுவின் அறிக்கை 1959.

உள்ள பெண்களும் இந்தியப் பெண்களும் கல்வி அறிவு பெற்று ஆண்களின் ஆணவத்திற்குப் பலியிடப்படுவதைத் தவிர்க்க வேண்டும். இந்திய மக்கள் அந்நிய தளைகளிலிருந்து விடுதலை பெறவேண்டுமென்று அவர் விரும்பினார். அந்நாள் என்று வருமோ? என்று ஏங்கினார்.

இந்துலேகா இன்றும் மக்களால் விரும்பிப் படிக்கப்படுகிறது. இது சந்துமேனனின் தலைசிறந்த படைப்பு: குணப் பண்பியல்புகளைச் சித்திரித்தல், நகைச்சுவை, எளிய நடை ஆகியவற்றைக் கொண்டே இத்தகைய தலைசிறந்த படைப்பினை உருவாக்கியதன் காரணமாக நாவலாசிரியரின் பெருமை பலமடங்கு உயருகிறது. பல்வேறு வண்ணங்களைத் தம் வண்ணப்பெட்டியில் வைத்திருந்தும் அவற்றில் இரண்டு மூன்று வண்ணங்களின் கலவைகளைக் கொண்டே எழில் மிக்க ஓவியம் ஒன்றைத் தீட்டினாற் போல சந்துமேனனின் திறமையும் எல்லா வண்ணங்களையும் பயன்படுத்தாததினால் ஓவியத்திற்குக் குறைவேதுமில்லை. மாறாக அது அந்த ஓவியனின் திறமையையும் பெருமையையும் கூட்டுகிறது. கதையமைப்பு, குணப் பண்பு, மொழி, குற்ற நிகழ்வுகள், நிச்சயமற்ற நிலை, நகைச்சுவை, அறிவியல் போன்ற பல கருவுருக்கள் நாவல் எழுத இருந்த போதிலும் அவற்றில் ஒரு சிலவற்றையே பயன்படுத்தி, தலைசிறந்த படைப்பை உருவாக்கும் திறன்படைத்த நாவலாசிரியர், தலைசிறந்த நாவலாசிரியர் என்பதில் எள்ளளவும் ஐயம் இல்லை. அத்தகைய தலைசிறந்த நாவலாசிரியர்களில் சந்துமேனனும் ஒருவர்.

# 6. சாரதா

### குற்றப் பத்திரிகை தயாராகிவிட்டது—வழக்குரைஞர்கள் சந்திக்கின்றனர்—கே (Gay)

இராமேஸ்வரத்தில் உள்ள ஒரு ஹோட்டல் அறையில் கதை தொடங்குகிறது. ராமன் மேனன் ஓர் ஓவியர். அவர் தமது மனைவி கல்யாணி அம்மாவுடனும் பன்னிரண்டு வயதான மகள் சாரதாவுடனும் அந்த ஹோட்டலில் தங்கியிருக்கிறார். ராமன்

மேனனது மாணவராகிய சங்கரனும் வேலைக்காரப் பையன் கிருஷ்ணனும் அக்குடும்பத்துடன் தங்கியிருக்கின்றனர். ஒரு நாள் கல்யாணி அம்மா திடீரென நோய்வாய்ப்படுகிறாள். எதிர்பாராத விதமாய் இயற்கை எய்துகிறாள். மேற் கொண்டு செய்வதென்ன என்பதறியாமல் திகைக்கிறார் ராமன் மேனன். வட இந்தியாவில் பல ஆண்டுகளாக வசித்து வந்த அக்குடும்பத்தினருக்குத் தென் இந்தியாவில் எவ்விதத் தொடர்பும் கிடையாது. இராமேஸ்வரத்திற்கு யாத்திரை வந்திருந்தனர். எனவே மேற்கொண்டு என்ன செய்வது என்பதை முடிவு செய்யும் வரையில் அங்கேயே இருக்கத் தீர்மானிக்கிறார். ஓரிரு நாட்கள் கழித்து, தந்தை தனது மகளுக்குத் தங்கள் கதையைச் சொல்கிறார்.

கல்யாணி அம்மா பூஞ்சோலக்கரை எடம் என்ற இல்லத்தைச் சேர்ந்தவர். அது மலபாரில் செல்வம் கொழித்த பெருநிலக் கிழார் குடும்பத்தைச் சேர்ந்த தரவாடு. அவளது மாமன் கோப்புன்னி அச்சன் அத்தரவாடின் காரணவன். அவர் ஆணவம் மிக்கவர்; கொடியவர். தன்னுடைய சுயநலனுக்காக, கல்யாணி அம்மாவை, அவருடைய விருப்பத்திற்கு விரோதமாக, மிகவும் முதிர்ந்த ஆனல் செல்வம் மிக்க ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுக்கிறார். திருமண வாழ்க்கை கல்யாணி அம்மாவுக்குப் பிடிக்கவில்லை. மகிழ்ச்சியே இல்லாது காலம் தள்ளுகிறாள். வாழ்வில் நம்பிக்கை இழந்து ஒரு நாள் வீட்டை விட்டு வெளியேறுகிறாள். அவளுடன் குடும்பத்தைச் சேர்ந்த பணியாளராகிய வைத்தி பட்டரும் வேலைக்காரப் பையன் கிருஷ்ணனும் உடன் செல்கின்றனர்; காசியை அடைகின்றனர்; அங்கு சிலகாலம் தங்க முடிவு செய்கின்றனர். அங்குத் தங்கியிருக்கையில் ராமன்மேனனைக் கல்யாணி அம்மா சந்திக்கிறாள். ராமன் மேனன் அப்பொழுது வடஇந்தியாவில் தொழில் நடத்திவந்த பிரபலமான ஓவியர்; அவருக்கு அப்பொழுது நல்ல வருவாய் கிடைத்து வந்தது. அவர் மலபாரில் உள்ள தொன்மையான, கண்ணியமான தெக்கிலாத் இல்லத்தைச் சேர்ந்தவர். கல்யாணி அம்மாவின் குடும்பத்தைப் போல செல்வமும் நிலக்கிழார் அந்தஸ்தும் இராத போதிலும் தொன்மையான, மதிப்பு வாய்ந்த குடும்பம். வாழ்க்கையில் ஏதாவது ஒரு தொழில் தெரிந்து கொள்ள அவர் தனது குடும்பத்தை விட்டு வந்து விட்டார். ஓவியம் கற்றுத் தேர்ந்தார்; வட இந்தியாவில் தொழில் தொடங்கினார். பேரும் பொருளும் புகழும் ஈட்டினார்.

அந்நிலையில்தான் கல்யாணி அம்மாவும் ராமன் மேனனும் சந்தித்தனர். விரைவில் திருமணம் செய்துகொள்ளுகின்றனர். கல்யாணி அம்மாவின் நகைகளையும் அவளிடமிருந்த பணத்தையும் திருடிக் கொண்டு அவளை நடுத் தெருவில் தவிக்க விட்டு ஓடி

விடவேண்டும் என்ற தீய எண்ணத்துடன் இதுவரை அவளைத் தொடர்ந்து வந்த கயவன், போக்கிரி வைத்திபட்டர் கல்யாணி அம்மா—ராமன் மேனன் திருமணத்திற்குப் பிறகு, தனது எண்ணம் பலிக்காது என்று புரிந்து கொண்டு மலபார் திரும்புகிறான். கல்யாணி அம்மாவுக்குப் பெண் குழந்தை பிறக்கிறது. அதற்குச் சாரதா என்று பெயரிட்டுச் செல்லமாக வளர்க்கின்றனர். அவர்கள் மகிழ்ச்சியுடன் வாழ்கின்றனர். ராமன் மேனனுக்குக் கண்ணில் ஏதோ நோய் ஏற்படுகிறது. அவரது தொழிலும் தடைப்படுகிறது; அதே நேரத்தில் அவர் பணம் போட்டிருந்த பாங்கும் திவாலாகின்றது. அவர் ஈட்டிய செல்வம் அனைத்தும் போய் விடுகின்றது. இந்த இரு பேரிடிகளினாலும் நிலையிழந்த மேனன் குடும்பத்தினர், தென் இந்தியாவுக்கு யாத்திரை கிளம்பி, இராமேஸ்வரம் வந்தடைகின்றனர்.

ஓவியம் கற்றுக் கொள்ள எட்டு வயதில் ராமன் மேனனிடம் வந்து சேர்ந்த சங்கரன் இப்பொழுது இருபத்து ஒன்று வயதாகிய போதிலும் மேனனை விட்டுப் பிரிய மனமில்லாமல் அக்குடும்பத்துடனேயே இராமேஸ்வரம் வந்தடைகின்றான். சங்கரன் அறிவுள்ள இளைஞன். உண்மையான விசுவாசம் உள்ளவன்; நட்புக்கு இலக்கணமாக அமைந்தவன் என்றெல்லாம் ராமன் மேனன் தன் மகளுக்குச் சொல்கிறார்.

மனைவியின் திடீர் மறைவினால் நிலை தடுமாறிவிட்ட ராமன் மேனன் செய்வதறியாமல் செயலிழந்து நிற்கிறார். வருங்காலம் பற்றித் திட்டவட்டமாக முடிவு செய்யும் வரையில், இராமேஸ்வரத்திலேயே தங்கத் தீர்மானிக்கிறார். இராமேஸ்வரத்திற்கு வந்திருந்த வைத்திபட்டரை ஒரு நாள் சங்கரன் தற்செயலாகச் சந்திக்கிறான். வைத்திபட்டர் கிருஷ்ணனையும் சந்திக்கிறார். அவரிடமிருந்து ராமன் மேனன் குடும்பத்தினர் பற்றிய செய்தி அனைத்தையும் தெரிந்து கொள்கிறார். அவரது சைத்தான் மூளை சுறு சுறுப்பாக வேலை செய்கிறது. ராமன் மேனனைச் சந்தித்து கல்யாணி அம்மாவின் தரவாட்டைப் பற்றியும் அக்குடும்பத்தின் பெருஞ்செல்வம் பற்றியும் உயர்ந்த நிலை பற்றியும் எடுத்துச் சொல்கிறார். கோப்புன்னி அச்சன் பற்றியும் அச்சந்தரும் அவரது கொடுமை பற்றியும் குடும்பத்தைச் சேர்ந்த ஏனையோர் பற்றியும் மேனன் அறிந்து கொண்டார். கல்யாணி அம்மாவின் தங்கை லட்சுமி, மனம் உடைந்து இறந்து போன செய்தியையும் தெரிந்து கொண்டார். உடையாந்தலி எஸ்டேட்டைச் சேர்ந்த ராமவர்மா திருமலபத் என்ற மதிப்புள்ள செல்வம் மிக்க நிலக்கிழாருக்குத் திருமணம் செய்து கொடுக்கப்பட்ட லட்சுமி, தன் கணவனைச் சந்திக்க முடியாமல் கோப்புன்னி அச்சன் தடுத்தார். வர்மாவிடம் அச்சன் கொண்ட காழ்ப்புணர்ச்சியே இதற்குக் காரணம். கண

வனைச் சந்திக்க இயலாத லட்சுமி மனமுடைந்து மரணமடைந்தாள். தரவாட்டின் மற்றொரு பெண் திருமணமாகிப் பல ஆண்டுகள் ஆகியும் மகப்பேறு இல்லாமல் இருப்பதையும் இனி வாரிசு ஏற்படுவதற்கு வாய்ப்பு இல்லை என்பதையும் ராமன் மேனன் அறிந்துகொண்டார். எனவே, மருமக்கள் தாயம் சட்டத்தின்படி, பூஞ்சோலக்கரை எஸ்டேட்டிற்கு சாரதாதான் முக்கியமான வாரிசு. வாரிசு இன்றி தரவாடு நசித்துப் போவதைத் தடுக்க ஒரே ஒரு நம்பிக்கைச் சுடர். இத்தகவல்கள் அனைத்தையும் கேட்ட ராமன் மேனன், மலபாருக்குத் திரும்ப முடிவு செய்தார். ஒரு சில நாட்கள் கழித்து, அவர்கள் அனைவரும் ராமேஸ்வரத்திலிருந்து மலபார் வந்து சேர்ந்தனர். வைத்திப் பட்டர் அழைத்ததன் மேல் அவர் வீட்டிலேயே அவர்கள் அனைவரும் தங்கினர்.

ஒரு சில நாட்கள் கழித்து ராமன் மேனன் கோப்புண்ணி அச்சனுக்கு ஒரு கடிதம் எழுதினார். அக்கடிதத்தைச் சங்கரனிடம் கொடுத்தனுப்பினார். இராமேஸ்வரத்தில் கல்யாணி அம்மா இறந்தது பற்றியும் கல்யாணி அம்மாவின் மகள் சாரதா பற்றியும் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். கல்யாணி அம்மாவைத் தான் திருமணம் செய்து கொண்ட விவரம் பற்றியும், அண்மையில் தனக்கு ஏற்பட்ட கண்ணோய் பற்றியும் அவை காரணமாக சாரதாவைக் குடும்ப நிலைக்கேற்ப வளர்க்க இயலாதது பற்றியும் குறிப்பிட்டிருந்தார். சாரதாவின் வருங்காலம், அச்சனின் கருணையையும் தாராள மனப்பான்மையையுமே பொறுத்திருக்கிறது என்பதையும் அக்கடிதத்தில் சுட்டிக் காட்டியிருந்தார். பூஞ்சோலைக் கரை போன்ற புகழ்பெற்ற தரவாடைச் சேர்ந்தவர் என்ற முறையில் சாரதா எப்படி வளர்க்கப்படவேண்டும் என்பதை முடிவு செய்யுமாறும் அதில் இறுதியாக வேண்டுகோள் விடுத்திருந்தார்.

அச்சன் தன்னுடைய மதிப்பைப் பற்றிப் பெரிதாக நினைப்பவர். எனவே அந்தக் கடிதத்தைத் தான் நேரடியாக வாங்கவுமில்லை; தானே அக்கடிதத்தைப் படிக்கவுமில்லை. அக்கடிதத்தைத் தனது பணியாளரைப் படிக்கச் சொல்லிக் கேட்கிறார். ராமன் மேனன் எழுதியுள்ளதைப் படிக்கச் சொல்லிக் கேட்டதும், அது முழுவதும் மோசடியென்று அவர் நினைத்தார். முன்பின் தெரியாத ஒருவன், நம்பமுடியாத கதை சொல்லி, உரிமை கொண்டாடி. குடும்பத்திற்கு இழிவு கற்பிக்க வந்துள்ளான் என்று அவர் திடுக்கிட்டார். காரணவனைச் சுற்றி எப்பொழுதும் ஆட்டம் போட்டுக் கொண்டிருந்த வேலையாட்களும் விஷமக்காரர்களும் கடிதம் படிக்கப்பட்ட போது கேட்டுக் கொண்டிருந்தது அந்த அவமானத்தை அதிகப்படுத்துவது போலாயிற்று. அச்சன் வெகுண்டு எழுந்தார்;

அனல் கக்கினர்; ''கடிதம் கொண்டுவந்த நாயைப் பிடித்துக் கொண்டு வா, அவனை நையப் புடையுங்கள். அவன் எலும்பை நொறுக்குங்கள். உயர் குடிப் பெருமக்களின் நற்பெயரை எப்படிக் கெடுத்துவிட்டான் பாருங்கள்'' என்று கூச்சலிட்டார். அச்சனின் ஆட்கள் சங்கரனைத் தேடத் தொடங்கினர். அதற்குள் அச்சனின் கட்டளைகளைக் கேள்விப்பட்ட சங்கரன் ஓடிவிட்டான். இதற்கிடையில் அச்சன், தனது அனந்தரவன் ராகவன் உன்னியுடன் இந்த நிலை பற்றி விவாதித்து, வைத்தி பட்டரை வரவழைத்து அவரைக் கலந்தாலோசனை செய்வது என்று முடிவு செய்தார்.

பூஞ்சோலைக் கரையிலிருந்து தப்பியோடிய சங்கரனை, அச்சனின் அனந்தரவர்களில் ஒருவராகிய கிருஷ்ணன் உன்னியின் தூதர் ஒருவர் சந்தித்தார். கிருஷ்ணன் உன்னி நல்ல மனிதர். கல்யாணி அம்மாவிடம் அனுதாபம் கொண்டவர். சாரதா, உண்மையில் கல்யாணி அம்மாவின் மகள்தானா என்பதைக் கண்டறிய சாரதாவைப் பார்க்க விரும்பினர். சாரதா கல்யாணி அம்மாவின் மகள்தான் என்றால் அவளுக்கு உதவிபுரியவும் அவர் விரும்பினர். சங்குவாரியர் என்பவரையும் சங்கரன் வழியில் சந்தித்தார். இந்த சங்குவாரியர் ராமன் மேனனைக் காசியில் முன்னரே பார்த்திருந்ததுமன்றி, ராமன் மேனன், கல்யாணி அம்மா, சாரதா ஆகிய அனைவரையும் அவருக்குத் தெரியும்.

ராமன்மேனனும் அவரது மகளும் அந்த எல்லையில் வந்திருக்கின்றனர் என்ற செய்தியை, இதற்கிடையில், குண்டன் மேனன் என்பவர் மூலமாக ராமவர்மா திருமல்பாத் தெரிந்து கொண்டார். அவசியமற்ற வழக்குகளில் அச்சன், ராமவர்மாவை இழுத்ததுமன்றி தனது பண பலத்தினாலும் தந்திரத்தினாலும் வழக்குகளில் வெற்றிகண்டு ராமவர்மாவுக்குச் செலவையும் அவமானத்தையும் ஏற்படுத்தியிருந்தார். அச்சன் பொய்வழக்குகள் போட்டு, கோவில் சொத்துக்கள் சிலவற்றையும் சிறப்புரிமைகள் சிலவற்றையும் ராமவர்மாவிடமிருந்து பறித்திருந்தார்; குத்தகைக்காரர்களை வர்மாவுக்கு எதிராகத் தூண்டிவிட்டு வேறு சில சொத்துக்களையும் இழக்கும்படிச் செய்திருந்தார். வர்மாவின் குடும்பத்தைச் சேர்ந்த இரு பெண்களை மணம் செய்து கொள்ள முன் வந்த நம்பூத்ரிகள் இருவரை அச்சுறுத்தி ஓடச் செய்து வர்மாவை அவமானப்படுத்தினர். இன்னும் பல்வேறு வழிகளில் வர்மாவைத் தலைகுனியச் செய்திருந்தார். வர்மாவை மீண்டும் மீண்டும் துன்புறுத்தி அவமானப்படுத்துவதே அச்சனது தொழிலாக இருந்தது. வர்மாவையும் அவரது மனைவியையும் பிரித்து வைத்தார் அச்சன்; அதன் காரணமாக வர்மாவின் மனைவி மனமுடைந்து இறந்து போனாள். வர்மாவால் இவையனைத்தையும் மறக்க முடியவில்லை; அச்சன் மீது பழி தீர்த்துக் கொள்ள ஒரு நல்ல வாய்ப்புக்காகக்

காத்திருந்தார். குண்டன் மேனனுக்கும் இது தெரியும். வம்பு வளர்ப்பதல்லவா அவர் தொழில்[1]? அச்சனை முறியடிக்க இதோ நல்லதோர் வாய்ப்பு நாடி வந்துள்ளது என ராம வர்மாவுக்கு ஆலோசனை கூறினார். சாரதாவும் அவளது தந்தையும் வைத்திபட்டரோடு தங்கியிருந்தனர் என்ற தகவலும் குண்டன் மேனனுக்குக் கிடைத்திருந்தது. 'வைத்தி பட்டரைப் பிடித்து, சாரதாவையும் அவளது தந்தையையும் தன் அரண்மனைக்கு அழைத்து வரும்படி வர்மா, குண்டன் மேனனுக்குக் கட்டளையிட்டார்.

சாரதாவின் வருங்காலம் பற்றி காரணவனுக்குத் தான் எழுதிய கடிதத்திற்கு மறுமொழியை எதிர்பார்த்திருந்தார் மேனன். ஆனல், வைத்திப் பட்டரோ சூழ்ச்சிகள் செய்து கொண்டிருந்தார். ராமன் மேனன், கல்யாணி அம்மாவின் வாழ்க்கையில் வந்து சேர்ந்ததனுல்தான், கல்யாணி அம்மாவைத் தான் மோசடி செய்ய இயலவில்லை என்பதை அவரால் மறக்க முடியவில்லை. ராமன் மேனன் பெருமளவு பணமும் நகைகளும் வைத்திருப்பதாக வைத்தி நம்பினர். தக்க தருணம் வாய்க்கும் போது அப்பணத்தையும் நகைகளையும் பறித்துக் கொள்ள அவர் சூழ்ச்சி உள்ளத்தில் ஓர் அருமையான திட்டம் வகுத்திருந்தார். ஆனல் நாட்கள் செல்லச் செல்ல அவர் ஒன்று புரிந்து கொண்டார். விசுவாசமுள்ள சங்கரன் விழிப்புடன் ராமன் மேனனையும் சாரதாவையும் பாதுகாக்கும்வரை, அவர்களுக்கு எவரும் தீங்கிழைக்க முடியாது என்பதை அவர் நன்குணர்ந்தார். எனவே அவர் இன்னெரு கயவனைப் பிடித்து, உயிரைக் குடிக்கும் நஞ்சு ஒன்றைத் தயாரித்தார். சங்கரன் பருகும்பாலில் இந்த நஞ்சினைக் கலந்துவிடும்படி வேலைக்காரப் பையன் கிருஷ்ணனுடன் சதி செய்தார். இராமன் மேனனைப் பார்க்க வந்த இளம் நம்பூத்ரி ஒருவருக்கு இப்பால் தவறுதலாகக் கொடுக்கப்பட்டது. அவர் உடனடியாக உயிர் நீத்தார். சாரதாவின் தனி அழகைப் பற்றிக் கேள்விப்பட்ட அந்த நம்பூத்ரி ஒரு முறை சாரதாவைப் பார்த்து விட்டுப் போகலாம் என்றுதான் வந்திருந்தார். பட்டரின் கைப் பாவையாகிவிட்ட கிருஷ்ணன் அவரது கட்டளையின் படி, பால் வைத்திருந்த ஏனங்களை உடனடியாகக் கழுவி வைத்து விட்டான். நம்பூத்ரி காலராவில் இறந்து விட்டார் என்று குரலெழுப்பிய பட்டர், அந்த நம்பூத்ரியின் உடலை அவசர அவசரமாக எரித்து விட்டார். தனது கொடிய குற்றத்தைக் காட்டிக்கொடுத்து விடக்கூடிய தடயங்கள் அனைத்தையும் அழித்துவிட்டதாக அவர் நம்பினர்.

---

1. இத்தகைய வம்பர்கள் பற்றி சந்துமேனன் நன்கு விவரித்துள்ளார்.

தவறு எதுவும் நடந்துவிட்டதாக ராமன் மேனனும் சங் கரனும் சந்தேகப்படவேயில்லை. ஆனால், சாரதாவை அழைத்துக் கொண்டு அவர்கள் இடம் மாறினார்கள். அவர்கள் நலனில் அக்கறை கொண்டுள்ளவன் போல அவர்களைச் சுற்றிச் சுற்றி வலம் வருவதை பட்டர் நிறுத்தவில்லை. தனது நம்பிக்கையினை யும் இழந்து விடவில்லை. ஆனால் சாரதாவையும் ஏனையோரையும் அழைத்துச் செல்ல ராமவர்மா அனுப்பிய ஆட்கள் வந்து சேர்ந் ததும் பட்டரது திட்டங்கள் நொறுங்கின. அகப்பட்டதைச் சுருட்டவேண்டும் என்ற முடிவுக்கு வந்த அவர் கெஞ்சி, அழுது, புலம்பி சில நகைகளையும் சிறிது பணத்தையும் ராமன் மேனனிட மிருந்தும் சாரதாவிடமிருந்தும் கறந்து கொண்டார்.

ராமன் மேனனுக்கும் சாரதாவுக்கும் ராமவர்மா புகலிடம் கொடுத்துள்ள செய்தியை ராகவன் உன்னி வாயிலாக அச்சன் கேள்வியுற்றார். ராமன் மேனன் கடிதத்திற்குத் தகுந்த பதில் எழுதப்படவேண்டும் என்றும் பதில் கிடைக்கவில்லை யென்றால் அவர் வழக்குத் தாக்கல் செய்துவிடுவார் என்றும ராகவன் உன்னியின் திறமை வாய்ந்த மகன் கிருஷ்ணமேனன் அச்சனுக்கு ஆலோசனை கூறினார். என்ன நடவடிக்கை எடுக்கப்படவேண்டும் என்பது பற்றிக் குடும்ப வழக்குரைஞர்களாகிய கற்பூர அய்யரை யும் சாமுமேனனையும் கலந்து ஆலோசித்து வருமாறு தாசன் மேனன் என்ற மற்றொரு வம்பரை, அச்சன் உடனடியாக அனுப் பினார். இந்த வழக்குரைஞர்கள், வக்கீல்கள் சங்கத்தில் இருந் தனர். இந்தச் சங்கத்தைப் பற்றி விரிவான வர்ணனை ஒன்று இப்புத்தகத்தில் உள்ளது. அங்கு எதுவுமே முழுதாக இல்லை. கூரையில் ஒட்டடைகள இருந்தன. சுவர்களே இல்லை. அந்த இடத் தில் இருந்த மேஜை நாற்காலி போன்றவற்றுக்குக் கால்கள் இல்லை, அப்படியிருந்தும் அப்பொழுது அங்கு சில வழக்குரைஞர்கள் இருந் தனர். அவர்கள் இலக்கியம் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். அக்காலத்திய நாவல்கள் பற்றியும் எழுத்தாளர்கள் கையாண்ட வடமொழி கலந்த மலையாளம் பற்றியும் தனது கருத்துக்களைச் சந்துமேனன் அந்த வழக்குரைஞர்கள் வாயிலாகத் தெரிவிக் கின்றார். கிருஷ்ணமேனன் தயாரித்த பதிலையே ராமன் மேன னுக்கு அனுப்பலாம் என கற்பூர அய்யர் ஆலோசனை கூறினார். ராமன் மேனனது கடிதத்தில் கண்டுள்ளவை அனைத்தும் மோசடி யானவை என்றும், தரவாடைச் சுரண்டும் எண்ணத்தையும் தரவாடுக்குக் கெட்ட பெயர் கொண்டு வரும் எண்ணத்தையும் ராமன் மேனனும் அவரது ஆலோசகர்களும் கைவிடவில்லை என் றால் அவர்கள் பெரும் அவதிக்கு ஆளாக நேரிடும் என்பதே அந்த பதிலாகும்.

ஒரு வாரம் கழித்து ராகவமேனன் என்ற வழக்குரைஞரிடமிருந்து கோப்புன்னி அச்சனுக்குக் கடிதம் ஒன்று பதிவு அஞ்சலில் வந்தது. சாரதா பூஞ்சோலைக் கரை தரவாடின் பெண் வழிச் சந்திதியாக ஏற்றுக் கொள்ளப்பட்டு வளர்க்கப்பட வேண்டும் என்றும் இல்லையெனில் இதற்காக வழக்குத் தொடரும் பொறுப்பு தம்மிடம் ஒப்படைக்கப் பட்டிருப்பதாகவும் அவ்வழக்குரைஞர் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். இக்கடிதத்தினால் மன எரிச்சலும் கவலையும் அடைந்த அச்சன், வைத்தி பட்டருக்கும் சோதிடச் சாத்து பணிக்கருக்கும் சொல்லி அனுப்பினார். சோழிகளை அங்கும் இங்குமாகப் பிரித்து வைத்தார் சோதிடர். சோழிகளின் நிலையை ஆராய்ந்தார். கிரகங்கள் அச்சனுக்குச் சாதகமாக இருப்பதாகவும் வழக்கில் அவர்தான் வெற்றியடைவார் என்றும் திண்ணமாகக் கூறினார். தனது கூற்றுக்கு ஆதாரமாகப் பல மேற்கோள்களை எடுத்துக் காட்டினார். அச்சன், சோதிடராகிய சாத்து பணிக்கரைக் கலந்து ஆலோசித்ததைக் கேட்டறிந்த திருமல்பாத், தானும் அதே சோதிடரை வரவழைத்துச் சோதிடம் கேட்டார். அவரது எண்ணத்தை அறிந்த பணிக்கரும் அதே சோழிகளைக் கொண்டு அவருக்குச் சாதகமாகச் சோதிடம் சொன்னதுமின்றி அதற்கேற்ப மேற்கோள்களையும் காட்டினார். கிரகங்களும் சகுனங்களும் அச்சனுக்குச் சாதகமாக இல்லை என்று அடித்துச் சொன்னார். திருமல்பாத்துக்குச் சாதகமாகவே அவை இருப்பதாகவும் எனவே வெற்றி அவருக்கே கிட்டும் என்றும் ஆணித்தரமாகச் சொன்னார். சோதிடர்களின் தந்திரங்களைக் கவனித்துப் பார்த்துள்ள வாசகர்கள் இக்காட்சிகள் எந்த அளவுக்கு நடைமுறையை யொட்டி அமைந்திருக்கின்றன என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

கோப்புன்னி அச்சன், வைத்திபட்டருக்கும் ஆள் அனுப்பியிருந்தார். ராமன் மேனனிடமிருந்து இயன்ற அளவுக்குப் பணம் பறித்தாகி விட்டது, இனி ராமன் மேனனிடம் உண்மையாக நடந்து கொள்வதால் தனக்குப் பயனில்லை. இனி அவருக்கு எதிர் கட்சியில் சேர்ந்தால்தான் தனக்கு ஆதாயம் என்பதை அந்தச் சூழ்ச்சிக்காரப் பட்டர் புரிந்து கொண்டுவிட்டார். எனவே அச்சன் முன் பணிவுடன் வந்து நின்று, தான் அச்சனிடம்தான் உண்மையான பற்றுள்ளவர் போல நடித்து, சாரதா பற்றிய உண்மையான வரலாறு, வேலைக்காரப் பையன் கிருஷ்ணனுக்குத் தான் தெரியும் என்று வைத்தி பட்டர் சொன்னார். கிருஷ்ணன் வரவழைக்கப்பட்டான். வைத்தி பட்டர் சொல்லிக் கொடுத்த பாடத்தைக் கிளிப்பிள்ளை போல் கிருஷ்ணன் கூறினான். நம்ப முடியாத கதை. ராமன் மேனன் உண்மையில் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த ராமன் பிள்ளை என்றும் வட இந்தியாவில்

இருக்கையில் உஜ்ஜயினியில் அவருக்கு முஸ்லீம் விலைமகள் ஒருத்தி இருந்தாள் என்றும் ராமன் பிள்ளை கல்யாணியுடன் தொடர்பு கொள்வதற்கு முன்பே சாரதா அவளுடைய மகள் என்றும் சங்கரன் ஒரு சூதாடி, குடிகாரன் என்றும் கிருஷ்ணன் கதை சொன்னான். சாரதா கல்யாணி அம்மாவின் மகள் போலவும் பூஞ்சோலைக்கரை தரவாடின் வாரிசுபோலவும் ராமன் மேனனால் வளர்த்து வரப்படவேண்டும் என்றும் சங்கரன் திட்டமிட்டிருந்ததாகவும் கிருஷ்ணன் சொன்னான்.

அச்சன் இதைக் கேட்டு ஆத்திரம் அடைந்தார். திருமல் பாத்துக்கு எச்சரிக்கைக் கடிதம் ஒன்று உடனடியாக அனுப்பப் படவேண்டுமென்றும் முஸ்லீம் பெண் ஒருத்திக்குப் புகலிடம் கொடுப்பதன் மூலம் கோயில், குளங்கள், அரண்மனை ஆகியவற்றின் தூய்மையைக் கெடுக்க வேண்டாம் என்று திருமல் பாத்துக்கு எச்சரிக்கை விடுக்கப்பட வேண்டுமென்றும் அச்சன் விரும்பினார். இது பற்றிக் கிருஷ்ணமேனன் கலந்தாலோசிக்கப் பட்டார். சாரதா முஸ்லீம் வகுப்பைச் சேர்ந்தவள் என்று திட்ட வட்டமாக மெய்ப்பிக்கும் சான்றுகள் கிடைத்தால் ஒழிய அத்தகைய கடிதம் எழுதுவது விரும்பத்தகாதது என்றும் கிருஷ்ண மேனன் கூறினார். அக்கடிதத்தைத் தாம் எழுத முடியாது என்றும் அவர் மறுத்தார்.

மாறுபட்ட ஆலோசனையைக் கிருஷ்ணமேனன் தெரிவித்தும் கூட திருமல்பாத்துக்கும் உதயந்தளி பகுதியில் இருந்த நம்பூத்ரி மடம் ஒன்றுக்கும் கடிதம் எழுதப்பட்டது. அப்பகுதியில் வசிக்கும் சாரதா, முஸ்லீம் வகுப்பைச் சேர்ந்தவள் என்ற எச்சரிக்கை அக்கடிதத்தில் விடுக்கப்பட்டது. அப் பகுதியில் வாழ்ந்து வந்த மக்களிடையே, குறிப்பாக நம்பூத்ரிகளிடையே, இக்கடிதம் பரபரப்பை ஏற்படுத்தியது. திருமல்பாத் தனக்கு வந்த கடிதத்தை ராமன் மேனனுக்கும் சங்கரனுக்கும் காண்பித்தார். அக்கடிதம் அவருக்கு நகைப்பை உண்டாக்கியது. திருமல்பாத் கேட்டுக் கொண்டதன்மேல், சங்கரன் அக்கடிதத்திற்குப் பதில் வரைந்தார். ராமன் மேனனும் சாரதாவும் அரண்மனைக்குள் வசிக்கவில்லை என்றும் அரண்மனைக்கு வெளியே தம் சொந்தச் செலவில் வசிக்கின்றனர் என்றும் அரண்மனைச் செலவில் வசிக்கவில்லை என்றும், அக்கடிதத்தில் மறைமுகமாகச் சொல்லப்பட்டுள்ள அவதூறுகள் ஆதாரமற்றவை, வீண்பழி சுமத்துபவை, முறைகேடானவை என்றும் சங்கரன் தன் மறுமொழியில் குறிப்பிட்டிருந்தார்.

சாரதாவின் உரிமை வழக்கு பற்றிய சாதக பாதகங்களைக் குண்டன் மேனன், வழக்குரைஞர் ராகவ மேனனுடன் விவாதித்தார். மலையாளம் மட்டும் தெரிந்த பலரைப் போல, குண்டன் மேனன் ஆங்கிலச் சொற்றொடர்களைச் சிதைத்துப் பேசினார்.

தன்னுடைய அறிவாற்றலைக் காண்பித்துக் கொள்வதற்காக அவர் ஆங்கிலச் சொற்களை, குறிப்பாக சட்டம் குறித்த சொற்றொடர்களைத் தவருக உச்சரித்து, அவற்றைத் தம் பேச்சினூடே அள்ளித் தெளித்தார். இச் சொற்களைச் சிதைப்பதனுல் ஏற்பட்ட நகைச் சுவையைத் தவிர, சொற்களின் உச்சரிப்பை மாற்றி உச்சரிப்பதனுல் ஏற்படக்கூடிய பொருள் மாற்றம், மலையாளம் தெரிந்தவர்களுக்கு நகைப்பை உண்டாக்கும். எடுத்துக் காட்டாக ரிலீஃப் ஆக்ட் என்ற சொல்லை ரில்லி ஆக்ட் என்றும் அலிபி என்ற சொல்லை அலூப்பி என்றும போனஃபைடிஸ் என்ற சொல்லை போனபிட்டு என்றும் எவிடன்ஸ் என்ற சொல்லை லாவிடன்ஸ் என்றும் மாலஃபைடிஸ் என்ற சொல்லை மேலப்பிட்டு என்றும் ரெஸ் இன்டரலையஸ் அட்ஜூடிகேட் என்ற சொல்லை ரீஸ் இன்டிராவலியம் சூடிக் கெட்டு என்றும் நகைப்பிற்கிடமாகும் வகையில் தவருக உச்சரிப்பார். பிட்டு என்ருல் ஒருவகை உணவுப்பண்டம்; சில சமயங்களில் மாவு என்பதையும் குறிக்கும்: சூடிக்கெட்டு என்ருல் ஒரு கட்டு கயிறு என்றும் பொருள்படும். வாதத்தில் தோற்ருலும், அவர் தன் வாதத்தை நிறுத்தமாட்டார். திருமல் பாத் விரும்பியபடி, சாரதாவின் வழக்கை, ராகவமேனனிடமும் மாவதமேனன் என்ற மற்ருெரு சிறந்த வழக்குரைஞரிடமும் குண்டன்மேனன் ஒப்படைத்தார். இதற்கிடையே, சங்கரன், சுங்கு வாரியாரைச் சந்தித்து, கல்யாணி அம்மா பற்றியும் சாரதா பற்றியும் அவர் சாட்சியம் அளிக்க வேண்டும என்றும் கேட்டுக் கொண்டார். சுங்குவாரியாருக்குக் கோப்புண்ணி அச்சனிடம் அச்சம் மிகுதியாக உண்டு; அதே சமயத்தில் உண்மையைச் சொல்ல வேண்டும் என்ற ஆர்வமும் அதிகம். வாரியாரின் தந்தையார் அனைவராலும் மதிக்கப்பட்ட பேரறிஞர் என்பதையும் சுங்கு வாரியாரும் இறைவனிடத்தில் ஈடுபாடும் உண்மை விளம்புவதில் பற்றும் உடையவர் என்பதையும் வலியுறுத்திய சஙகரன், அச்சன் இருப்பினும் இராவிடினும் அச்சமின்றி உண்மையைச் சொல்ல வேண்டுமென்று அவரைக் கேட்டுக் கொண்டான்.

இரு பகையாளிகளிடையேயும் நடந்த கடிதப் போக்குவரத்து, இரு தரப்பு வழக்குரைஞர்களின் வாதம் ஆகியவை அப்பகுதி மக்களுக்குத் தெரிந்தன. அச்சன், திருமல்பாத் ஆகிய இருவரிடையேயும் உள்ள பகைமையைப் பன்மடங்கு பெருக்குவதற்கு இருதரப்பைச் சேர்ந்தவர்களும் தம்மாலியன்ற பங்கைச் செய்தனர்.

சந்துமேனன் சாரதா பற்றி பதினேறு அத்தியாயங்கள் எழுதினர். நீதிமன்றத்தில் இரு தரப்பினரும் கடுமையான வாதம் செய்வதற்குத் தயாராகவுள்ள நிலைவரையில் எழுதி முடித்தார்.

ஒவ்வொரு தரப்பினரின் பின்னணியில், தகராறைப் பெரிதாக்கிக் கொண்டு, உறவினர்கள், வழக்குரைஞர்கள், ஆதரவாளர்கள், சந்தர்ப்பவாதிகள், துதிபாடிப் பிழைப்பவர்கள், மற்றவர்கள் விவகாரங்களில் தலையிடுவதையே தம் தொழிலாகக் கொண்ட கடையர்கள் ஆகியோர் பட்டாளம் பட்டாளமாகத் திரண்டு நின்றனர். இவர்கள் அனைவரும், சந்து மேனன், நீதிமன்றத்திலும் திருமணச் சீர்திருத்த ஆணைக் குழுவிலும் அடைந்த அனுபவத்தின் வாயிலாகப் படைக்கப்பட்ட பாத்திரங்கள்.

ஆனால் இதற்கிடையில் அவரை இறைவன் தன் திருவடியில் சேர்த்துக் கொண்டு விட்டான். சாரதாவின் வாரிசுரிமை என்ன வாயிற்று? வைத்திப்பட்டன் கதி என்ன? ஏனையோர் எந்நிலையை அடைந்தனர் என்ற வினுக்களுக்கு விடை அளிக்காமலே அவர் இம் மண்ணுலகை விட்டு மறைந்து விட்டார்.

நீதி மன்ற வழக்கு வரைதான் அவர் எழுதி முடித்திருந்தார். அதற்குள் காலன் அவரை நம்மிடையேயிருந்து பறித்துக் கொண்டான். குற்றப் பத்திரிகைகள் தயாராகிவிட்டன. வழக்குரைஞர்கள் வாதப் போர் செய்யத் தயாராக இருந்தனர்' பின்னர் திருவாளர்கள் அந்தப்பை, கோபால கிருஷ்ண குருப், அண்மையில் ராதாகிருஷ்ண மேனன் ஆகியோர் இக்கதையை தங்கள் ஆர்வம் காரணமாக, முடித்தனர். இவர்கள் எழுதி முடித்தது எந்த அளவுக்குச் சந்துமேனன் எண்ணிவைத்திருந்த முடிவை ஒட்டி இருந்திருக்குமோ நமக்கு தெரியாது. அவர் பக்கவாதம் கண்டு படுத்திருந்த போது இக்கதை குறித்து அவர் எழுதிவைத்திருந்த குறிப்புகள் அனைத்தையும் அழித்து விட்டார் என்று ஒரு கதை சொல்லப்படுகிறது. தமது குறிப்புகளை மற்றவர்கள் தவருகப் புரிந்து கொள்ளக்கூடாது, அவற்றைத் தவருகப் பயன்படுத்தக்கூடாது என்று அவர் எண்ணினர் போலும். சந்து மேனன் போன்ற அறிவாளிகள் பல ஆண்டுகளுக்கு ஒரு முறை தான் தோன்றுகின்றனர், என்று இலக்கியத் திறனய்வாளர்கள் ஒருமுகமாகக் கருதுகின்றனர்.

# 7. சாரதா — ஓர் ஆய்வு

சாரதாவை ஆய்வு செய்யத் தொடங்கும் போது, விவரந் தெரியாத நிலப் பகுதிக்குள் கால்வைப்பதைப் போன்று இருக்கிறது. மூன்றில் ஒரு பங்கு கதையைத்தான் சந்துமேனன் நமக்குத் தருகிறார். கதை எப்படித் தொடர்ந்திருக்கும்? கதைப் பாத்திரங்கள் இதற்குமேல் எப்படி நடந்து கொண்டிருப்பார்கள்? என்று நமக்குத் தெரியாது. சந்துமேனன் நமக்குக் கொடுத்துள்ள கதை அளவுக்குத்தான் நாம் கருத்துக் கூறமுடியும். முடிவுபெறாத கதையை எவ்வாறு முடித்திருப்பார் என்று நாம் ஊகித்துப் பார்க்கவே முடியும். ''சாரதாவைப் பற்றிக் கருத்துரை கூறுவதை விட, அது பற்றி நாம் வருத்தப்படலாம்'' என்று திரு. எம். பி. பால் அவர்கள் ''நாவல் சாகித்யம்'' என்ற தமது நாவலில் கூறியுள்ளார். வெகு நன்றாகத் தொடங்கிய கதையைச் சந்துமேனன் முடிக்க முடியாது போனது நம்முடைய அவப்பேறுதான்.

கதையின் தொடக்கத்திலேயே சாவின் நிழல் படிகிறது. கதைத் தலைவி சாராதாவின் தாய், புனித யாத்திரையாக ராமேஸ்வரத்திற்கு வந்து, அந்த இடத்திலேயே எதிர்பாராத முறையில் இறந்து போகிறாள். அப்பொழுது சாரதாவின் வயது பன்னிரண்டு. சாரதாவின் தந்தை, தொழிலையும் வருவாயையும் இழந்து நின்ற நிலை. தந்தையும் மகளும் முன்பின் தெரியாத இடத்தில் நிலை தடுமாறி, செய்வதறியாது நிற்கின்றனர்.

கதை மலரின் இதழ் அவிழத் தொடங்குகிறது. புதிய நபர்கள் நம்முன் வரத் தொடங்குகின்றனர். கிருஷ்ணன், சங்கரன், வைத்தி பட்டர், கொப்புன்னி அச்சன், சாத்துப் பணிக்கர், குண்டன் மேனன், கிருஷ்ண மேனன், இன்னும் பலர். இந்துலேகாவைப் போல, இக்கதையிலும் பாத்திரங்களின் குணப் பண்பியல்புகளை சந்துமேனன் அழகாகச் சித்திரித்துள்ளார்; சாரதா — ஒரு சிறு பெண்; ஆனால் அழகுத் தேவதை; பண்பின் உறைவிடம். சாரதாவைப் பற்றி விவரிக்கையில் மேனன் கவிஞராகவே மாறிவிடுகிறார். அந்த எழிலரசியின் வனப்பை விவரிக்க, மூன்று பக்கங்கள் எழுதியுள்ளார். அழகின் திருவுரு அவள்; மொட்டாக இருக்கும் போதே எழிலின் முழு வடிவமாக விளங்கும் அவள், இதழ் விரிந்து மலரும் போது இந்த உலகில் உள்ள எழிலெல்லாம் திரண்டு உருவெடுத்தாற் போலத் திகழ்வாள் என்று வர்ணிக்கிறார். ''படிப்

படியாக அவள் அழகு உயர்ந்து கொண்டே வந்தது; அவள் சிறிது சிறிதாக மலர்ந்து கொண்டே வந்தாள். அவள் முழுவதும் மலர்ந்து உலகையே மகிழ்விக்கும் அளவுக்கு வளர்ச்சி அடையும் பொழுது அவள் எழிலைப் பார்த்து அனுபவிக்கும் கண்கள் உண்மையில் நற்பேறுள்ளவை'' என்று ஆசிரியர் கூறுகிறார்.

இந்துலேகாவில் மாதவன் வந்தது போல, சாரதாவில், மாதவனுக்கு இணையாகக் கிருஷ்ணமேனனைக் கொண்டுவர ஆசிரியர் எண்ணினார் என்று தோன்றுகிறது. கிருஷ்ணமேனனது தோற்றத்தையும் அறிவையும் ஆற்றலையும் விவரிப்பதற்காக ஆசிரியர் ஒரு சில பக்கங்களையே ஒதுக்குகிறார். சீரிய பண்புகளும் உயர்ந்த கல்வித் தகுதிகளும் உடைய கிருஷ்ணமேனன் முன்னுக்கு வரக் கூடிய, திறமையான வழக்குரைஞர்.

கொப்புன்னி அச்சன் செல்வம் கொழிக்கும் பூஞ்சோலைக்கரை எடத்தின் காரணவன்; முன் கோபி; ஆணவக்காரர்; சூழ்ச்சிக் காரர்; இந்துலேகாவில் வரும் காரணவன் பஞ்சுமேனன், இந்துலேகாவிடம் தனிப்பாசம் வைத்திருந்தது போல, அச்சனுக்கு எவரிடமேனும் தனிப் பாசம் உண்டா? அவருடைய பண்புகளில் சிறப்பியல்பு ஏதேனும் உண்டா? முடிவான தீர்ப்பு எதையும் நாம் சொல்ல இயலாது. ஏனெனில் கதை முடிவுறா நிலையில் மொட்டையாக நின்று விட்டது.

வைத்திபட்டர் சுயநலக்காரர்; இக்கதையின் போக்கிரி. பட்டரின் தோற்றத்தைச் சந்துமேனன் விவரிப்பதிலிருந்தே அவரது கொடிய உள்ளத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். மிகவும் அருவறுப்பான தோற்றம்; தொட்டால் ஒட்டிக் கொள்ளும் கறுப்பு; எலிவால் போன்ற நரைத்த குடுமி; வயது முதிர்ச்சியின் காரணமாக மூன்று அல்லது நான்கு பற்களைத் தவிர எல்லாப் பற்களும் விழுந்து விட்டன. அவையும் வாய்க்கு வெளியே நீட்டிக் கொண்டிருந்தன. அப்பற்களை அவராலேயே பார்க்க முடிந்தது; அவை அவருக்கும் பிறருக்கும் அருவறுப்பை அளித்தன. குழி விழுந்த கண்கள்; அவை நல்ல பாம்பின் கண்கள் போல அவ்வப் போது ஒளிவீசின; எதையாவது கூர்ந்து கவனித்தாலும் பதட்டத்துடன் பேசினாலும் கடுமையாகச் சிந்தித்தாலும், வியப்பெய்தினாலும் மட்டிலா மகிழ்ச்சியடைந்தாலும் அவர் கண்கள் இங்கும் அங்கும் தாவி ஒளி வீசின. திடீரென கண்கள் முன்வந்து நிலை குத்தி நின்று, பார்ப்பதற்கு இறந்தவர் கண்கள் போலத் தோன்றினாலும் அவை கொடூரமாகவும் கொடுமையாகவும் காணப் பட்டன. அவரது கண்களைப் பார்த்தவர்கள் அச்சமுற்றனர். நாகப்பாம்பு ஒன்று கோபத்துடன் தலைதூக்கி படம் விரித்து ஒரே பாய்ச்சலில் கொத்தத் தயாராக இருப்பது போன்று இருந்தது. உடல் வற்றிப்போய் மெலிந்து கூனிக் காணப்பட்டது.

மரத்தின் கிளை ஒன்று தீயினுல் கருகிக் காணப்படின் எப்படியிருக்குமோ அப்படி அவர் தோற்றம் காணப்பட்டது. அவரைப் பார்த்தால் வெறுக்கத்தக்க, பிணம் தின்னும் பேய் போலத் தோன்றியது. இதுதான் போக்கிரி வைத்திபட்டர் பற்றிய வருணனை.

மற்ெருரு சுவையான பாத்திரம் சோதிடரான சாத்துப் பணிக்கர். கொப்புன்னி அச்சனும் ராமவர்மா திருமல்பாத்தும் சோதிடரிடம் நம்பிக்கை வைத்தனர். ஆனுல் சோதிடரின் இரட்டை வேடத்தைக் கண்டு நமக்கு நகைப்பு ஏற்படச் செய்கிருர் ஆசிரியர். அச்சனுக்கும் ராமவர்மாவுக்கும் சோதிடத்தில் நம்பிக்கை இருந்தது. எனவே, அவர்கள் பணிக்கரிடம் கண்மூடித்தனமான நம்பிக்கை வைத்தனர். வருங்காலத்தைப் பற்றி அவர் சோதிடம் உரைக்கையில் அவர் செய்யும் செய்கைகள், அச்சன், ராமவர்மா ஆகியோரின் கண்களை மறைக்கின்றன. ஆனுல், நமக்குச் சிரிப்புத்தான் வருகிறது. அவர் சாதுரியமாகக் கேள்விகள் கேட்டார். சூழ்நிலைகளைச் சாமர்த்தியமாக அவருக்குச் சாதகமாகப் பொருள் கூறினுர். அச்சனுக்குத் தோல்வி கிட்டும் என்று ராமவர்மாவிடம் சொன்னுர். ராமவர்மாவுக்கு வெற்றி கிட்டாது என்று அச்சனிடம் சொன்னுர். இப்படியாக இருவருடைய நம்பிக்கையையும் அவர் சம்பாதித்துக் கொண்டார். இருவரிடமிருந்தும் ஏராளமான பரிசுகளைப் பெற்றுக் கொண்டார். சாரதாவின் முதல் பாகத்திலிருந்து விடைபெற்றுக் கொண்டார். சந்துமேனன், பணிக்கர் நம்மிடையேயிருந்து விடைபெற்றுக் கொண்டவுடன், கிரேக்க நாட்டுப் பாடலைப் போன்று நீதி சொல்கிருர்; ''இக் கயவனைப் பற்றி நான் இனி எதையும் எழுதப்போவதில்லை. தன்னுடைய வஞ்சகமான பேச்சுக்களினுல் என் நாட்டுமக்களை மயக்கி அவன் பணம் பறித்துச் செல்லட்டும்.''

குண்டன்மேனன் தனிப்பட்டதொரு பாத்திரம். நடமாடும் செய்திக் களஞ்சியமாக விளங்கிய இவர், வம்பர் என்று சொல்லப்படுகிற வகையைச் சேர்ந்தவர். அவரைப் பற்றி ஆசிரியர் கொடுத்துள்ள வர்ணனை வருமாறு. ''ஒள்ளுர் வம்பன் என்ற பேர் இவருக்கு ஏன் கொடுத்தேன் என்ருல் இவர் அரசு ஊழியம், வாணிகம், வேளாண்மை, வீட்டு நிர்வாகம், ஆசிரியர் தொழில், கைத்திறத் தொழில், உடல் உழைப்பு, புனித யாத்திரை அல்லது பிச்சையெடுத்தல் போன்ற எத்தொழிலையும் முறையாகவோ, செவ்வையாகவோ செய்ததில்லை. ஆனுல், நீதிமன்றங்களில் வழக்கு நடத்துவதில் மிகுந்த அனுபவம் பெற்ருர்; வழக்கு நடத்துவதில் இவருக்கிருந்த ஆர்வத்தினுல் அவரிடம் இருந்த சிறிதளவு செல்வமும் கரைந்து விட்டது. வழக்குகள் நடத்துவதில் வழக்குரைஞர்களுக்கு ஆலோசகர் போன்று நடிப்பார். சட்டம்

தொடர்பான ஒரு சில சொற்றொடர்களை கவனம் வைத்துக் கொண்டு, மனுக்கள், தஸ்தாவேஜுகள், குடுமப ஒப்பந்தங்கள் ஆகியவற்றை எழுதுவதில் சிறந்த வல்லுநர் என்று பாமர மக்கள் நம்பும்படி நடந்து கொள்வார். இவரது செயல்களினால், பெரிய, செல்வம் மிக்க குடும்பத்தினரிடையே ஒற்றுமைக்குக் கேடு ஏற்பட்டு அதனால் வீணான வழக்குகள் உருவாகி, அக்குடும்பங்களே அழிந்து போயின! குண்டன்மேனன் அத்தகைய வம்பர்களில் ஒருவர். இத்தகைய வழக்குகளில் ஈடுபட்டு அவர் தமது தரவாடையே அழித்துவிட்டு வறியவராக ஆனார். ஆனாலும், அவர் எப்பொழுதும் தூய்மையான வேட்டியுடுத்து, மேலே துண்டு ஒன்றைத் தோளிலே போட்டுக் கொண்டு, கையில் கைத்தடி, கால்களில் தேய்ந்து போன மிதியடிகள், முறுக்கி வைக்கப்பட்ட வழுப்பேறிப்போன பட்டுக்குடை ஒன்று ஆகியவற்றுடன் எப்பொழுதும் காணப்பட்டார். தாழ்ந்து போன நாட்களிலும் அவர் தம் மதிப்பை விட்டுக் கொடுக்கத் தயாராக இல்லை; ஆணவமாகப் பேசுவதைக் குறைக்கவில்லை; ஆனால் தனது வறுமையை எவரிடமாவது எடுத்துச் சொன்னால், தன் மதிப்பு குறைந்துவிடும் என்று அஞ்சி தன் உண்மை நிலையை எவரிடமும் சொல்லவில்லை. யாராவது அவரது வறுமை நிலை பற்றிப் பேசினால் அவர் சினந்தார்.

இந்துலேகாவில் செய்தது போல், சாரதாவிலும் சந்துமேனன் நம்பூத்ரிகளை ஏளனம் செய்கிறார். சாரதா ஒரு முஸ்லீம் பரத்தையின் பெண் என்றுரைக்கும் கடிதம் ஒன்று வரப்பெற்றவுடன் அவர்கள் அடையும் பதட்டத்தை ஆசிரியர் நமக்குச் சித்திரித்துக் காட்டுகிறார். அக்கடிதத்தைப் படிக்கும் நம்பூத்ரியைச் சுற்றி அவர்கள் கூட்டம் போட்டனர். அவர்கள் முழுவதும் அம்மணமாக இல்லாது போனாலும் ஏறத்தாழ முக்கால் அம்மணமாக இருந்தனர். சிலர் வழிபாட்டை நிறுத்திவிட்டு, செய்தி கேட்க விரைந்தனர்; வேறு சிலர் குளியல் அறைக்குப் போகும் நிலையில் இருந்தனர்; மற்றும் சிலர் குளிப்பதற்குத் தயாராக உடல் முழுவதும் எண்ணெய் தேய்த்துக் கொண்டிருந்தனர்; வேறு சிலர் வெற்றிலை மென்று கொண்டே அங்கு வந்தனர். அவர்கள் கூச்சலிட்டுக் கொண்டும் கடிதம் படித்துக கொண்டிருந்த பெரியவரைச் சுற்றித் தத்தித் தத்தி வந்து கேள்விகள் கேட்டவாறும் நின்றனர்.

கதையில் வருபவர்களை மட்டும் விவரிப்பதோடு ஆசிரியர் நின்றுவிட வில்லை; இந்துலேகாவிலும் சாரதாவிலும் இடங்கள் பற்றியும் ஆசிரியர் விவரித்துள்ளார். இந்துலேகாவில் பூவல்லி தரவாடைப் பற்றியும்: அதனுடன் இணைந்த சொத்துக்கள் பற்றியும் சுருக்கமாக விவரித்துள்ளதுடன் பம்பாய் துறைமுகம் பற்றியும் அதன் அண்மையில் அமைந்துள்ள பகுதியைப் பற்றியும், கல்கத்தாவில்

மாதவன் நட்புக் கொண்ட சென் குடும்பத்தாரின் சொகுசான இல்லம் அமராவதி பற்றியும் பாராட்டத்தக்க வகையில் விவரித்துள்ளார். செல்வம் கொழித்த பூஞ்சோலைக்கரை எடத்தின் சொத்துக்கள் பற்றியும் திருமல்பாத்தின் சொத்துக்களும், அமைந்த இடங்கள் பற்றியும் சாரதாவில் விவரிக்கப்பட்டுள்ளன. வானளாவ உயர்ந்த கோயில்களிடையேயும் அலுவலகங்கள், இல்லங்கள் இடையேயும் வக்கீல்கள் சங்கம் ஒன்று இருந்தது. ஓட்டை உடைசலான இடம் அது. ஆனால் சந்து மேனன் குறிப்பிடத்தக்க வகையில் அதை விவரித்துள்ளதால் அதற்கு மலையாள இலக்கியத்திலேயே நிலையான ஓர் இடம் கிடைத்துள்ளது. அதில் ஒரு பகுதியின் மொழியாக்கத்தைத் தர விழைகிறேன் ''அக்கட்டிடம் பாழடைந்த நிலையில் இருந்தது. சிறிது காலத்திற்கு முன்பு அதன் கிழக்குப் பக்கச் சுவர் இடிந்து விழுந்து விட்டது. ஆயினும் பழைய செங்கற்களும் சுண்ணும்புக் காரையும் அங்கேயே கிடந்தன. சுவருக்குப் பதிலாக, காற்றையும் மழையையும் தடுப்பதற்காக தென்னை நாரினால் செய்யப்பட்ட பாய் ஒன்று தொங்கவிடப்பட்டிருந்தது. சங்கத்திற்கு வருபவர்கள், பாயைத் தூக்கிவிட்டு உள்ளே நுழைய வேண்டியிருந்தது. அந்த அறையைக் கட்டிய போது அதில் இருந்த வெளிச்சத்தைவிட இப்போது வெளிச்சம் அதிகமாக இருந்தது. பெரிய பெரிய சாளரங்கள் அமைந்து இருந்ததினால் வெளிச்சம் அதிகமாக வந்ததாக வாசகர்கள் நினைக்க வேண்டாம். கூரையைப் பழுது பார்க்க நன்கொடைகள் வரவில்லை. கூரையில் ஓட்டைகள் விழுந்தன. அந்த ஓட்டைகள் வழியாக கதிரவனின் ஒளிக்கதிர்கள் பாய்ந்தன. கதிரவனின் வெப்பம் மிக்க கதிர்கள் தங்களைத தாக்காதவண்ணம் தலையில் துண்டுகள் கட்டிக் கொண்டிருந்தனர். கூரையினூடே பாய்ந்து வந்த வெங்கதிர்கள் வெப்பத்தைக் கொடுத்த போதிலும் அவர்கள் ஆழ்ந்து படிப்பது போல் தோற்றமளித்தனர். அறையின் மையத்தில் மேஜை ஒன்று கிடந்தது. அதற்கு மூன்று கால்களே இருந்தன. அது புதுமாதிரி மேஜையல்ல. பழைய காலத்திய நான்கு கால்மேஜை. நான்காவது கால் மறைந்து விட்டது. செங்கற்கள், கட்டைகள் சிலவற்றை ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்கிவைத்து நான்காவது கால் இல்லாத குறையை நீக்கி, மேஜை கீழே சாயாத வண்ணம் முட்டுக் கொடுக்கப்பட்டருந்தது. கீழே விழுந்து கிடந்த கதவின் மேல் வக்கீல் ஒருவர் அமர்ந்திருந்தார். அடுப்புச் செங்கற்கள் எடுக்கப்பட்டு குட்டிச்சுவர் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அக் குட்டிச்சுவரின்மேல் கதவுப் பலகை வைக்கப்பட்டிருந்தது. அப்பலகையின் மேல்தான் வக்கீல்கள் அமர்ந்திருந்தனர். நாடறிந்த மற்றொரு வக்கீல் இன்னும் மதிப்பான இருக்கையின் மேல் அமர்ந்திருந்தார். ஆங்கிலத்தில் ''ஈஸிசேர்''

என்று சொல்லப்படும் சாய்நாற்காலி அது. உண்மையில் அது சாய் நாற்காலியின் ஒரு பகுதிதான்; அதுவும் மிகச் சிறிய ஒரு பகுதி. அதன் மீது அமரும் எவரும் நிம்மதியாக உட்காரமுடியாது. சாய்நாற்காலியின் நீண்ட கால்களும் அவற்றுக்கு ஆதரவாக நிற்கும் கம்புகளும் சாய்ந்து கொள்ளும் பக்கத்தில் பாதியும் மறைந்து விட்டன. பின் பக்கத்திலிருந்த பிரம்புவேலை அறவே இல்லை. இருக்கைப் பகுதியில் ஒரு சிறிதளவு பிரம்பே இருந்தது. ஆனால் அதில் ஒருவர் உட்காரக்கூட இடம் இல்லை. அந்த சாய் நாற்காலியில் நான்கு கால்கள் மட்டும் விசுவாசத்துடன் ஒட்டிக் கொண்டிருந்தன. ஆனால் அந்த சாய் நாற்காலியில் அமர்ந்திருப் பவர் அந்த நாற்காலியின் கால்களில் ஒன்றை ஏன் கவலையுடன் அடிக்கடி பார்த்துக் கொண்டிருக்கிறார்! கால்களில் ஒன்று கழன்று விட்டதா? தள்ளாடுகின்றதா? மற்றொரு வக்கீல் செய்தித்தாளை வெகுசுவையாகப் படித்துக் கொண்டிருந்தார். ஆனால் அதே சமயத்தில் ஜன்னல் கம்பியைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டி ருந்தார். ஏனெனில் அந்த நாற்காலிக்கு ஒரு கால் இல்லை. வேறு எந்த இடமும் காலியாக இல்லாததால், மற்றொரு வக்கீல் தரையில் அமர்ந்திருந்தார்.

வக்கீல்கள் ஒன்று சேரும் இடத்தில், பேச்சுக்குப் பஞ்சமா என்ன? ஒரு நாள், அவர்கள் தங்கள் காலத்திய மலையாள இலக் கியம் பற்றி விவாதிக்கின்றனர். மலையாள கவிதைகளில் கடுமை யான வடமொழிச் சொற்களைப் பயன்படுத்தி சிலர் எழுதி வந்ததை அவர்கள் கேலி செய்தனர். திறனாய்வாளர்கள் சிலர், தாங்கள் திறனாய்வு செய்ய வேண்டிய நூல்களைப் படிக்காமலே, பிறர் சொல்லும் கருத்துக்களைக் கேட்டு, திறனாய்வு எழுதுகின் றனர் என்று அந்த வழக்குரைஞர்கள் கருத்துத் தெரிவித்தனர். கதையில் சிக்கலும் குழப்பமும் அதிகமாக அதிகமாக அந்த நாவல் அதிகமாகப் பாராட்டப்படுகின்றது என்ற கருத்தை அவர்கள் எள்ளி நகையாடினர். ''கதை ஆசிரியருக்குக்கூட குழப்பம் ஏற்படும் அளவுக்குச் சிக்கல் இருக்க வேண்டும். உண்மையான நாவலின் சிறப்பு அம்சம்'' என்று அவர்கள் கிண்டல் செய்தனர். வக்கீல்கள், சந்துமேனன் காலத்திய எழுத்தாளர்களின் நடைமுறை பற்றி சந்துமேனனது கருத்துக்களை எதிரொலிப்பதையே நாம் காண லாம். கதை அமைப்பின்படி பார்த்தால், இது இந்துலேகாவின் பதினெட்டாவது அத்தியாயத்தைவிட மன நிறைவு அளிப்ப தாகவுள்ளது. இக் கருத்துப்படிப் பார்த்தால் சாரதா இந்து லேகாவை விடச் சிறந்த முறையிலும் திறனுடனும் எழுதப் பட்டுள்ளது எனச் சொல்லலாம்.

கதையின் கட்டுக் கோப்புப் பற்றியோ கதையின் அமைப்புப் பற்றியோ நாம் எதுவும் அறுதியிட்டுச் சொல்வதற்கில்லை. ஏனெனில்,

கதையின் பின்னணியை மட்டுமே சந்துமேனன் நமக்குக் கொடுத்துள்ளார். இளம் பெண் ஒருத்தி, செல்வம் கொழிக்கும் தரவாடு ஒன்றின் வாரிசாக ஏற்றுக் கொள்ளப்படவேண்டுமெனச் செய்து கொள்ளும் உரிமைக் கோரிக்கை பற்றிய கதை இது. இந்த உரிமை மெய்ப்பிக்கப்படுமா? பொய்யாக்கப்படுமா? அச்சனும் திருமல் பாதும் மேற் கொண்டு என்ன செய்வார்கள்? சங்கரன், குண்ட மேனன், வைத்தி பட்டர் ஆகியோரின் பங்கு என்னவாக இருக்கும்? சுங்கு வாரியார் சாரதாவின் சார்பாக முக்கியமான சாட்சியாகச் சாட்சியமளிக்க வருவது போல சந்துமேனன் கதையின் பிற்பகுதியில் வேறு எவரையேனும் கொண்டு வருவாரா? சாரதா பிறந்த போது அவள் தாய்க்கு மருத்துவம் பார்த்த மருத்துவரை வட இந்தியாவிலிருந்து கொண்டு வருவாரா: அல்லது ராமன் மேனன் யாராவது லட்சாதிபதியின் உருவப் படத்தை முன்பு வரைந்திருந்து, அந்தப் பணக்காரர் ராமன் குடும்பத்தினரை நன்ருகத் தெரிந்தவராக இருந்து அவரை வட இந்தியாவிலிருந்து சாட்சியாகக் கொண்டு வரலாம். கிருஷ்ண மேனன் இந்த வழக்கில் தலையான பங்கு பெற்று பின்னர் சாரதாவை மணப்பாரா? இவற்றையெல்லாம் நமது கற்பனைக்கு விட்டுவிட்டுச் சந்துமேனன் மறைந்து விட்டார். வேறு விதமாக வழக்கு முடிவதற்கும் சாத்தியக்கூறு உள்ளது. ஆத்திரம் கொண்ட இரு தரப்பினரும் கண் மூடித்தனமாக வழக்காட முனைவார்களா? அல்லது இருதரப்பினரும் நிதானமாகச் சிந்தித்து வழக்காடி பணத்தைப் பாழாக்குவதைவிட, சமாதானமாகப் போவதே மேல் என்ற முடிவுக்கு வருவார்களா? செல்வம் மிக்க தரவாடுகள் வழக்காடி எப்படி அழிந்தன என்பதை மக்களுக்கு விளக்குவது என்பது சந்துமேனன் கருத்தாக இருந்தால், வழக்கு இறுதிவரையில் நடந்து இருதரப்பினருக்கும் கடுமையான செலவு ஏற்பட்டிருக்கும். திரு. எம். பி. பால் அவர்கள் ஒரு நிகழ்ச்சி பற்றி எடுத்துச் சொன்னர்கள். அதிலிருந்து நாம் ஒன்று ஊகித்துக் கொள்ளலாம். ஒரு முறை நண்பர் ஒருவர் சந்துமேனனைப் பார்க்கச் சென்றிருந்தார். அப்பொழுது சந்துமேனன் தனியாக இருந்தார். ஆனாலும் அவர் விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருந்தார். அதற்குக் காரணம் கேட்ட நண்பரிடம் ''ஓ! கொப்புன்னி அச்சன், குறுக்கு விசாரணையின் போது அவரது மன நிலை என்னவாக இருந்திருக்கும் என்பதை எண்ணிப் பார்த்து நான் சிரித்துக் கொண்டிருந்தேன்'' என்றாராம் சந்துமேனன். எனவே, சாரதாவில் நீதி மன்றக் காட்சி ஒன்றை உருவாக்க அவர் நினைத்திருக்க வேண்டும். அதற்கான பின்னணியை அவர் தயாரித்திருக்க வேண்டும். அவரது அறிவு, திறமை, நீதிமன்றங்களில் அவருக்கிருந்த நீண்ட கால அனுபவம் ஆகியவற்றைக் கொண்டு பார்த்தால், அந்த நீதிமன்ற

விசாரணைக் காட்சி, மலையாளக் கதை உலகிலே தலை சிறந்த காட்சியாக இராவிடினும் மிகச் சிறந்த காட்சிகளில் ஒன்றுகக் கட்டாயம் அமைந்திருக்கும். ஏதுமறியாத இளம் சாரதாவின் எதிர்காலம் பற்றி, நாடறிந்த இரண்டு பகையாளிகள் உணர்ச்சி வேகத்துடன் வழக்காடி, பலரும் பரபரப்படையும் வண்ணம் அந்த வழக்கு அமைந்து, அவளது தலைவிதி முடிவு செய்யப்படும் அத்தியாயமாக அது அமைந்திருக்கலாம். கொப்புன்னி அச்சன், வைத்திபட்டர், கிருஷ்ண மேனன், சங்கரன் ஆகிய முக்கியமான பாத்திரங்களின் தலைவிதியும் இந்த அத்தியாயத்தில் நிர்ணயிக்கப் பட்டிருக்கும். இந்த அத்தியாயம் பெரும்பாலும் இப்புத்தகத்தி லேயே முக்கியமான, மிக நீளமான அத்தியாயமாக அமைந் திருக்கும். இந்துலேகாவில் மிக நீண்ட அத்தியாயங்கள், காதலர் கள் பற்றியவையாகும். உதாரணமாக மாதவனும் இந்துலேகாவும் சந்திக்கும் காட்சி; சூரி நம்பூத்ரி, பூவல்லி குடும்பத்தில் பெண் கொள்ள அலைகையில் இந்துலேகாவையும் ஏனையோரையும் சந் திக்கும் காட்சி; இந்த இரண்டு நாவல்களிடையேயும் வேறுபாடு இருப்பது நியாயமே; ஏனெனில் ஒன்று சட்டம் பற்றியும் நீதி மன்ற நடைமுறை பற்றியும் எழுதப்படுவதாகும். மற்றொன்று காதல் பற்றியும் அதன் தொடர்பான விளைவுகள் பற்றியும் குறிப் பிடப்படுவதாகும்.

# 8. இந்துலேகாவும் சாரதாவும்

இந்துலேகாவும் சாரதாவும் 19-வது நூற்றுண்டின் பிற் பகுதியில் மலபாரின் சமூக வாழ்க்கையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. அவை இரண்டும் உள்ளத்தைக் கொள்ளை கொள் ளும் நாவல்கள். இந்துலேகாவில் நமக்கு முழுக்கதையும் கிடைக் கின்றது. சாரதாவில் கதையின் தொடக்கமே கிடைக்கின்றது. நாவல்களிலே பலவகை உள்ளது. கடந்த காலத்தை நினைவூட்டும் வரலாற்று நாவல்கள்; வருங் காலத்தைப் பற்றி கற்பனை செய்யும் நாவல்கள்; கொலை, கொள்ளை போன்ற குற்ற நிகழ்வுகளைப் படம் பிடித்துக் காட்டும் மர்ம நாவல்கள்; அறிவியலை அடிப்படையாகக் கொண்டு எழுதப் பட்டுள்ள விஞ்ஞான நாவல்கள். ஆனல் இந்துலேகாவும் சாரதாவும் மேற் குறிப்பிட்ட நாவல்களிலிருந்து

வேறு பட்டவை. சமூக நாவல்கள் எனப்படும் வகையைச் சேர்ந்தவை. இந்த இரு நாவல்களும் ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்கு முன்னர், செழிப்பான நாயர் தரவாடுகளின் வாழ்க்கையைச் சித்திரிக்கின்றன. ஆணவம் பிடித்து, வேணவாறு ஆடிய காரணவர்களையும் அவர்களுக்குக் கீழ்ப் படிந்து நடந்த அனந்தரவன்களையும் முற்போக்குக் கொள்கைகளையுடைய அனந்தவரன்களையும் தரவாடைச் சேர்ந்த பெண்களையும் ஏனைய உறவினர்களையும் நாம் பார்க்கிறோம். நாயர் குடும்பங்களில் நம்பூத்ரிகள், பட்டர்கள், ஏனைய வகுப்பினர்கள் ஆகியோரது பங்கினையும் பார்த்தோம். பண விவகாரங்கள், குடும்ப அதிகாரம், திருமணம், இவை போன்ற ஏனைய விவகாரங்கள் போன்று, அக்காலத்தில் அந்த தரவாடுகளில் எழுந்த பல்வேறு பிரச்சினைகளில் சிலவற்றைப் பற்றி இந்த நாவல்கள் குறிப்பிடுகின்றன. அவற்றால் குடும்பங்களிலும் சமூகத்திலும் ஏற்பட்ட பயன்கள், விளைவுகள் ஆகியவற்றையும் வாசகர்கள் பார்க்கலாம். உண்மையான சமூக நாவல்கள் என்ற முறையில் இந்த இரு நாவல்களும் அந் நாளைய வாழ்கையின் சுவையான பல அம்சங்களை நம் கண்முன் அழகுறக் கொண்டு வந்து காட்டுகின்றன. ஒரு சில உதாரணங்களையே நாம் இங்குக் காண்பிக்க முடியும்.

தரவாடு இரண்டு அல்லது மூன்று மாடிக் கட்டிடமாக விளங்கியது. நான்கு கட்டுகள் கொண்ட கட்டிடங்கள் அவை. குடும்பத்தின் உறுப்பினர்கள், சமயலறைகள், பல்வேறு காரியங்களுக்கான புறவீடுகள் ஆகியவை இக்கட்டிடத்தில் அடங்கியிருந்தன. விருந்தினர் அறை வாசலுக்கு மேலே அமைந்திருந்தது. செழிப்பான தரவாடுகளில் உணவு இல்லங்களே இருந்தன; இவற்றில் அந்தணர்களுக்கு இலவசமாக உணவு வழங்கப்பட்டது. அதைத் தவிர ஓய்வு இல்லங்களும் இருந்தன. குடும்பத்தைச் சேர்ந்த கோயில்களும் இருந்தன. இந்துலேகா தினந்தோறும் கோயிலுக்குச் சென்றாள். நான் வணங்கும் பகவதியின் மேல் ஆணையிடுகிறேன் என்று சொல்லித்தான் பஞ்சுமேனன் சபதம் செய்கிறார். கொப்புன்னி அச்சனும் தினம்தொறும் கோயிலுக்குச் சென்று வழிபட்டார். சங்கர சாஸ்திரி பூவல்லியில் ராமாயணம் வாசித்தார். அதேபோல அறிஞர்கள் தரவாடு இல்லங்களில் சமயச் சார்பான சொற்பொழிவு ஆற்றினார்கள். வீட்டு நூலகங்களும் தரவாடுகளில் இருந்தன. இந்த நூலகங்களில், காகிதத்தில் அச்சிடப் பட்ட நூல்களும், பனை ஓலைச் சுவடிகளும் இருந்தன. இருட்டில் எடுத்துச் செல்ல தனிவகையான விளக்குகள் இருந்தன. அவற்றில் தாவர எண்ணெய் எரிபொருளாகப் பயன்படுத்தப்பட்டது. பயணம் செல்வதற்காக, சூரி நம்பூத்ரி போன்ற முக்கியமானவர்கள் ஆடம்பரப் பல்லக்குகளைப் பயன்படுத்தினர். ஏனையோர் சாதாரணப் பல்லக்

குகளைப் பயன்படுத்தினர். பூவல்லி தரவாடில் ஐந்து அல்லது ஆறு ஆடம்பரப் பல்லக்குகள் இருந்தன.

தரவாடின் பரப்பரப்பான நிகழ்ச்சி யொன்றை அதாவது இந்து லேகாவைப் பார்த்துத் திருமணம் செய்து கொள்வதற்காக சூரி நம்பூத்ரி வந்த காட்சியை சந்து மேனன் விவரிக்கிறார்—

எங்கும் விவரிக்க முடியாத பரபரப்பு. பெரிய பல்லக்கை எட்டுப் பேரும் சின்னப் பல்லக்கை ஆறுபேரும் சுமந்து வந்தனர். மாற்றுத் தோள் கொடுப்பவர்கள் பல்லக்குப் பக்கத்திலேயே ஓடி வந்தனர். எல்லோரும் ஒன்றாகப் பாடுமாறு அவர்களுக்கு உத்தரவு. பதினான்கு பேரும் ஒரே பண்ணைத் திரும்பத் திரும்பப் பாடிக் கொண்டிருந்தனர். முன்னால் அவர்களுக்குத் தலைமை தாங்கிச் சென்ற மூன்று அல்லது நான்குபேர் ஹை ஹூ! ஹை ஹூ! என்று முழங்கிக் கொண்டே சென்றனர். பிரபலமான இந்தப் பண், நம்பூத்ரியின் தனி உரிமை என்று கருதப்பட்டது. இவ்வாறு அந்தப் பல்லக்கு பகட்டாக ஆரவாரத்துடன் முற்றத் திற்கு எடுத்துச் செல்லப்பட்டது. தரவாடு வாயில் வந்தவுடன் சூரி நம்பூத்ரி தமது பல்லக்கிலிருந்து பாய்ந்து வெளி வந்தார். எனினும் பல்லக்குத் தூக்கிகள் பல்லக்கை முற்றம்வரையில் பாடிக் கொண்டே எடுத்துச் சென்றனர். இந்துலேகாவையும் கோவிந்தன் குட்டி மேனனையும் தவிர, பஞ்சுமேனனின் குடும்ப மாளிகை, தனிப்பட்ட இல்லங்கள் ஆகியவற்றில் இருந்த அனைவரும் வயது வேறுபாடின்றி வெளியே வந்து, இடம் பிடித்துக் கொண்டு, வெளியிலிருந்து வந்தவர்களைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றனர். பெண்கள், ஜன்னல்கள் வழியாகவும் சாள ரங்கள் வழியாகவும் எட்டிப் பார்த்தனர். ஆண்கள் தங்கள் நண்பகல் உணவையும் மறந்து, வந்துள்ள பெரிய மனிதரை வரவேற்க பஞ்சுமேனன் தலைமையில் அவசரம் அவரசரமாகத் தாழ்வாரங்களில் குழுமினர். பண்ணை கண்காணிப்பாளர்களும் ஊழியர்களும் முற்றம் நிறைந்து நின்றனர். சமையற்காரர்களும் ஏவலர்களும் சமையலறைச் ஜன்னல்கள் வழியாகவும் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தனர். வேலைக்காரப் பெண்கள் வாழை மரங்கள் பின்னாலும் தோட்டத்தில் உள்ள செடிகளின் பின் னாலும் நின்று கொண்டு அந்தப் பகட்டான காட்சியை ஒரு முறையாவது பார்ப்பதற்கு முயன்று கொண்டிருந்தனர்.

தங்கள் உணவை முடித்துக் கொண்டு ஓய்வில்லங்களில் இளைப் பாறிக் கொண்டிருந்த நாடோடி அந்தணர்கள் அந்த ஆரவாரத் தையும் சாதாரண மக்களை எட்டி நிற்கச் சொல்லிக் கொடுக்கப் பட்ட எச்சரிக்கை ஒலிகளையும் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தனர். தங்கள் தலைமுடியைத் தூக்கிக் கட்டிக் கொண்டே வெளியே ஓடிவந்த அவர்கள், அகப்பட்ட இடங்களில் எல்லாம், குளக்

கரைகள், படிக்கட்டுகள் ஆகிய இடங்களில் எல்லாம் கூட நின்று கொண்டு வேடிக்கை பார்த்தனர். ''என்ன இது! யார் இவர்! நாட்டிலே நில நடுக்கம் ஏற்பட்டு விட்டதா என்ன?'' என்றெல்லாம் கேட்டவாறே அவர்கள் ஆங்காங்கே குழுமி நின்றனர். செம்பழியாட், பூவல்லி ஆகிய இடங்களில் வாழ்ந்த மக்கள், பூகம்பம் ஏற்பட்டிருந்தால் கூட அவ்வளவு பரபரப்பு அடைந்திருக்க மாட்டார்கள்.

அவசரம் அவசரமாக ஏற்பாடு செய்யப்பட்ட திருமணம் ஒன்று விவரிக்கப்படுகிறது I. பஞ்சுமேனனின் அழைப்பின் மேல், நம்பூத்ரிபாத் செருசேரியும் கேசவன் நம்பூத்ரியும் தங்கள் பரிவாரங்களுடன் பூவல்லிக்கு விரைந்தனர். வழக்கமான நடைமுறைப்படி, நம்பூத்ரிபாத், வீட்டின் வாயிலில் தன் காலைக் கழுவிக் கொண்டார். அந்த வைபவத்திற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த அறையில் உயர்ந்த பட்டு விரிக்கப்பட்டிருந்த படுக்கையில் சாய்ந்து கொண்டிருந்தார். அந்த அறையின் கிழக்குப் பக்கக் கதவு மூடியிருந்தது. வீட்டுப் பெண்கள் அனைவரும் மேற்குப் பக்கக் கதவின் அருகில் வந்து நின்றனர். சாதுவான கல்யாணிக் குட்டியை அவர்கள் இழுத்துக் கொண்டு வந்து நின்றனர். பலி யாட்டைச் சுற்றி நிற்பது போல் அவளைச் சுற்றி நின்றனர். அவளைப் பிடித்து உள்ளே தள்ளினர். அவ்வாறு தள்ளிவிட்டு அவசரமாக வெளிச் சென்று அக்கதவைத் தாளிட்டனர். இவ்வாறு திருமணம் முடிந்தது. முறையான மருமக்கள் தாயம் திருமணத்தில் இது தான் வழக்கமான நடைமுறை என்று கருதப் படக்கூடாது. இந்துலேகாவின் திருமணம் பற்றி சந்துமேனன் எழுதுவதிலிருந்தும் கூட இந்த நடைமுறை பற்றி ஒன்றும் தெரிந்து கொள்ள முடியவில்லை. ''மாதவன் திரும்பிய ஏழாவது நாளில், இந்துலேகா மாதவனின் கரம் பிடித்தாள்'' என்று தான் சொல்கிறார். நாயர்களிடையே திருமணம் செய்ய மற்ற முறையில் நடக்காது போனாலும் ஏதோ தற்செயலாகத்தான் நடக்கின்றது என்ற எண்ணம் மேற் சொன்ன வர்ணனையிலிருந்து உருவாகின்றது. நாயர் திருமணங்கள் சம்பந்தம் அல்லது புடமுறிகள் என்று அழைக்கப்படுகின்ற அவர்கள் திருமணங்களில் பின்பற்றப்படும் நடைமுறை பற்றி சந்துமேனன் கொடுத்துள்ள விரிவான விளக்கவுரையைப் படிக்க வேண்டும். மலபார் திருமணம் பற்றிய ஆணைக்குழு அறிக்கையுடன் இணைக்கப்பட்ட தனது கருத்து வேறுபாட்டுக் குறிப்புரையில் அவர் இந்த நடைமுறையை விவரிக்கின்றார். மருமக்கள் தாயம் திருமணம் சாதாரணமாக, தற்செயலாக நடப்பதல்ல; தொன்று தொட்டு, காலம் காலமாக அந் நாட்டில் வழக்கில் இருந்து வரும் பழக்க வழக்கங்களினால் முறைப்படுத்தப்பட்ட பல நடைமுறைகளைக் கடைப் பிடிக்க

வேண்டியுள்ளது என்பதைத் தனது குறிப்புரையில் அவர் வலியுறுத்திச் சொல்கிறார்.

ஆண்கள், பெண்களின் அன்றாட வாழ்க்கையில் கடைப்பிடிக் கப்படும் பழக்க வழக்கங்கள், அவர்களின் குளியலறைகள், அணி கள், இன்னும் பல விவரங்களை நாம் இந்த நாவல்களிலிருந்து தெரிந்து கொள்கிறோம். பஞ்சு மேனன் தன் கழுத்தில் பொன் னுலான தொழுகை மணி மாலையை அணிந்திருந்தார்; கொப் புன்னி அச்சன் உருத்ராட்ச மாலை ஒன்றை அணிந்திருந்தார். இருவரும் இடுப்பில் தங்கக் கச்சை அணிந்திருந்தனர். மாதவன் நீண்ட குடுமி வைத்திருந்தார். வைரக் கடுக்கண் அணிந்திருந்தார். பதினெட்டு வயதான இந்துலேகா காதுகளில் தஞ்சாவூர் காப்பு களும், கழுத்து மாலைகளும் அணிந்திருந்தாள். அவற்றில் ஒன்றில் வைரக் கற்கள், பச்சைக் கற்கள் சிவப்புக் கற்கள் ஆகியவை பதிக்கப்பட்டிருந்தன. கைவிரல்களை மோதிரங்கள் அலங்கரித்துக் கொண்டிருந்தன. சாரதா பதினொன்று வயதில் காதுகளில் தங்கக் குமிழ்கள் அணிந்திருந்தாள்; மூன்று சரங்களால் ஆன முத்துக்கள் பதித்த கழுத்து மாலை, கைவிரல்களில் இரண்டு மோதிரங்கள், இடுப்பில் தங்கக் கச்சை ஆகிய அணிகலன்களை அணிந்திருந்தார். பெண் வேண்டையாடிய சூரிநம்பூத்ரி பாத்தின் உடைமைகளில் கவர்ச்சியான பொருள்கள் பல காணப்பட்டன. 1 தங்கச் சரிகை, வெள்ளி சரிகை இழைத்த விலையுயர்ந்த அங்கிகள் பன்னிரண்டு அல்லது அதற்கு மேல்; பட்டுக் கரையுள்ள துணிகள் இருபதுக்கு மேல்; பல்வேறு வகையைச் சேர்ந்த மோதிரங்கள்; உள்ளே பொன்முலாம் பூசப்பட்ட சொக்க வெள்ளியாலான அரியதோர் குவளை, வெற்றிலை வைத்துக் கொள்ள, பொன்னுலான சிறிய குழல்; வெள்ளிக் குடம், வெள்ளி விளக்குகள், பாக்கு வைத்துக் கொள்ள வெள்ளிப் பெட்டி, மாலை போன்று கழுத்தில் அணிந்து கொள்ள பொன்னுலான கடியாரமும் சங்கிலியும் தங்கத்தினுலும் வெள்ளியினுலும் பூத் தையல் வேலை செய்யப்பட்ட வெல்வெட் துணிகள், கல்லாய்கள், நெற்றியில் சந்தனம் கொண்டு சாதிக் குறியிட்டுக் கொள்ள சந்தனம் வைத்துக் கொள்ள வெள்ளிப் பாத்திரம், பன்னீர் தெளிக்க தங்கத்தினுலான பன்னிர் செம்பு, அத்தர் புட்டிகள், ஏனைய பொருள்கள் இவையனைத்தும் ஒழுங் கின்றி மேசை மீது குவியலாகக் கிடந்தன. உலகியலான ஆசைகள் பல அவருக்கு இருந்தன; மற்றவர் போல அவ்ருக்கும் மூட நம்பிக்கைகள் இருந்தன. பிராதில் சனிக்கிழமை கையெழுத் திட்டதனுல்தான் தான் வழக்கு ஒன்றில் தோற்றதாக அவர் நம்பினுர். விளக்கு வெளிச்சத்தில் சவரம் செய்து கொண்ட பிறகு குளிக்காமல் எக்காரியத்தையும் தொடங்கக் கூடாது என்பன போன்ற நம்பிக்கைகளும் அவருக்கு உண்டு. தெய்வத்திற்கும்

அந்தணர்களுக்கும் காணிக்கைகள் செலுத்தினுல், தாம் செய்த சபதத்தினின்றும் தனக்கு மன்னிப்புக் கிடைத்து விடுமென்று பஞ்சு மேனன் நம்பினுர். சோதிடர்கள் என்று தங்களைக் கூறி கொண்டவர்களுக்கு ஏழைகளும் பணககாரர்களும் வாடிக்கைக் காரர்களாக இருந்தனர்.

ஒரு சில எடுத்துக காட்டுகளே மேலே கூறப்பட்டுள்ளன. விதவை மணம், பெரியவர்கள், சிறியவர்களிடையே கடைப் பிடிக்கப்பட வேண்டிய மரியாதைகள, பல்வேறு சாதியினரி டையே காண்பிக்கப்பட வேண்டிய மரியாதைகள், கதகளி, வெற்றிலைப் பழக்கம், கோயில்கள், ஆகியவை பற்றியும் ஒவ் வொரு பக்கத்திலும சொல்லப்பட்டுள்ளது. பட்டியலை நீட்டிக் கொணடே போகலாம். பத்தொன்பதாவது நூற்ருண்டில் மலபார் சமூக வாழ்க்கை பற்றிய பல காட்சிகளை நமக்கு அளிக்கும் இணைப்பேடுகளாக இந்த நாவல்கள் விளங்குகின்றன.

இந்துலேகாவை மொழிபெயர்தத டூமெர்க்குக்கு எழுதிய கடிதத் தில், தாம் இந்த நூல்களை எழுதியதன் காரணங்களைச் சந்து மேனன் விவரித்துள்ளார். செழிப்பான பாரம்பரியமான நாயர் தரவாடுகளின் ஒருமைப்பாட்டைக் குலைத்த சில காரணங்களையும் அது விளக்குகிறது. எடுத்துக் காட்டாக, காரணவர்களின் ஆணவப் போக்கு, அவர்களது பத்தாம பசலித்தனம், வேண்டுமென்பவர்களுக்குச் சலுகைகள வழங்கும் மனப்பான்மை, உல்லாச வாழ்க்கை விரும்பிய, பொறுப்பற்ற நம்பூத்ரிகளுடன் திருமணத் தொடர்பு கொண்டது, தவிர்க்கக்கூடிய நிலையிலும் வழக்காடி வீணுகச் செல்வத்தை விரயம் செய்தது போன்ற சிலவற்றை எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். எப்பொழுதும் கூச்சலிட்டுக் கொண்டிருந்த, ஆணவம் படைத்த பஞ்சுமேனன், கோப்புன்னி அச்சன் போன்ற காரணவர்கள், வைத்தி பட்டர் போன்ற போக்கிரிகள், குணடன் மேனன் போன்ற வம்பர்கள, மாதவன், கிருஷ்ணமேனன், இந்துலேகா போன்ற ஆங்கில அறிவு படைத்தவர்கள், கல்யாணிக் குட்டி போன்ற ஆங்கில அறிவு இல்லாதவர்கள் ஆகிய பல்வேறு பாத்திரங்களைத் தமது நோக் கத்தை விளக்குவதற்காகச் சந்துமேனன் படைத்துள்ளார்.

பஞ்சுமேனன் தான்தோன்றித் தனமாக நடந்து கொண்டதனுல் மாதவனும் இந்துலேகாவும் ஆத்திரமடைந்தனர் என்று இந்து லேகாவில் நமக்கு விளக்கப்படுகிறது. நம்பூத்ரிகளுடன் சம்பந்தம் செய்து கொண்டதனுல், குடும்பத்தில் சச்சரவு ஏற்பட்டது, அவ மானம் ஏற்பட்டது என்பதை நாம் புரிந்து கொள்கிருேம். காதலும் திருமணமும் இந்துலேகாவில் முக்கியமான பங்கு வகிக் கின்றன. சர்ச்சைக்குரிய 18-வது அத்தியாயம் நீங்கலாக, இப் புத்தகத்தில் மிக நீண்ட அத்தியாயங்கள் மாதவனும் இந்து

லேகாவும் சந்திக்கும் காட்சியையும் சூரி நம்பூத்ரி தனது திருமண இயக்கத்தின் போது. இந்துலேகாவையும் ஏனைய பெண்களையும் சந்திக்கும் காட்சியையும் விவரிக்கும் அத்தியாயங்களே. இந்த நாவலில் வரும் பாத்திரங்களில் பாதிப்பேர் பெண்கள். இந்து லேகாவைத் தவிர பார்வதி அம்மா, லட்சுமி குட்டி அம்மா, கும்பினி அம்மா, கல்யாணிக் குட்டி, ஏனைய பணிப் பெண்கள் ஆகியோர். காதல் நோயினால் வருந்திய உள்ளங்கள் துன்புற்ற நிலையை நாம் பார்க்கிறோம். காதல் கதைகளில் இத்தகைய காட்சிகள் இயல்பே.

சாரதாவின் கதை அமைப்பே வேறு. இக் கதையில் வழக் குரைஞர்களின் மூளைக்குத்தான் அதிகச் சிறப்பிடம் அளிக்கப் பட்டுள்ளது. சாரதாவில் வரும் பாத்திரங்கள்—அவர்கள் நல்ல வர்களாயினும்—கெட்டவர்களாயினும்—இந்து லோகாவில் வருபவர்களைக் காட்டிலும் முதிர்ந்த அறிவுடையவர்கள், ஆழ்ந்த சிந்தனை உடையவர்கள். கோப்புன்னி அச்சன், பஞ்சுமேனனை விட ஆணவம் பிடித்தவர்; கடும் சொற்களை வசைமாரி பொழி பவர். பிறரிடம் பாசம் இருந்தாலும் இராவிட்டாலும், பஞ்சு மேனன் இந்துலேகாவிடம் உண்மையான பாசமும் கருணையும் காட்டினார். சாரதாவில் கோப்புன்னி அச்சன் எவரிடமும் பரி வோ பாசமோ காட்டியதாக அவர் புகழ்பாடி அண்டிப் பிழைத் தவர்கள் தவிர எவரும் இதுவரை சொல்லவில்லை. அவர் கொடூர உள்ளம் படைத்தவர். கெட்ட புத்தியுடையவர்; இந்துலேகாவில் வரும் சீனு பட்டர் சாரதாவில் வரும் வைத்தி பட்டரின் நிகரல்ல. சீனு பட்டர் ஓர் அறிவிலி; பூவல்லி தரவாடைச் சேர்ந்த ஒரு பெண்ணின் கணவன் என்ற நிலையாவது அவருக்கு உள்ளது. ஆனால் வைத்தி பட்டரோ பூஞ்சோலைக் கரை தரவாடைச் சேர்ந்த பெண் ஒருத்தியின் நகைகளைப் பறிக்கத் திட்டமிட்டவர். சீனு பட்டர் பார்ப்பதற்காவது மனிதன் போன்று தோற்ற மளித்தார். ஆனால் வைத்தி பட்டரோ எடுப்பான பற்களுடன் நாகப்பாம்பின் கண்களுடன் தீமையையே உருவெடுத்தாற் போல தோற்றமளிக்கும் பேய்; கொடியவன்.

மாதவனது தோற்றம் பற்றியும் ஆற்றல்கள் பற்றியும் இந்து லேகாவின் ஆங்கில மொழியாக்கத்தில இரண்டு பக்கங்கள் எழுது கிறார் சந்துமேனன்; சாரதாவில் வரும் கிருஷ்ணமேனனது தோற் றம், பண்பியல்புகள் உயரிய தகுதிகள் பற்றி நான்கரை பக்கங்கள் எழுதுகிறார். காதல் நோய் பிடித்த இளைஞராக மாதவன் சித்திரிக் கப்படுகிறார்; கிருஷ்ணமேனன் காதலில் விழுந்து விடவில்லை. மாதவனிடம் நமக்குப் பரிவு ஏற்படுகிறது. கிருஷ்ணமேனன் நமது பாராட்டைப் பெறுகிறார்.

நம்பூத்ரி பாத்திரங்களைப் பொறுத்தவரையில், இந்துலேகாவில் வரும் செருசேரி அறிவுடையவர்; அமைதியானவர்; சூரி நம்பூத்திரிபாதுக்கு ஏதோ கொஞ்சம் பண்பு உள்ளது. அவர் கதகளியை ரசிக்கிறார் அல்லவா? அவர் கோமாளிபோல நடந்து கொள்கிறார். பெண் ஆசை பிடித்தவர்தாம். ஆயினும் முழுவதும் ஆடையணிந்து—அது பொன்னுடையாக விருப்பினும்—தோற்றமளிக்கிறார். ஆனால் சாரதாவில் வரும் நம்பூத்ரிகளைப் பாருங்கள். ஒரு சிலர் அம்மணமாக வருகிறார்கள். சிலர் குளிக்காமல் வருகின்றனர். ஒரு பெண்ணைப் பற்றி வந்துள்ள கடிதம் பற்றி ஏதோ பிதற்றிக் கொண்டு, தத்தித் தத்தி, சுற்றிச் சுற்றி வருகிறார்கள். காட்டுமிராண்டிகள் போலத் தோற்றமளிக்கின்றனர்.

இந்து லேகா மிகச் சிறந்த அழகுடையவள்; அவள் எழில் எல்லையைத் தொட்டு விட்டது. சாரதா தேவதை போன்ற அழகுடையவள். ஆனால் அவள் ஒரு சிறுமிதான். அவள் அழகு அரும்பி, மலர்ந்து விரியும் பொழுது அவளது எழில் பன்மடங்கு பெருக வாய்ப்புள்ளது. அப்பொழுது அவள் வெறும் தேவதையாக இராமல் இருக்கலாம. ஆனால் அவள் எழில் தெய்வீகக்களை பெற்றுவிடும். இதுவரையில் கதையில் அவள் ஒருத்திதான் பெண். தனியாக நிற்கின்றாள். இது உண்மையில் வருந்தத்தக்கது. வேறு இரண்டு மூன்று பெண்களின் பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன. ஆனால் அவர்கள் இவ்வுலகிலிருந்து மறைந்து விட்டனர் என்று குறிப்பிடத்தான் அவர்கள் பெயர்கள் வருகின்றன. கதையின் முதல் இரண்டு பக்கங்களில் சாரதாவின் தாய் கல்யாணி அம்மாவின் குரல் நம் காதில் ஒலிக்கின்றது என்பது உண்மைதான். ஆனால் சாவின் நிழல் அவள் மீது சாய்ந்து விட்டபடியால் அவள் குரல் மென்மையாகக் கேட்கிறது. சில வார்த்தைகள் சொல்லிய பிறகு அது மௌனமாகி விடுகிறது. ஆண்களின் ஆரவாரக் குரல்தான் சாரதாவில் அதிகம் கேட்கிறது.

சாரதாவில் ஆண்கள், உரிமை மனுக்கள், வழக்குகள், நீதிமன்றங்கள், அவை சார்ந்த விவகாரங்கள் ஆகியவற்றைப் பற்றியே அக்கறை கொண்டிருக்கின்றனர். சூழ்நிலையில் வாட்டம் கலந்திருக்கின்றது. சங்கரனுக்குக் கொடுத்து அவனைக் கொல்வதற்கான நஞ்சைத் தயாரிப்பதற்காக முரடன் கருப்பனுடன் வைத்தி பட்டர் சதித் திட்டம் தீட்டும் போது கடுமையான சூழ்நிலை நிலவுகிறது. ஆனால் இந்துலேகாவிலோ சதித் திட்டம் நகைச்சுவை பொருந்தியதாகவுள்ளது. இந்துலேகாவுக்குப் பதில் கல்யாணிக்குட்டி மணவறைக்கு அனுப்பப்படுகின்றாள். சாரதாவில் பெரும்பாலான பக்கங்களில், சட்டப்படிக்கான உரிமைகள், சட்டப் பிரச்சினைகள், சட்டப் புத்தகங்களிலிருந்து மேற்கோள்கள், வழக்குகள் பற்றிய கடிதப் போக்குவரத்து, நடவடிக்கைகள்

பற்றிய பேச்சுக்களே நிறைந்துள்ளன. இந்துலேகாவில் சட்ட நடவடிக்கைகள் பற்றி ஒரே ஒரு முறை தான் சொல்லப் படுகிறது. தஸ்தாவேஜு ஒன்றைப் பதிவு செய்வது பற்றி, சூரி நம்பூத்ரியும் அவரது காரியஸ்தரும் விவாதிக்கும் போது, சட்டத் தொடர்பான நடவடிக்கைப் பேச்சு அடிபடுகிறது. இதைத் தவிர இந்துலேகாவில் நாட்டுப் புற வாழ்க்கையே சித்திரிக்கப்படுகிறது. இந்துலேகாவில் பரிவும் பாசமுமே தலை மேலோங்குகின்றன. சாரதாவில் அச்சமும் பகையுமே ஆட்டிப் படைக்கின்றன.

இடங்கள் பற்றியும் நபர்கள் பற்றியும் விவரிப்பதில் சந்து மேனனுக்குள்ள திறமை பற்றி நாம் இங்குக் குறிப்பிட வேண்டும். பெரிய இடமாயினும் சிறிய இடமாயினும் மேன்மையான நப ராயினும் தாழ்மையான நபராயினும் அவர் சீராகவும் செப்பமாக வும் விவரிக்கின்றார். தமது படைப்பினால் பாராட்டுதலை அல்லது நகைப்பை உருவாக்குகிறார். உயரிய பொருளாயினும் நகைப் பிற்குரிய பொருளாயினும் ஒரே எளிமையுடன் எழுதுகின்றார். எடுத்துக் காட்டாக, சூரி நம்பூத்ரி பற்றியும் விவரிக்கிறார். சென் குடும்பத்தாரின் இல்லம் பற்றியும் விவரிக்கிறார். வக்கீல்கள் சங்கம் பற்றியும் விவரிக்கிறார்.

இந்த இரண்டு நாவல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால், சாரதா, முடிவுறாது நின்று விட்டாலும், இந்துலேகாவை விட முதிர்ச்சி உடையதாகத் தோன்றுகிறது. சாரதாவில் வரும் நபர்கள், நல்ல வராயினும் அல்லவராயினும் இந்துலேகாவை விடப் பெரிய அள வில் சித்திரிக்கப்படுகின்றனர். சாரதாவில் வரும் கயவர்கள், மிக வும் கெட்டவர்கள். நல்லவர்கள் மிகவும் நல்லவர்கள். சாரதாவில் வரும் சில இடங்களும் இந்துலேகாவில் வரும் இடங்களை விட மேன்மையாக உள்ளன. இந்துலேகாவில் வரும் பூவல்லி தரவாடுக்கு நெல்வயல்களிலிருந்து இருபத்து எட்டாயிரம் பறை கள் நெல்லும் தோட்டங்களிலிருந்து பத்தாயிரம் ரூபாய் வரு வாயும் கிடைத்தது. சாரதாவில் வரும் பூஞ்சோலைக்கரை தர வாடில் நெல் வயல்களிலிருந்து ஒரு லட்சம் பறை நெல்லும் தோட்டத்திலிருந்து ஐம்பதாயிரம் ரூபாய் வருவாயும் கிடைத்தது. பூஞ்சோலைக்கரை எடத்தைச் சேர்ந்த கோயில், சத்திரங்கள், காசாலைகள் பெரியவை. குளம் மிகப் பெரியது. ஒரு கரையி லிருந்து பார்த்தால், மற்றொரு கரையில் உள்ளவர்களை அடை யாளம் தெரிந்து கொள்ள முடியாது. பூஞ்சோலைக்கரை தரவாடில் அந்தணர்களுக்கு அன்னமிடுதலைப் பொறுத்தவரையில், வைத்தி பட்டர், ராமன் மேனனுக்குச் சொல்கிறார்:— ''ஐயா! நான்கு உணவறைகளிலும் அந்தணர்களுக்கு இலவசமாக உணவு அளிக் கின்றனர்''. பூவல்லி தரவாடில் இரண்டு உணவறைகளே இருந்தன. அந்த இரண்டு அறைகளில்தான் அந்தணர்களுக்கு இலவசமாக

உணவு வழங்கப்பட்டது. தரவாடு இல்லம் தனிப்பட்ட கிராமப் புறப் பகுதிகளில் அமைந்திருந்தது. பூஞ்சோலைக்கரை எடம், சிறந்து அமைந்த இடத்தில் கட்டப்பட்ட பெரிய கவர்ச்சிகரமான இடம்.

சந்துமேனன் இந்துலேகாவை விட, சாராதாவில் அதிக மாகவும் விரிவாகவும் சிந்தித்தார். சாரதாவுக்காக பெரிய இடங் களையும் ஆற்றல்மிக்க வலிமையான பாத்திரங்களையும் உருவாக் கினார். இந்துலேகா முழுமையான நாவல்; நல்ல கதை; சாரதா முற்றுப் பெறாத கதை; ஆனால் இந்துலேகாவை விடச் சிறந்த கதையாக விளங்கி யிருக்கவேண்டிய கதையாகும்.

# 9. முடிவுரை

முதல் அத்தியாயத்திலிருந்து இதுவரை நாம் படித்ததை நினைவு கூர்ந்தால், இந்த நூலின் ஆய்வு முழுமை பெறும். மலையாள இலக்கியத்தில் சந்துமேனன் புரட்சியை உருவாக்கினார் என்று சொல்லி நாம் இந்நூலைத் தொடங்கினோம். அப்பொழுதிருந்த நடைமுறையின்றும் பிறழ்ந்து, எளிய மலையாள மொழியில் மல பாரின் சாதாரண மக்களின் வாழ்க்கை பற்றி மிகப் பிரபலமான நாவல் ஒன்றை எப்படி எழுதுவது என்று வழிகாட்டினார். அவர் காலத்திற்கு முந்திய மலையாள நாவல்கள், அவர் காலத்திய மலையாள நாவல்கள் ஆகியவற்றின் கருப்பொருள், பாத்திரங்கள், மொழி நடை ஆகியவற்றிலிருந்து இவரது நாவல் முழுவதும் வேறுபட்டிருந்தது. இவரது இந்துலேகாவை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த ஆங்கிலேயர் டூமெர்க் 1890-ம் ஆண்டு எழுதிய தமது முன்னுரையில் சந்துமேனனைப் பாராட்டி எழுதியுள்ளார். ''பிறர் கருத்துக்களை எடுத்துக் கையாளுவதையே பழக்கமாகக் கொண்டு காலம் காலமாக வழக்கிலிருந்து வந்த நடைமுறை யினின்றும் பிறழ்ந்து புதிய முறை ஒன்றை உருவாக்கியுள்ளார். விழித்தெழுந்துள்ள மலபார், அவரது நூலிலே மிளிர்கின்றது. இந்துலேகாவில் கையாளப்பட்டுள்ள மலையாளம் இன்று அந் நாட்டில் தவழ்ந்து விளையாடும் மொழியாகும். மலையாள மொழி யின் மறுமலர்ச்சிக்கு இந்நூல் வழிவகுத்தால், மலையாள மொழி மறுமலர்ச்சி பெற வேண்டும் என்று எண்ணும் அனைவரது பாராட் டுக்கும் சந்துமேனன் உரியவராவார்.

அவரது காலத்தில், மலையாள இலக்கியத்தில் கவிதையே சிறப்பிடம் பெற்றிருந்தது. கவிதை எழுதத் தெரிந்தவர்களுக்குத்தான், மலையாள இலக்கிய உலகில் மதிப்பு மிகுந்திருந்தது. கவிதைகளை நன்கறிந்தவர்கள்தாம் நயமும் பண்பும் நயத்தக்க நாகரிகமும் உடையவர்கள் எனக் கருதப்பட்டனர். இப்படிச் சொல்வதனால், உரை நடையே எழுதப்படவில்லை என்று பொருளல்ல. உரை நடை இலக்கியம் மதிப்புமிக்க இலக்கியமாகக் கருதப்படவில்லை. மேலும் அக்காலத்திய மலையாள உரைநடையிலும் கவிதை நடையிலும் வடமொழிக் கலப்பு மிகுந்து காணப்பட்டது. இப் பழக்கத்தைச் சந்துமேனன் உடைத் தெறிந்தார். அவர் உரைநடையில் எழுதியதுடன் நிற்கவில்லை; எளிய மலையாள மொழியைப் பயன்படுத்தினார்; நல்ல படித்த, பண்பாடுள்ள குடும்பங்களில் சாதாரணமாகப் பயன்படுத்தப்பட்ட வடமொழிச் சொற்களை மட்டும் கையாண்டார். அப்படியிருந்தும் கவிஞர் பலருக்கு, மலையாள இலக்கிய உலகில் கிட்டாத பெயரும் புகழும் இடமும் இவருக்குக் கிடைத்தன.

மக்கள் அறிவியல் நூல்களையே விரும்பிப் படிக்கின்றனர் என்று இவரது நண்பர்களில் சிலர், இவர் இந்துலேகாவை எழுதிக்கொண்டிருக்கையில் இவரிடம் கூறினர். பேய்க் கதைகள்தான் மக்களிடையே பிரபலமாகவுள்ளன என்று மற்றும் சிலர் கூறினர், இத்தகைய பேச்சுக்களினாலும் கருத்துக்களினாலும் இவர் மனம் தளரவில்லை. அவர்களின் கருத்துக்களுக்குச் செவிமடுக்காது, அவர் அக்காலத்தில் மலபாரில் நிலவி வந்த சமுதாய வாழ்க்கை பற்றியும் குடும்ப நிலை பற்றியும் கதை ஒன்றைப் புனைந்தார். அவரது நூலை எவரும் எள்ளி நகையாடவில்லை; வேண்டாம் என்று மறுத்துத் தள்ளிவிடவில்லை. மாறாக, எல்லோராலும் விரும்பப்பட்டது; இந்நாள் வரையில் மக்களிடையே செல்வாக்கோடு விளங்கி வருகிறது.

இவருக்கு முந்திய நாவலாசிரியர் எவரும் துணிந்து மேற்கொள்ளாத நடை முறையினைக் கையாண்டு சந்துமேனன் புகழ் எய்தினார். நாயர் தரவாடுகளில் நிலவிவந்த அன்றாட வாழ்க்கையைச் சித்திரித்தும் அத்தரவாடுகளில் அன்றாடம் சாதாரணமாகப் பயன்படுத்தப்பட்ட மொழி நடையைக் கையாண்டும் எந்நூலாசிரியரும் இது வரையிம் நாவல் எழுதத் துணிந்ததில்லை. சுருங்கச் சொல்லின் மலையாள நாவல் என்று உண்மையில் சொல்லப்படக்கூடிய நாவலை இதுவரை எவரும் எழுதவில்லை. இத்தகைய சூழ்நிலையில்தான் சந்துமேனனது நாவல்கள் வெளிவந்தன. இந்நாவல் பாத்திரங்களில் பெரும்பாலோர் மலபாரைச் சேர்ந்தவர்கள். இந் நாவல்களில் கையாளப்பட்டுள்ள மொழி மலையாளிக் குடும்பங்களில் சாதாரணமாகக் கையாளப்படும் மொழியாகும்.

தமது நூல் வெற்றி நடை போடுமா என்ற ஐயம் அவருக்கு இருந்தது. இந்த ஐயப்பாடு அவரது இந்துலேகாவின் முதல் பதிப்பின் முன்னுரையில் கேள்விக் குறியாக எழுந்தது. ஆனால் தனது துணிவையே துணையாகக் கொண்டு அவர் எழுதினார். பேய்கள் பற்றியோ பெருங்குடி மக்களைப் பற்றியோ அரசர்களைப் பற்றியோ எழுதாமல் பிரபலமான நாவல்களை எழுத முடியும் என்று தனது தனித் திறமையால் அவர் மெய்ப்பித்தார். சாதாரண வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள சாதாரண மனிதர்கள் (அவர்கள் நேர்மையாகவோ, நட்பாளராகவோ இருக்க வேண்டுமென்பதில்லை) நல்ல கதையொன்றின் கருப்பொருளாக அமைய முடியும் என்பதையும் சாதாரண நிகழ்ச்சிகளை வைத்துக் கொண்டே தலை சிறந்த கதை ஒன்றைப் புனையமுடியும் என்பதையும் அவர் செய்து காண்பித்தார். கதையைச் சொல்லும் முறை, மனதில் பதியும் படியாக இருக்க வேண்டும் என்பது அவரது திண்ணமான எண்ணம். ''நடையும் கதையின் அமைப்புமே அழகாக அமைய வேண்டும். அவை இரண்டும் தான் முக்கியமாகக் கருத்தில் கொள்ளப்பட வேண்டியவையாகும்'' என்று அவர் தன் முன்னுரையில் எழுதினார். ''வாழ்க்கையில், உண்மையில் நிகழும் நிகழ்ச்சிகளைக் கொண்ட கதைகள் அழகாகவும் சுவையாகவும் நயமாகவும் எழுதப்படுமாயின், வாழ்க்கையில் நடக்க முடியாத நடைமுறைக்கு ஒவ்வாத கதைகளும் மனித சக்திக்கு அப்பாற்பட்ட சக்திகள் பற்றிய கதைகளும் நாளடைவில் மறைந்து விடும். பழையன கழிதலும் புதியன புகுதலும் இயற்கையின் நியதி அல்லவா?'' என்று மீண்டும் வலியுறுத்தினார். இத்தகைய இலக்கியத்தின்பால் மலையாளிகளுக்கு ஆர்வம் ஏற்பட வேண்டும் என்பதற்காகவே அவர் இந்துலேகாவை எழுதினார். சந்துமேனனது கருத்துக்கள் சரியானவை என்பதையும் இத்தகைய கதையை வாசகர்கள் விரும்பிச் சுவைப்பர் என்பதையும் இந்துலேகா வெற்றிநடை போட்டதிலிருந்து தெரிந்து கொள்ளலாம்.

நம்பூத்ரிகளின் குறைபாடுகளையும் நாயர் குடும்பங்கள் அவர்களுடன் திருமணத் தொடர்பு கொண்டதனால் ஏற்பட்ட பாதகமான விளைவுகளையும் அவரது நாவல்கள் வெளிப்படுத்தின. பிடிவாதமும் ஆணவப் போக்கும் வழக்காடுவதில் விருப்பமும் உடைய காரணவர்கள் மருமக்கள் தாயம் தரவாடுகளின் அமைப்பும் உறுதியான நிலையும் குலைவதற்குக் காரணமாக இருந்தனர் என்பதையும் சந்துமேனன் தனது நாவல்களினால் தெளிவு படுத்தினார். சமுதாயத்தில் சில மாற்றங்களை உருவாக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் எழுதிய இந்த ஆசிரியரை, தாக்கரே, டிக்கன்ஸ், டால்ஸ்டாய் போன்ற புகழ்மிக்க இலட்சிய எழுத்தாளர்களுடன் ஒப்பிடலாம், ஆனால், எழுதுவதையே தமது தொழிலாகச் சந்து

மேனன் கொண்டிருக்கவில்லை என்பதையும் நாம் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். அவர் ஒரு நீதிபதி; வழக்குகளை விசாரிப்பதும் தீர்ப்புக் கூறுவதுமே அவரது தொழில். இலக்கியப் படைப்பு களுக்கும் அவருக்கும் சிறிதுகூட தொடர்பு இருந்ததில்லை. நீதி மன்ற அலுவலே அவருக்கு முழுநேரப் பணியாக இருந்தது. தமது அலுவலை முடித்த பின்னர், ஓய்வு நேரம் கிடைத்தால்தான் நாவல் எழுதுவதில் தமது கருத்தைச் செலவிட முடியும். டால்ஸ்டாய் போன்ற எழுத்தாளர்கள் கதைகள் எழுதுவதையே தமது தொழிலாகக் கொண்டிருந்தனர்: முழு நேரத்தையும் தங் களின் கருத்துக்களுக்கு ஓர் உருவம் கொடுப்பதற்கே ஒதுக்கினர். அவர்கள் உலகம் போற்றும் எழுத்தாளர்கள். எனினும் சந்து மேனனுக்கும் அவருக்குரிய இடத்தை நாம் அளிக்க வேண்டும்.

ஒரு நாவல் எத்தகைய நாவல் என்பதற்கு ஒரு சிறிய சோதனை, அது மக்களால் விரும்பப்படுகிறதா? மக்களிடையே பிரபலமாக வுள்ளதா? என்பதுதான். அது சரித்திர நாவலாயினும் சமூக நாவலாயினும், பகட்டான வாழ்க்கை பற்றியதாயினும் அவல வாழ்க்கை பற்றியதாயினும் நகைச் சுவையாக இருப்பினும் ஆழ்ந்த சிந்தனைகளைக் கிளறுவதாக இருப்பினும் அதற்கு நோக்கம் இருப்பினும் இராவிடினும் அது படிப்பவர்களின் கவனத்தை ஈர்க்கவில்லை என்றால், அலமாரிகளில் தூசிபடிந்து காணப்பட் டால், அது நல்ல நாவலல்ல. அது ஒரு நவீன நிரவல். இந்து லேகாவைப் பொறுத்தவரையில் 1956-ம் ஆண்டுக்குள் பல பதிப் புகள் வெளிவந்தன. சாரதா முற்றுப் பெறாவிடினும், 1958-ம் ஆண்டுக்குள் சாரதாவின் பன்னிரண்டு பதிப்புக்கள் வெளிவந்தன. இப்புள்ளி விவரங்கள் இந்த நாவல்களின் வெற்றியைக் குறிக் கின்றன; நாவல் ஆசிரியர் என்ற முறையில் சந்துமேனனது திறமையைக் குறிக்கின்றன. சிக்கல் நிறைந்த கதை என்பதனாலோ அரசவையின் பகட்டான காட்சிகளை விவரிப்பதனாலோ இந்த வெற்றி கிட்டவில்லை என்பதை நினைக்கும்போது அவரது திறமை மேற்கொண்டும் சுடர் விட்டு ஒளிர்கின்றது. அரசனின் ஆணைகள் நம் செவிகளில் விழவில்லை; அணிவகுத்துச் செல்லும் படையினர் எழுப்பும் ஒலி நம் காதுகளுக்கு எட்டவில்லை; மந்திரவாதிகள் நம் கண்களில் படவில்லை; பேய்கள் காற்றிலே மிதந்து வரவில்லை; ரத்தம் சிந்துவதையோ படைக்கலங்கள் மோதுவதையோ நாம் பார்க்கவில்லை. இவை எதுவும் இந்துலேகாவில் இல்லை. ஒரு சிறு கைகலப்பு அல்லது பலப் பரீட்சை கூட இந்துலேகாவில் இல்லை. ஆபத்திலிருந்து தப்பிச் செல்லும் பரபரப்பு இந்த நாவலில் காணப் படவில்லை. இரண்டே இரண்டு நபர்கள்தான் விரைவாக ஓட்டம் பிடிக்கின்றனர். சீனு பட்டரும் மகன் கோபாலனும் பஞ்சுமேனனின் கைத்தடிக்குத் தப்பி ஓடுகையில்தான் இக்காட்சி வருகிறது.

சாதாரண மக்கள் பற்றிய கதை சிறப்பான திறமையுடன் விவரிக்கப்படுவதே இக்கதையின் வெற்றிக்கு ஒரு காரணம். சாதாரண மக்கள் நடந்து கொள்ளும் முறையை எளிமையாக, சிறப்பாக, திறமையாக விவரித்ததனுல்தான் இந்துலேகா இலக்கிய வரிசைகளில் இடம் பெறுகிறது. இந்துலேகாவில் வரும் சில காட்சிகள் நம் உள்ளங்களில் பசுமையாக நின்றுவிடுகின்றன. பஞ்சுமேனன், சூரி நம்பூத்ரி, மாதவன், இந்துலேகா ஆகியோர் வரும் காட்சிகள் எப்பொழுதும் நம் நினைவில் பசுமரத்தாணிபோல் பதிந்துவிடுகின்றன. அதே போன்று, சாரதாவில் வைத்திப்பட்டரும் சாத்து பணிக்கரும் வரும் காட்சிகளும் வக்கீல்கள் சங்கம் பற்றிய விவரமும் நாம் எளிதில் மறக்க முடியாதவை. சாரதாவின் உரிமை மனு நீதிமன்றத்தில் விசாரிக்கப்படும் காட்சியைச் சந்துமேனன் எழுதி முடித்திருந்தால், அந்தக் காட்சி, மலேயாள இலக்கியத்திலேயே தன்னிகரற்ற காட்சியாக விளங்கியிருக்கும். இது நமது யூகம்தான். ஆனுல், சந்துமேனனது திறமை நமக்கு முன்னரே தெரிந்ததே. எனவே நமது யூகம் சரியானதே என்று தோன்றுகிறது. இவரது கதைகளில் வருபவர்களில் ஒரு சிலர் மிகவும் சிறந்த முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளனர். அவர்கள் கதையினுள்ளே மட்டும் வாழவில்லே. கதைக்குப் புறம்பாகவும் வாழ்கின்றனர். அவர்கள் தனிப்பட்ட, சுயேச்சையான மனிதர்களாகிவிட்டனர். இத்தகைய கதைப் பாத்திரங்களே உருவாக்குவதில் ஒரு சில நாவலாசிரியர்களும் நாடக ஆசிரியர்களுமே வெற்றி கண்டுள்ளனர்.

குறிப்பிடத் தக்க வகையில் குணப் பண்பியல்கள் சித்திரிக்கப்பட்டுள்ளது மட்டும் இந்த நாவலின் வெற்றிக்குக் காரணம் அல்ல. இந்துலேகா வெளி வந்து எண்பத்து இரண்டு ஆண்டுகள் ஆகியும், குன்றுத அதன் நகைச்சுவையே அதனேத் தலேமுறை தலேமுறையாக விரும்பிப்படித்துச் சுவைப்பதற்குக் காரணமாக உள்ளது. எண்பத்து இரண்டு வயதாகியும் இந்துலேகா தன் கவர்ச்சி குன்றுது விளங்குகின்றுள். வயது அவளே வாடச் செய்யவில்லே. அவளுடன் எப்பொழுது பழகினுலும் அவளது நகைச்சுவை குன்றுது. சமூக நாவல்களில் பெரும் பாலானவற்றில் நகைச்சுவை நிகழ்ச்சிகள் உள்ளன. சூரி நம்பூத்ரியின் உடல் தோற்றம், அமைப்பு, பேச்சு, பிறருடன் பழகுகையில் அவரது செய்கைகள் எல்லாமே தனிச் சிறப்பான கோமாளித்தனமாக உள்ளன. அவர் வரும்போதெல்லாம் நமக்கு நகைப்புண்டாகிறது; அதேபோல் பஞ்சுமேனனேப் பார்க்கும் போதும் நமக்குச் சிரிப்புண்டாகிறது. இவர்கள், புத்தகத்திலாயினும் மேடையில் நேரில் தோன்றினுலும் கடுமையான சர்ச்சைகளில் ஈடுபடும்போதும் வாசகர்களுக்கு அல்லது நாடகத்தை நேரில் பார்ப்பவர்களுக்கு விலாப் புடைக்கச்

சிரிப்புத்தான் வருகிறது. கோப்புன்னி அச்சன், வைத்திபட்டர், குண்ட மேனன் ஆகியோரை அவர் விவரித்திருப்பது எடுத்துக் காட்டாகும். நஞ்சு கொடுக்கப்பட வேண்டிய ஆளை, வைத்தி பட்டர் தவருகப் புரிந்து கொள்ளும் காட்சி, சாத்து பணிக்கர் அச்சனையும் திருமல்பாத்தையும் ஏமாற்றும் காட்சி, வக்கீல்கள் சந்திக்கும் காட்சி, குண்டன்மேனன் தனக்குத் தெரிந்த சட்டச் சொற்களை ராகவமேனனிடம் சரமாரியாகப் பொரிந்துதள்ளுவது ஆகியவை நகைப்பூட்டும் காட்சிகளாகும். நகைச்சுவை, பரிவு, வெறுப்பு, கோபம் போன்ற பல்வேறு உணர்ச்சிகளையும் ஒரு சில சமயங்களில் பரபரப்பையும் உருவாக்கி சந்துமேனன் தனது வாசகர்களுக்கு ஆர்வம் குன்ருமல் கதையை நடத்திச் செல்கிருர்.

அவர் தனது வாசகர்களைத் தனது நம்பிக்கைக்கு உரியவர் களாகச் செய்து கொள்ளும் முறையே அலாதி. அவர்களிடம் அவர் எதையும் மறைப்பதில்லை. ''கதைத் தலைவிடம் எனக்குள்ள தனிப் பாசத்தின் காரணமாக என் கதையில் எதையும் நான் மூடிமறைக்கக்கூடாது என்று சொல்லிவிட்டு வாசகர்கள் காதில் ரகசியமாக ஒரு செய்தி சொல்கிருர். மாதவனின் கடிதத்தைப் படித்த பிறகு அக் கடிதத்தை இந்துலேகா மூன்று நான்குமுறை முத்தமிடுகிருர் என்பதே அச்செய்தி. பல்வேறு சமயங்களில் சந்து மேனன், கதையின் போக்கைச் சட்டென நிறுத்திவிட்டு, வாசகர் களைப் பார்த்து அவர்களுக்கு முக்கியமான தகவல் கொடுக்கிருர். வாசகர்களிடமிருந்து எதையும் மறைத்துவைக்கக் கூடாது என்று கவலை கொள்வது போல் உள்ளது அவரது பாவனை. தோளைத் தட்டி, ''நான் சொல்வதைக் கவனி! எனக்கு ஒரு செய்தி தெரியும்'' என்று ரகசியமாக நம் காதில் சொல்வதில்லையா. அதுபோன்று இருக்கிறது சந்துமேனனின் எழுத்து வன்மை.

மலையாள இலக்கியத்தை உருவாக்கியவர்களில் சந்துமேனன் தலை சிறந்த ஓர் இடத்தை வகிக்கிருர். முழு நாவல் ஒன்றையும் முற்றுப் பெருத நாவல் ஒன்றையுமே அவர் படைத்தார் என்பது உண்மை. எனினும் இவ்விரண்டு படைப்புகளும் அவரது தனி ஆற்றலுக்கும் தனிப்பட்ட சிந்தனைத் திறனுக்கும் எடுத்துக் காட்டு களாகும். தமது நாவல்களுக்கு அவர் எடுத்துக் கொண்ட கருப் பொருள், கதையை அவர் எடுத்துச் செல்லும் விதம், கையாளும் நடை ஆகியவை மலையாள நாவல் இலக்கிய வரலாற்றிலேயே ஒரு புதுமையான வண்ணக் கலவையாகும். மக்களுக்கு அது மிகவும் பிடித்திருந்தது. கதை எழுதுவதில் எவ்விதப் பயிற்சியும் பெருமல் எவ்வித முன் அனுபவமும் இன்றி, பொழுது போக்காக அவர் இந்துலேகாவைப் படைத்தது விந்தையிலும் விந்தை. இந்த நாவல் மக்கள் விரும்பிப் படித்த, மிகச் சிறந்த நாவல்களில் ஒன்ருக ஆகியது. தலைசிறந்த அறிஞர் ஒருவரால்தான் இத்தகைய சாத

னையைச் செய்ய முடியும். இந்துலேகாவுக்கு நிகரான நாவல் எதுவுமே இல்லை என்று இன்று கூடத் திறனாய்வாளர்கள் கூறு கின்றனர். ''அவர் சாரதாவை மட்டும் முடித்திருந்தால்''? என்று சிலர் ஏக்கத்தை வெளியிடுகின்றனர். ''முடிவுறா நிலையிலேயே சாரதா இவ்வளவு நன்றாக இருக்கின்றது. முழுவதும் முடிக்கப்பட் டிருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! இந்துலேகா, வெண்மதி ஒளி போன்று தண்ணொளி பரப்பினால், சாரதா, முழுமதி போன்று தரள நிலவொளியைப் பொழிந்திருக்கும்'' என்று சாகித்ய சக்ரவர்த்தி என்று சொல்லப்பட்ட கேரள வர்மா வலிய கோயில் தம்புரான் கூறியுள்ளார்.

அக்காலத்திய வாழ்க்கை நிலையை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது போன்று எழுதக் கூடிய திறமை சந்துமேனனுக் கிருந்தது பற்றி நாம் முந்திய அத்தியாயத்தில் குறிப்பிட்டிருந் தோம். நாயர் தரவாடுகள், அவர்களது இல்லங்கள், மக்கள், அவர்கள் அன்றாட வாழ்க்கை, அவர்களது ஆடை அணிகலன்கள் அவர்களது பிரச்சினைகள், அவர்களில் ஒருவருக்கு ஒருவர் உள்ள உறவு ஆகியவை பற்றித் தெளிவாக எடுத்துச் சொல்லியுள்ளார்.

அதே போன்று, அக்காலத்திய வாழ்க்கையைச் சந்துமேனன் சுவை குன்றாமல் எடுத்துரைக்கிறார். மேலும் மலபார் இலக்கிய சமுதாய உலகில் வரப்போகும் நிகழ்ச்சிகளை முன்கூட்டியே அறிவிக் கின்றார். இந்துலேகாவுக்கு இலக்கிய உலகில் ஏற்பட்ட மிக உன்னதமான வெற்றி, நல்ல நாவல்கள் இலக்கிய உலகில், கவிதை களோடு போட்டியிட முடியும் என்பதை பறை சாற்றியது. மலையாள நாவல்களுக்குப் புதியதோர் உயரிய நிலையையே வாங்கிக் கொடுத்தார் சந்துமேனன்.

சமுதாயத்தைப் பொறுத்தவரையில், நாயர் தரவாடுகளில் நம்பூத்ரிகளும் காரணவர்களும் செலுத்தி வந்த ஆதிக்கம் நீண்ட நாள் நிலைத்திருக்க முடியாது என்பதையும் இந்த நாவல் கோடி யிட்டுக் குறித்துக் காட்டுகின்றது. கல்வியறிவு பெற்ற நாயர் பெண்கள், குறிப்பாக மேனன் சொல்வது போல் ஆங்கிலக் கல்வி யறிவு பெற்ற நாயர் பெண்கள், ஒழுக்கங்கெட்ட நம்பூத்ரிகளின் சுரண்டலுக்கும் அவர்கள் செய்த அவமதிப்புக்கும் குனிந்து கொடுக்கமாட்டார்கள். சூரி நம்பூத்ரி இந்துலேகாவிடம் காதல் மொழி பேச வருகிறார். இந்துலேகா, காலம் காலமாகச் சொல் லப்படும் சொற்களைச் சொல்ல வேண்டுமாயின், ''தங்கள் அடிமை அப்பொழுது கீழ்த்தளத்தில் இல்லை'' என்று சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அவள் சொன்ன முதல் சொற்கள்'' ''நான் அப்பொழுது கீழ்த்தளத்தில் இல்லை'' என்பதுதான். அவள் போன்ற பெண்ணுக்கு, அவர் போன்ற நம்பூத்ரியிடம் அக்கறை யில்லை என்பதை அவள் சொல்லாமல் சொல்கிறாள். அவர்கள்

சந்தித்தாலும் அடிமைத்தனமான உறவு பற்றிய பிரச்சினையே யில்லை என்பதையும் அவள் தெளிவாக்குகிறாள். ''தன்னிடம் நான் என்று தன்மையில் இந்துலேகா துணிச்சலுடன் பேசியதைக் கேட்டவுடன் நம்பூத்ரிக்கு மூச்சே நின்று விட்டது. ஏனென்றால் எந்த நாயர் பெண்ணும் அவரிடம் அவ்வளவு மரியாதைக்குறை வாகப் பேசியதில்லை'' என்று சந்துமேனன் எழுதுகிறார். பின்னால் இதைப் போன்ற நிகழ்ச்சிகள் பல வந்தன. நம்பூத்ரியின் கண் களைக் காமவெறி மறைத்தது. துள்ளிக் குதித்தார் அவர். நிறுத்துங்கள் இந்த முட்டாள்தனத்தை. என்னுடைய உயிர் உள்ளவரையில் நான் உங்களுக்கு மனைவியாக மாட்டேன்'' என்று துணிவுடன் கூறுகிறாள் இந்துலேகா. பதினெட்டே வயதான இந்துலேகா, சூரி நம்பூத்ரிபாத்துக்குக் கொடுத்த அடி, காமத்தால் கண்ணிழந்த நம்பூத்ரிகளுக்குக் கற்றறிந்த நாயர் பெண்கள் எல்லோரும் கொடுக்கும் அடியாகும்.

காலம் காலமாக அனுபவித்து வந்த ஆதிக்கத்தின் பிரதிநிதி யான பஞ்சுமேனன் புதிய சவால்களை, மாதவன், இந்துலேகா கொடுத்த அறைகூவல்களை ஏற்கவேண்டியிருந்தது. ''இந்துலேகா வை இந்தப் போக்கிலிக்கு ஒரு நாளும் திருமணம் செய்து கொடுக்க மாட்டேன்'' என்று கதையின் தொடக்கத்தில் பஞ்சுமேனன் கூக்குரலிடுகிறார். இங்கு பழைய ஆதிக்க வெறி எக்காளமிடு கிறது. கதையின் முடிவில் அவரே இந்துலேகாவிடம் பரிவுடன் சொல்கிறார் ''இப்பொழுது நீ வருத்தமாக இருக்க வேண்டிய அவசியமேயில்லை. மாதவன் வந்து சேர்ந்ததும் உன் திருமணம் நடக்கும்''. பழையன கழிதலும் புதியன புகுதலும் இயற்கையின் விதி. இளைய தலைமுறை புரட்சிக் கொடியை உயர்த்துகின்றது. புதிய சுதந்திர சமுதாயம் பிறக்கின்றது.

சிறந்த நாவலாசிரியர் என்பவர் எப்படி யிருக்க வேண்டும்? சிறந்த நாவலாசிரியருக்கு இருக்க வேண்டிய தன்மைகளை இந்நிலை யில் பகுத்தறிய முயற்சி செய்வது நலமாக இருக்கும். முதல் தேவை கூர்ந்தறியும் ஆற்றல். இது அவருக்கு இயற்கையாக உள்ள ஆற்றலாக இருக்கலாம் அல்லது பயிற்சியினால் பெற்ற தகுதியாகவும் இருக்கலாம். அவர் கண்கள் ஆற்றல் நிறைந்த கண்களாக, பெரிய நிகழ்ச்சிகளாயினும் சிறிய நிகழ்ச்சிகளாயினும் முக்கியமானவையாயினும் முக்கியமற்றவையாயினும் எதை யும் கூரிய பார்வையுடன் அளந்தறியும் திறன் உடைய கண்களாக இருத்தல் வேண்டும். எழில் பூத்த பம்பாய் துறைமுகம் போன்ற காட்சியையும் அக்கண்கள் கண்டு ரசித்து அதில் உள்ள எல்லா விவரங்களையும் குறித்துக் கொள்ள வேண்டும்; வைத்திப் பட்டர் கண்களில் திடீரென தோன்றி மறையும் ஒளி, அல்லது பஞ்சு மேனன் ஏளனத்திற்குச் சிறுவன் கோபாலன் தெரிவிக்கும் எதிர்ப்பு,

அல்லது பெரியவர்களிடையே நிலவும் பகைமை, காதலர்களி டையே தென்றலாக வீசும் அன்பு, போக்கிலிகளின் கயமைத்தனம் போன்ற பல்வேறு நிகழ்ச்சிகளை யெல்லாம் ஊடுருவிப் பார்த்து, குறிப்பெடுத்துக் கொள்ளும் ஆற்றல் வாய்ந்தவையாகக் கலைஞனின் கண்கள் இருக்க வேண்டும்.

கண்கள் பார்த்தவை நினைவில் பசுமையாக இருக்க வேண்டும்; நிழற்படம் பிடித்தாற் போல நினைவு இருக்க வேண்டும். கண்கள் நிழற்படம் பிடிக்கும் கண்களாகச் செயல்படவேண்டும். நினை வாற்றல் இல்லையெனில், பயனில்லை. பார்த்தவை மனதிலிருந்து அழிந்துவிடும். நினைவாற்றல் இருந்தால், கதை உருவாவதற் கான கருப்பொருள் தயாராகிக் கட்டி வைக்கப்படுகிறது. எழுத் தாளர் தமக்கு வேண்டும் போது இக் கட்டிலிருந்து தமக்கு வேண்டிய கருப்பொருளை எடுத்துக் கொள்ளலாம். கண்களின் இந்த நுண்ணிய உணர்ச்சி எழுத்தாளரின் உள்ளத்தில் உணர்ச்சி அலைகளை உருவாக்கி, அவர் தமது உணர்ச்சிகளை எழுத்தில் வடித்து படிப்பவர்களுக்கும் அந்த உணர்ச்சியை ஊட்டுகின்றார். அதனால் நாவலிலும் விறுவிறுப்பு ஏற்படுகிறது. இந்த உணர்ச்சி வேகம் கதையில் ஏறவேண்டுமாயின், அவர் நிகழ்ச்சிகளில் பங்கேற்பவ ராக மாறி, பாத்திரங்களுடன் ஒன்றிவிட வேண்டும்.

பிறகு அவர், தாம் சேகரித்து வைத்த கருப்பொருள் களஞ்சி யத்திலிருந்து தமக்கு வேண்டிய கருப்பொருளை எடுத்துச் சரி யான இடத்தில் பொருத்தி, அழகான கதை ஒன்றை உருவாக்கு கிறார். கட்டிடக் கலைஞரின் திறன் ஒவ்வொரு அறை, சாதனம் ஆகியவற்றின் தரத்தில் மட்டுமல்ல, கட்டிடத்தின் முழுத்தோற் றத்திலும் அவருடைய திறன் வெளிப்படுகிறது அல்லவா? அதே போன்று சிறந்த நாவலாசிரியரின் திறமை ஒவ்வொரு காட்சியில் மட்டுமல்ல, கதையை உருவாக்கும் மொத்த கருத்தையும் சார்ந்த தாகும். கருப்பொருளைத் தெரிந்தெடுத்து, தகுந்த இடத்தில் பயன்படுத்துவதற்குப் பற்றற்ற உள்ளப் பாங்கு ஏற்பட வேண்டும்.

சிறந்த நாவலாசிரியர் ஒருவருக்குத் தமது கதைக்கான கருப் பொருளிடம் பற்றும் வேண்டும்; பற்றற்ற மனப்பான்மையும் வேண்டும். அவர் கதையில் ஒன்றியும் இருக்க வேண்டும். வெளியே நின்று பார்ப்பவராகவும் இருக்க வேண்டும். இறைவன் நம் உள்ளேயும் இருக்கிறான்; வெளியேயும் இருக்கிறான் என்று கீதை போன்ற நம் சமய நூல்கள் சொல்கின்றன. தமது நாவலைப் பொறுத்தவரையில் நாவலாசிரியர் நிலையும் அதுதான். அவர் தமது படைப்பினுள்ளேயும் இருக்கிறார்; வெளியேயும் இருக்கிறார்.

தமக்குத் தெரிந்ததை—தாம் எண்ணுவதை வாசகர்களுக்குத் தெளிவாகவும் செவ்வையாகவும் தெரிவிக்கும் திறன் நாவலாசி ரியருக்கு இன்றியமையாததாகும்.

நாநலம் என்னும் நலனுடைமை அந்நலம்
யாநலத்து உள்ளதூஉம் அன்று

என்பது பொய்யா மறைவாக்கு. சொற்களுக்கு அத்தகைய வன்மை உண்டு. அவை பளிச்சென ஒளிவிடக் கூடியவை: கிளர்ச்சி யூட்டக் கூடியவை; அல்லது சுடும் ஆற்றலுடையவை; தம் ஆற்றலினால் நம் கண்முன்னே நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டக்கூடிய—இசையை நம் செவிகளில் விழச் செய்யக் கூடிய வன்மையுடையவை. ஒவ்வொரு சமயத்திற்கும் இடத்திற்கும் சரியான சொல் ஒன்று உள்ளது.

திறனறிந்து சொல்லுக சொல்லை. ஜீன்பால் அவர்களால் ''நமது காலத்திய தலைசிறந்த எழுத்தாளர்'' என்று கருதப்படும் ஜான் டாஸ் பாஸோஸ், எழுத்தாளரின் பணியைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார். ''தாம் தெளிவாகப் பார்த்து அறிந்து கொள்ள வேண்டும்; பார்த்து அறிந்து கொண்டதைத் தெளிவாக எழுத வேண்டும் இந்த வையத்தில் உள்ள எழுத்துத் திறமையை எல் லாம் ஒன்று சேர்த்தாலும், தாம் கண்டறிந்ததைத் தெளிவாக எழுதுவது என்பது எவ்வளவு கடினமாக உள்ளது!''

சந்துமேனன் எழுதியுள்ள கதைகளில் வரும் நபர்கள், காட்சிகள், கதையின் போக்கு ஆகியவற்றை நினைவில் வைத்துள்ள வாசகர்கள், சந்துமேனன் நல்ல நாவலாசிரியருக்கான தகுதிகளைப் பெற்றுள்ளார் என்பதையும் திறனறிந்து சொல்லும் உரன் அவருக்கு நிறைந்து இருந்தது என்பதையும் ஒப்புக் கொள்வர். அவருடைய புகழ் எந்த அளவுக்குப் பரவியிருந்தது என்பதற்கு ஓர் எடுத்துக் காட்டு. கேசரி வெங்கயில் குன்ஹிராமன் நாயனார் என்பவர் புகழ்பெற்ற மலையாள எழுத்தாளர். அவர் ஒரு முறை சந்து மேனனிடம் சொன்னார் ''உங்கள் வாழ்நாளில் நாவல் எழுத எங்கள் யாருக்கும் துணிவு கிடையாது''.

சந்துமேனன் தனது ஐம்பத்திரண்டாவது வயதில் காலமானார். அவரது காலத்திற்குப் பின்னர் முக்கால் நூற்றாண்டு ஓடிவிட்டது. வரலாறு காணாத மாற்றங்கள் இக்கால அளவில் நேர்ந்துள்ளன. எனினும் அவரது பேரும் புகழும் மறையவில்லை. அவரது இந்து லேகாவைப் படிப்பவர்கள், தங்களை மகிழ்விக்கும் எழுத்தாளர் என்ற முறையில் மட்டுமல்லாமல் வேடிக்கைப் பேச்சுகளையும் ரகசியங்களையும் தங்களுடன் பகிர்ந்து கொள்ளும் உற்ற நண்பன் என்ற முறையிலும் அவரை விரும்பலாம். இந்துலேகா என் றென்றும் அவரது நினைவைத் தாங்கி நிற்கும். இந்நூல் வருங் காலத்திலும் பல இல்லங்களில் மகிழ்ச்சியையும் சிரிப்பையும் கொண்டுவரும். சுரண்டப்பட்டவர்களிடம் அவருக்கு என்றுமே மிகுந்த பரிவு உண்டு. குறிப்பாக, எழுதப்படிக்கத் தெரியாத நிலையில் வைக்கப்பட்ட இந்தியப் பெண்களிடம் அவருக்கு ஆழ்ந்த

அனுதாபம் உண்டு. ஆர்வம் மிக்க சீர்திருத்தவாதி போன்று, அவர், நம்மை நமது உறக்கத்திலிருந்து தட்டி எழுப்புகிறார். இத்தகைய துயரமான நிலையைப் பார்த்தும் நாம் அசட்டையாக இருப்பதைச் சுட்டிக் காட்டுகிறார். காலத்திற்கேற்ற கல்வியைச் சிறுமிகளுக்குக் கொடுக்க வேண்டும் என்று அவர், வலியுறுத்துகிறார். நிகழ் காலத்தை நன்குணர்ந்த அவர், வருங்காலத்தில் இந்தியப் பெண்கள் குறிப்பாக மலபார் பெண்கள் கல்வி அறிவு பெற்று விடுதலை பெறவேண்டும் என்று கனவு காண்கிறார்.

சந்துமேனன் இலக்கியத்திற்குச் செய்த சீரிய பணிகளைப் பின்வருமாறு கூறலாம்: மலையாள இலக்கியம் மறுமலர்ச்சி பெற புதிய, வளமான வாய்ப்பினைக் காண்பித்தார். கவிதைகள் மட்டுமல்லாமல், நாவல்களும் கண்ணியமான — புகழ்மிக்க இலக்கியமாகும் என்ற நம்பிக்கையை அவர் எழுத்தாளர்களுக்குக் கொடுத்தார். சொல்லும் திறனுடன் எளிய நடையும் இருந்தால் எவரும் நாவல்கள் எழுதலாம் என்ற உண்மையை அவரிடமிருந்து தெரிந்து கொண்டனர். இத்தகைய சூழ்நிலை உருவாகியதன் காரணமாக, புதிய எழுத்தாளர்கள் பலர் தோன்றினர். ஆண்டு தோறும் மலையாள நாவல்களின் எண்ணிக்கை அதிகமாகியது. ''இந்துலேகா வெளிவருவதற்கு முன்னர் (1890) உண்மையான மலையாள நாவலேயில்லை; 1892-ல் மலையாள நாவல்களின் எண்ணிக்கை நாள்தோறும் பெருகிக் கொண்டே வருகிறது'' என்று சந்துமேனன் எழுதுகிறார். ஆண்டுகள் செல்லச் செல்ல, மலையாள இலக்கியத்தில் மற்ற பிரிவுகளைவிட நாவல்களுக்கு அதிகச் சிறப்பிடம் கிடைத்தது; எனவே நாவல்களின் எண்ணிக்கையும் பெருகியது. மக்களிடம் செல்வாக்கும் அடையத் தொடங்கியது.

எளிய முறையில் எழுத வல்லவர், எழுதுவதையே தொழிலாகக் கொண்ட எழுத்தாளர்களைவிடச் சிறந்தவர் என்ற பெயர் பெற்றவர்; மலையாள நாவல் எழுதுவதில் புதிய உத்திகளை, மகிழ்விக்கக்கூடிய முறைகளை நமக்குக் காண்பித்தவர்; மலையாள நாவலின் தந்தை; நமது நாட்டின் அறிவுச் சுடர்; சுதந்திரம் பற்றிக் கனவு கண்டவர் என்றெல்லாம் புகழ்மாலை சூடிச் சந்துமேனனுக்கு இந்திய இலக்கிய உலகில் அவருக்குரிய இடத்தை, முன்வரிசையிலே ஓர் இடத்தை அவருக்கு அளிப்போமாக.

# குறிப்புகள்

**சந்துமேனன் எழுதி வைத்ததும் மலபார் திருமண முறை பற்றிய ஆணைக்குழு அறிக்கையுடன் இணைக்கப்பட்டதுமான குறிப்பிலிருந்து சில பகுதிகள்.**

மலபாரில் சம்பந்தம் என்ற வைபவத்தில் உள்ளூருக்கு உள்ளூர் வேறுபாடுகள் பற்றியும் சிலவகை சம்பந்தங்களுடன் இணைந்த குறிப்பிட்ட நிகழ்ச்சிகள் பற்றியும் சுருக்கமாகச் சொல்ல விரும்பு கிறேன். வடக்கு மலபாரில் பின் பற்றப்படும் புடமுறை அல்லது வஸ்திரதானம் பற்றி நான் இப்பொழுது குறிப்பிடுகிறேன். ஏனைய சம்பந்தங்கள் மேற்படி முறையினின்றும் எப்படி வேறுபட்டவை என்பதைப் பின்னர் விளக்குகிறேன். சம்பந்த முறைகளிலே புட முறியே வடக்கு மலபாரில் மிகவும் நிறைந்த, மிகவும் நவீனமான முறையாகும். இங்கு நம்முன் கொடுக்கப்பட்டுள்ள சாட்சியம் நான் சொல்வது உண்மை என்பதை மெய்ப்பிக்கும். புடமுறி நிகழ்ச்சியில் தொடக்க நிகழ்ச்சி, சோதிடர் ஒருவர் மணப்பெண், மணப்பிள்ளை ஆகியோரது ஜாதகங்களைப் பரிசீலனை செய்கிறார்; இது பெண் வீட்டில் மணப்பெண், மணப்பிள்ளை ஆகியோரின் உறவினர்களின் முன்னிலையில் நடக்கின்றது. ஜாதகங்களைப் பரி சீலனை செய்த சோதிடர், தனது கணிப்புகளை, பனை ஓலையில் எழுதுகிறார். அந்த சம்பந்தம் பொருத்தமுள்ளதா, அல்லவா என்பது பற்றித் தமது கருத்துக்களையும் அந்த ஓலையில் எழுதி வைக்கிறார். அந்த ஓலை மணப்பிள்ளையின் உறவினர்களிடம் கொடுக்கப்படுகிறது. ''ஜாதகங்கள் பொருந்தினால், திருமணநாள் அங்கேயே உறுதி செய்யப்படுகிறது. அந்த நாள் இரண்டு பனை ஓலைகளில் எழுதப்பட்டு ஓர் ஓலை, மணமகளின் காரணவனிடமும் மற்றொன்று மணப்பெண்ணின் உறவினரிடமும் கொடுக்கப்படு கிறது. ஜோதிடருக்கும் மணப்பிள்ளை வீட்டாருக்கும் பெண் வீட்டில் விருந்தளிக்கப்படுகிறது. சோதிடருக்குத் துணி அல்லது பணம் கொடுக்கப்படுகிறது. இதுதான் தொடக்க நிகழ்ச்சி; வடக்கு மலபாரில் எல்லா புடமுறி நிகழ்ச்சிகளிலும் இது நடக் கின்றது. இதற்கு புடமுறி குறித்தல் என்று பெயர். இப்பழக்கம் தெற்கு மலபாரில் கிடையாது.

புடமுறிக்காக முடிவு செய்யப்பட்டுள்ள நாளுக்கு, மூன்று நான்கு நாட்களுக்கு முன்னர், மணப்பிள்ளை தனது திருமணத்தி

திற்கு முறையாக அனுமதி பெறுவதற்காக தனது காரணவர் களையும் ஏனைய பெரியோர்களையும் சந்திக்கிறார். அத்தகைய சமயங்களில் அவர் பெரியவர்களுக்கு வெற்றிலை, பாக்கு கொடுத்து தமது திருமணத்திற்கு அவர்கள் இசைவைப் பெறுகிறார். திருமண நாளன்று, மணப்பிள்ளை, தமது நண்பர்களுடன் ஆதவன் மேலை வாயிலை அடைந்த பிறகு பெண் வீட்டிற்குச் செல்கிறார். அவர் ஊர்வலமாகச் செல்கிறார். பெண் வீட்டு வாயிலில் அவர் பெண் வீட்டாரால் வரவேற்கப்படுகிறார். வீட்டின் தெக்கினி அல்லது தென்புறக் கூடத்திற்கு அவரது நண்பர்களுடன் அழைத்துச் செல்லப்பட்டு, இருக்கைகளில் அமர்த்தப்படுகின்றனர். அங்கு குழு மியுள்ள அந்தணர்களுக்கு, மணப்பிள்ளை தானங்கள் கொடுக்கிறார். இதன் பின்னர் மிகவும் சிறப்பான விருந்து ஒன்று நடக்கின்றது. இப்பொழுதுதான் சோதிடர் வருகிறார். நிச்சயிக்கப்பட்டுள்ள நேரத்தை அறிவிக்கிறார். அவருக்குரிய தொகையைப் பெற்றுக் கொள்கிறார். பின்னர் மணப்பிள்ளை அவரது நண்பர் ஒருவரால் அந்த வீட்டின் முக்கியமான அறைக்கு அழைத்துச் செல்லப்படுகிறார். மணப்பிள்ளை தரப்பினர், புதிய துணிகளையும் வெற்றிலை பாக்கை யும் கொண்டு வந்திருப்பர். இத்துணிகள், படின்ஹறட்டா என்று அழைக்கப்படும் மேற்குப்புற அறையிலே வைக்கப்படுகின்றன. இந்த அறையில்தான் சமய நிகழ்ச்சிகளும் குடும்பச் சடங்குகள் அனைத்தும் வழக்கமாக நடைபெறும். இந்த அறை அலங்கரிக் கப்பட்டு இந்த வைபவத்திற்காகத் திருமண அறையாக மாற் றப்படும். எரிந்து கொண்டிருக்கும் விளக்குகளும் மாங்கல்யம் அல்லது திருமணத்தைக் குறிக்கும் எட்டுப் பொருள்கள் அடங்கிய அஷ்டமங்கல்யமும் அந்த அறையில் வைக்கப்பட்டிருக்கும். அரிசி, நெல், தென்னை ஓலை, அம்பு ஒன்று, முகம் பார்க்கும் கண்ணாடி, நன்கு சலவை செய்யப்பட்ட துணி ஒன்று, எரியும் தீ, செப்பு என்று சொல்லப்படும் வட்டமான சிறு மரப்பெட்டி ஒன்று ஆகியவையே இந்த அஷ்டமங்கல்யத்தில் அடங்கியுள்ள பொருள் கள். மணப்பிள்ளை அந்த அறையில் நுழையும்போது இப்பொருள் கள் அந்த அறையில் இருக்கும். மணப்பிள்ளை தன் தோழனுடன் அந்த அறையின் கிழக்குவாயில் வழியாக நுழைகிறார். மணப்பெண் அவளது அத்தை அல்லது குடும்பத்தைச் சேர்ந்த மூதாட்டி ஒருவருடன் அந்த அறையில் நுழைகிறாள். மணப்பெண் அழகான ஆடை அணிகளணிந்து காணப்படுகிறாள். மணப்பெண் கிழக்கு நோக்கி அஷ்டமங்கல்யத்துடன் நிற்கிறாள்; தன் முன்னால் உள்ள விளக்குகளை ஏற்றுகிறாள். மாப்பிள்ளைத் தோழன் அதன் பின்னர் புதுத் துணிகளை மணப்பிள்ளையிடம் கொடுக்கிறார். மணமகன் அவற்றை மணமகளிடம் கொடுக்கிறார். மணமகளுடன் வரும் மூதாட்டி, விளக்குகள் மீதும் மணமக்கள் தலையிலும் தோள்

களிலும் அரிசியைத் தூவுகிறார். பின்னர் அந்த அறையினின்றும் வெளியேறுகிறார். மணமகன் தெற்குப்புறமுள்ள கூடத்தில் தமது நண்பர்களுக்கும் பெரியவர்களுக்கும் பிட்டு, வெற்றிலை, பாக்கு ஆகியவற்றைக் கொடுக்கிறார். அங்கு குழுமியிருக்கும் அனைவருக்கும் வெற்றிலை, பாக்கு கொடுக்கப்படுகிறது. விருந்தினர்கள் சென்றவுடன் மணமகன், மணமகளை அழைத்துக் கொண்டு மணவறைக்குள் நுழைகிறார்.

இதுதான் புடமுறி குறித்த உண்மையான விவரம். அடுத்த நாள் காலை வெற்றிலைக்கட்டு, அல்லது சல்கர்ணம் (வெகுமதி யளித்தல்) நடக்கிறது. மணமகனின் உறவுப் பெண்கள் மணமகளை அவள் கணவன் வீட்டுக்கு அழைத்துச் செல்கிறார்கள். அங்கு விருந்து அளிக்கப்படுகிறது.

(கேரள வரலாறு, தொகுதி பக்கம் 270-272)

## 2. சென்னை அரசாங்கம் இந்திய அரசுக்கு அனுப்பிய கடிதத்தின் ஒரு பகுதி

சட்டமியற்றுமாறு பரிந்துரைத்து சென்னை அரசாங்கம், இந்திய அரசுக்கு எழுதிய கடிதத்தில், மலபாரில் திருமணம் குறித்து நிலவிவந்த பழக்க வழக்கங்கள் பற்றி எழுதுவதாவது:—

''இதனைச் சுருக்கமாகக் கீழ் வருமாறு குறிப்பிடலாம் என்று அரசுக்குத் தோன்றுகிறது. மருமக்கள் தாயம் சட்டத்தினால் முறைப்படுத்தப்படுகின்ற வகுப்பினர், திருமணத் தொடர்பு கொள்கின்றனர். அத் தொடர்பு தொடங்கும் சமயத்தில் மண மகன், அல்லது மணமகள் ஆகியவர்களில் எவராவது ஒருவர் இறக்கும் வரை நிலையாக இருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் செய்து கொள்ளப்படுகிறது. பெரும்பான்மையான சம்பந்தங்கள் நிலையாக நிற்கின்றன. இத் தொடர்புகள் வெளிப்படையாகவே செய்து கொள்ளப்படுகின்றன; சமுதாயத்தில் அவை ஏற்கப்படு கின்றன. சம்பந்தத்தின் போது ஒரு சில சடங்குகள் நடைபெறு கின்றன. அவை சமயச் சார்பற்றவை; ஆனால் அவை திருமணச் சடங்குகளாகவே கருதப் படுகின்றன. பிற இடங்களில் திருமணச் சடங்குகள் எவ்வாறு மதிக்கப்படுகின்றனவோ அவ்வாறே இவை யும் மதிக்கப்படுகின்றன.

(கேரள வரலாறு, தொகுதி பக்கம் 291-292)

## நூற்குறிப்பு

| மலையாள நூல்கள் | ஆசிரியர் பெயர் |
| --- | --- |
| ஒய்யாரத் சந்துமேனன் .. .. .; | மூர்கோத் குமரன் |
| நாவல் சாகித்யம் .. .. .. .. | பால் எம். பி. |
| மலையாள சாகித்ய சரித்திரம் .. .. .. | பரமேஸ்வரன் நாயர் |
| சந்துமேனன் .. .. .. .. | பாலகிருஷ்ணன் |
| இந்துலேகா .. .. .. .. | சந்துமேனன் |
| சாரதா .. .. .. .. | சந்துமேனன் |

## ஆங்கில நூல்கள்

| | |
| --- | --- |
| இந்துலேகா .. .. .. .. | டூமெர்க் |
| கேரள வரலாறு .. .. .. .. | பத்மனுப மேனன் |

## இந்திய இலக்கியச் சிற்பிகள்

**இந்த வரிசையில் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்கள்:**

1. **லட்சுமிநாத பெஸ்பருவா**
—ஹேம்பருவா
தமிழ்: க. த. திருநாவுக்கரசு
2. **கபீர்**
—பிரபாகர் மாச்வே
தமிழ்: தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்
3. **கேசவஸுதர்**
—பிரபாகர் மாச்வே
தமிழ்: ராம கோபிநாதன்
4. **ஈசுவர் சந்திர வித்யாசாகர்**
—ஹிரண்மய் பானர்ஜி
தமிழ்: ராம கோபிநாதன்
5. **ராஜா ராம் மோகன் ராய்**
—சௌமியேந்திரநாத தாகூர்
தமிழ்: க. த. திருநாவுக்கரசு
6. **பிரேம்சந்த்**
—பிரகாஷ் சந்திர குப்தா
தமிழ்: சரஸ்வதி ராம்நாத்
7. **குமாரன் ஆசான்**
—கே. எம். ஜார்ஜ்
தமிழ்: கே. சி. சங்கரநாராயணன்
8. **தாரு தத்**
—பத்மினி ஸென்குப்தா
தமிழ்: அ. சீனிவாச ராகவன்
9. **வீரேசலிங்கம்**
—வி. ஆர். நார்லா
தமிழ்: நா. பார்த்தசாரதி
10. **ஸ்ரீ அரவிந்தர்**
—மனோஜ்தாஸ்
தமிழ்: பி. கோதண்டராமன்
11. **மீராபாய்**
—உஷாநில்சன்
தமிழ்: எஸ். கந்தசாமி 'துறைவன்'
12. **வேமனர்**
—வி. ஆர். நார்லா
தமிழ்: ந. சுப்பு ரெட்டியார்
13. **B. M. ஸ்ரீகண்டய்யா**
—A. N. மூர்த்தி ராவ்
தமிழ்: இரா. மதிவாணன்
14. **சந்துமேனன்**
—டி. ஸி. சங்கரமேனன்
தமிழ்: கு. இராஜவேலு

**ஒவ்வொரு நூலும் ரூ. 2-50**